# அடிப்படை அரசியல் கோட்பாடுகள்

(FUNDAMENTAL PRINCIPLES OF POLITICAL SCIENCE)

ஞா. வேர்ஜின் சிகாமணி



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண்: 788

# அடிப்படை அரசியல் கோட்பாடுகள்

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

ஞா. வெர்ஜின் சிகாமணி, எம். ஏ.,
விரிவுரையாளர், அரசியல் துறை,
மதுரைப் பல்கலைக்கழகம்,
மதுரை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—February, 1978

Number of Copies—2000

T.N.T.B.S. (C. P.) No. 788

© Government of Tamilnadu

**FUNDAMENTAL PRINCIPLES OF POLITICAL SCIENCE**

G. VIRGIN SIGAMANI

**Price Rs. 5-10**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
N. L. R. C. Press
48/30, North Usman Road,
Madras-17. T.Nagar.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினேழாண்டு கள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழ்லேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர் களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற் கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற் றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறை வும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர் களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சி யைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சி யைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணித வியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான அடிப்படை அரசியல் கோட்பாடுகள் என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **788** ஆவது வெளி யீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல் களையும் சேர்த்து இதுவரை **823** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும் அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்த தாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவி களுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக!

செ. அரங்கநாயகம்

# பொருளடக்கம்

## முதற் பகுதி: அரசியல் கோட்பாட்டியல்

## இரண்டாம் பகுதி : அரசியல் நிறுவனங்கள்

பாகம் I — அரசியல் கோட்பாட்டியல்

# 1. பொதுக் கண்ணேட்டம்

## அரசியலின் பொருளும் பாட விளக்கமும்
## (Meaning and Scope of Political Science)

கிரேக்க அரசியல் மேதை அரிஸ்டாட்டில் கருதுவது போலவே மனிதன் ஒரு சமூகப் பிராணியாவான். அவன் குடும்பத்தில் பிறந்து சமூகத்தில் வாழ்கிருன். அவனுக்குத் தனித்து வாழும் சக்தி கிடையாது. எனவேதான் அவன் மற்ற வர்களுடன் தொடர்பு கொண்டு வாழ்கிருன். அவனுடைய தேவைகள் ஏராளம். மற்றவர்களுடைய உதவியின்றி ஏதேச்சை யாக அவனுல் எந்தத் தேவையையும் பூர்த்தி செய்து கொள்ள முடிவதில்லை. ஆகவேதான் மனிதன் சமூகத்தில் கூடி வாழ வேண்டியதாயிற்று. இவ்விதம் மனிதன் சமூகத்தில் வாழுங்கால் தன்னுடைய விருப்பு வெறுப்புகளைத் தன்னுடன் வாழும் ஏனைய மனிதர்களின் சௌகரியங்களுக்கு ஏற்ப சரி செய்துகொள்ள வேண்டிய நிலை ஏற்படுகிறது. சமூகத்தில் கூடிவாழ்கின்றவர் களிடையே ஏற்படுகின்ற பலவிதமான தொடர்புகளை ஒழுங்கு படுத்தச் சட்டதிட்டங்கள் தேவைப்படுகின்றன. மனிதனின் நடத்தையை ஒழுங்குபடுத்தத் தேவைப்படும் இந்தச் சட்ட திட்டங்களை ஏற்படுத்தவும் அவைகளை அமலாக்கவும் ஓர் அமைப்பு தேவை. இந்த அமைப்பை அரசாங்கம் என்போமானுல் அரசாங்கத்தைப் பெற்ற ஒரு சமூகத்தை அரசு எனலாம். ஒவ்வோர் அரசிலும் அரசாங்கம் முக்கிய இடத்தைப் பெற்று உள்ளது. ஒவ்வோர் அரசாங்கமும் சட்டத்தை இயற்ற ஒரு சட்ட மன்றத்தையும், சட்டங்களை அமலாக்க ஓர் ஆட்சித் துறையை யும், சட்டங்களை மீறுபவர்களைத் தண்டிக்க ஒரு நீதித்துறையை யும் பெற்று விளங்கும். மனிதன் அரசோடும் அது ஏற்படுத்திய அரசாங்கத்துடனும் கொண்டிருக்கும் தொடர்புகளை ஆராயும் நூல் 'அரசியல்' என்று அழைக்கப்படுகிறது. இலக்கணமாகக் கூறினுல், 'அரசியல் என்பது நாகரீகம் அடைந்த ஒரு சமூகத்தின் அரசாங்கம், அடிப்படைச் சட்டம், மக்கள் ஒருவ ரோடு ஒருவர் கொண்டுள்ள தொடர்புகள், அவற்றை வகுத்துக் காக்கும் நியதிகள், சமூக நிலைகள், அவற்றின் குறிக்கோள்கள் என்பனவற்றைப்பற்றிக் கூறும் அறிவுத் துறையாகும்'.

அரசியல், அரசு, அரசாங்கம், அவை தரும் பயன் சார்பாகத் தோன்றும் எண்ணற்ற பிரச்சினைகளை ஆராய்ந்து முடிவு காணும் ஓர் ஒப்பற்ற நூல். அரசியலைச் சிறப்புப் பாடமாகப் பயிலுகின்றவர் அரசாங்க முறைகளையும், அவை கொண்டுள்ள பிரிவுகளையும், அவை இயங்கும் முறைகளையும்பற்றித் தெரிந்துகொள்கின்றனர். அரசினுடைய தோற்றுவாய், பரிணமம், இயல்புகள், அரசாங்க முறைகள், சட்டமன்றம், ஆட்சித்துறை, நீதிமன்றம் ஆகிய அரசாங்கத்தின் பிரிவுகள் செயல்படும் விதம்பற்றியும் சட்டம், தனி மனிதனின் உரிமைகள், கடமைகள் பற்றியும், தலசுய ஆட்சி நிறுவனங்கள், அரசியல் கட்சிகள், சர்வதேச நிறுவனங்கள் நாட்டிடை உறவுகள்பற்றியும், பொதுக் கருத்து போன்ற சிறப்பான அடிப்படை உண்மைகள் பற்றியும் அரசியல் என்னும் நூல் நமக்குப் போதிக்கிறது. சுருங்கக் கூறின், அரசியல் அரசு எப்படி இருக்கிறது, எப்படி இருந்தது, எப்படி இருக்க வேண்டும் என்கிற மூன்று நிலைகளில் தனது ஆராய்ச்சியை மேற்கொள்கிறது. அதாவது அரசியல், அரசின் வரலாற்றை ஆராய்ந்து மக்கள் எவ்வாறு சட்டதிட்டத்திற்காகத் தங்களை அரசியல் ரீதியில் வகுத்துக் கொண்டனர் என்பதனையும், அரசு தற்காலத்தில் எவ்விதம் இயங்கி வருகிறது என்பதனையும், அது எவ்விதம் செயல்படவேண்டும் என்பதனையும் விளக்குகிறது.

அரசியல் பாட விளக்கம் பொதுவாக 'அரசியல் கோட்பாடு,' 'அரசியல் நிறுவனங்கள்,' என்ற இரு பகுதிகளையும் பெற்று விளங்கும். அரசியல் கோட்பாடு என்னும் பகுதி அரசின் தன்மை, பரிணமம், இறுதிப் பயன் ஆகியவை தொடர்பான எல்லா வகைக் கோட்பாடுகளையும் ஆராய்வதாய் உள்ளது. 'அரசியல் நிறுவனங்கள்' என்னும் பகுதி அரசின் சட்ட திட்டங்களைச் செயலாக்கிக் குறிக்கோள்களை நிறைவேற்றுகின்ற அரசாங்க அமைப்பினை ஆராய்வதாய் உள்ளது.

அண்மையில் அரசியல் ஆராய்ச்சியாளர்கள் அரசியல் பாட விளக்கத்தை விரிவுபடுத்தி அரசியல் கோட்பாடுகள், அரசியல் நிறுவனங்கள், அரசியல் கட்சிகள், சர்வதேசத் தொடர்புகள் என்ற முக்கியப் பிரிவுகளை வரையறுத்துள்ளனர். 'அரசியல் கோட்பாடுகள்' என்னும் பிரிவு அரசியல் கோட்பாடுகளின் வரலாறு, அரசியல் கருத்துகள் ஆகியவைகளை ஆராய்கின்றது. 'அரசியல் நிறுவனங்கள்' என்னும் பிரிவு, அரசியல் அமைப்புகள், தேசீய அரசாங்கம், மாநில அரசாங்கம், தல சுய ஆட்சி நிறுவனங்கள், பொது நிருவாகம், அரசாங்கத்தின் பொருளாதார சமூகக் கடமைகள், அரசியல் நிறுவனங்களின் ஒப்புமை வேற்றுமை ஆகியவைகளை ஆராய்கின்றது. 'அரசியல் கட்சிகள்'

என்னும் பிரிவு, அரசியல் கட்சிகள், சங்கங்கள், நெருக்கக் குழுக்கள், நிருவாகமும் குடிமக்களின் பங்கும், பொதுக் கருத்து ஆகியவை பற்றி ஆராய்கிறது. 'சர்வதேசத் தொடர்புகள்' என்னும் பிரிவு நாட்டிடை அரசியல் சர்வதேச அமைப்புகள், அவைகளின் நிருவாகம், குறிக்கோள்கள், சர்வதேசச் சட்டம், உலக மக்கள் கருத்து ஆகியவைகளை ஆராய்கிறது.

## அரசியல் ஓர் அறிவியலா?
## (Is Political Science a Science?)

அரசியல் ஓர் அறிவியலா அல்லது அறிவியலுக்குப் புறம்பான ஓர் அறிவுப் பகுதியா என்கிற ஆராய்ச்சியில் அரசியல் மேதைகளிடையே ஏகமனதான முடிவு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. மாபெரும் அரசியல் மேதை அரிஸ்டாட்டில் அரசியலை மேன்மையானதோர் அறிவியலாகக் கருதினர். ஆனல் ஜெல்லனிக், ஜேனட், சிட்ஜ்விக் போன்ற அரசியல் வல்லுனர்களோ அரசியலை ஓர் அறிவியல் என்னும் கருத்துக்குத் தீவிர எதிர்ப்புத் தெரிவித்துள்ளனர். அரசையும் அரசாங்கத்தையும் அறிவியல் முறையில் பயில முடியாது என்பதே அவர்களுடைய அபிப்பிராயமாகும். அவர்களுடைய எதிர்ப்புக்கு ஆதரவாகக் கீழ்க்காணும் காரணங்களைக் குறிப்பிட்டுள்ளனர்:

(i) முடிவான கோட்பாடுகளின்மை (Absence of Precise Principles)

அரசியல் நோக்கம், அரசியல் இலக்கணம், அரசியல் கோட்பாடுகள், அரசியல் நடைமுறைகள் ஆகியவைகளின் மீது அரசியல் அறிஞர்களுக்குக் கருத்து வேற்றுமை உள்ளது. அரசியலை ஆராய்வதற்கென அறிவியலில் காணப்படுவது போன்று பொதுவான வழிமுறைகள் எதுவும் அரசியலில் இல்லை என்றே கூற வேண்டும். மேலும் அரசியல் கோட்பாடுகள் எல்லாம் எல்லோராலும் ஏகமனதாக ஒப்புக்கொண்டவைகளாக இல்லை. உதாரணமாக, உரிமைகளையும் கடமைகளையும் பற்றிய அரசியல் கோட்பாடுகள் அரசியல் அறிஞர்கள் யாவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டவையல்ல. ஒத்த சொற்களின்மை, துல்லியமான முடிவுகளின்மை, அவைகள் மீது அறிஞர்களுக்குத் தோன்றும் கருத்து வேற்றுமைகள் போன்ற குறைபாடுகள் அரசியலை அறிவியலுக்கு அப்பாற்பட்டதாகக் கருதச் செய்துவிடுகிறது. உதாரணமாக, ஜனநாயகம் என்னும் சொல்லுக்கு ஒரே விதமான மாறுபடாத துல்லியமானதோர் இலக்கணம் வரையறுக்கப்படவில்லை. ஜனநாயகத்திற்குப் பலரும் பல்வேறுபட்ட பொருள் தரும் பல வகையான இலக்கணங்களை வகுத்துக் கூறியுள்ளனர். இவர்கள் கூறிய இலக்கணங்கள் யாவும் ஒன்றுக்கொன்று முரண்

பாடுடைத்தாய்க் காணப்படுவதால் அவை அரசியல் ஆராய்ச்சி யாளர்களுக்கும் சாதாரண மக்களுக்கும் பெரும் குழப்பத்தை விளைவிக்கின்றன. முறையானதோர் அறிவியல் என்றால் அதன்கண் காணும் ஒவ்வொரு சொல்லுக்கும் ஒரேவித மான பொருள்தான் காண முடியும். அதனால் ஓர் அறிவியலைப் பயிலுகின்றவர்களுக்குக் குழப்பமோ சந்தேகமோ எழுவதற்கு வாய்ப்பில்லை.

(ii) துல்லியமின்மை (Lack of Precision)

அரசியல் கோட்பாடுகளில் துல்லியமின்மையும் தெளி வின்மையும் காணப்படுவதால், யாவரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஓர் ஆராய்ச்சி அணுகுமுறையைக் கையாள முடியவில்லை. மேலும் அரசியலில் துல்லியமான முடிவுகளைப் பெற வாய்ப்பில்லை. வேதியியல், பௌதிகம், கணிதம் போன்ற அறிவியல்களில் காணப்படும் ஒரு சூத்திரம் ஏறக்குறைய எல்லோரும் ஒப்புக் கொண்ட ஒரு சூத்திரமாகவே உள்ளது. அந்தச் சூத்திரத்தின்மீது சாதாரணமாகச் சந்தேகம் எதுவும் எழுவதில்லை. ஆனால், அரசியலில் அத்தகைய சூத்திரங்கள் எதுவும் இல்லை. எனவே, அரசியலை அறிவியல் என்று கூற முடியாத நிலை ஏற்படுகிறது. உண்மையான அறிவியலில் சந்தேகத்தை உண்டுபண்ணும் கோட்பாடு எதுவும் இராது. ஆனால், அரசியலில் காணப் படும் கோட்பாடுகளோ பெரும்பாலும் அரசியல் ஆராய்ச்சியாளர் களிடையே பலவிதமான ஐயப்பாடுகளை ஏற்படுத்தித் துல்லிய மான முடிவுகளைப் பெற வாய்ப்பில்லாம லாக்கிவிடுகின்றன.

(iii) மெய்ப்பொருள் தொடர்பு (Human being figure)

வேதியியல், பௌதிகம் போன்ற அறிவியல்களில் ஆராய்ச்சி யாளர்கள் உயிரற்ற ஜடப்பொருள்களை வைத்துத் தங்களுடைய ஆராய்ச்சியை மேற்கொள்கின்றனர். ஆனால், அரசியல் ஆராய்ச்சி யாளர்களோ, மாறுகின்ற மனநிலையை உடைய மனிதர்களை வைத்துத் தங்களுடைய ஆராய்ச்சியைச் செய்கின்றனர். மனிதனு டைய உள்ளத்து உணர்ச்சிகளும் அவைகளால் உந்தப்பட்டு அவன் செய்கின்ற செயல்களும் நேரத்திற்கு நேரம் மாறக்கூடி யவை என்பதால், அவைகளைச் சோதனைகளின் மூலமாக நிர்ணயிக்கவோ அல்லது விளக்கவோ முடியாத நிலை ஏற்படு கிறது. ஓர் இரசாயனச் சோதனை என்றால் அதைக் குறிப்பிட்ட ஓர் இடத்தில் நிகழச்செய்து விளைவைத் தெளிவாக நிர்ணயித்து விளக்கிவிடலாம். ஆனால், அரசியல் செயல் ஒன்றை, உதாரண மாக, அரசியல் புரட்சி ஒன்றை, நிரூபிக்கவல்ல சோதனையை நடத்திக் காட்ட முடியாது. ஏனெனில், மனிதனுடைய சக்தி

கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு வீரியம் வாய்ந்தது. எனவே, அரசியலை ஓர் அறிவியலாகக் கருதமுடியாத நிலையில் உள்ளோம்.

(iv) எதிர் காலத்தை நிர்ணயிக்க முடியாத நிலை (Future unpredictable)

வேதியியல் ஆராய்ச்சியில் முடிவை முன்கூட்டியே முறையாக நிர்ணயித்துவிட முடிகிறது. ஆனால், அரசியலில் வருங்காலத்தில் நிகழப்போகும் அரசியல் நிகழ்ச்சிகளையோ அல்லது பின்பற்றுகின்ற கோட்பாடுகளின், நடைமுறைகளின் வெற்றி தோல்விகளையோ முன்னதாக அறுதியிட்டுக் கூற முடியாது. யூகமான அரசாங்கம்கூடச் சில வேளைகளில் தவறிவிடுவது இயற்கையே. குறிப்பிட்ட ஒரு நாட்டில் குறிப்பிட்ட ஒரு அரசியல் கோட்பாடு வெற்றி பெற்று விட்டதால் அதே கோட்பாடு இன்னொரு நாட்டிலும் அதே வெற்றியைத் தரும் என்று கூறுவதற்கில்லை. அரசியல் கோட்பாடுகளின் விளைவுகள் நாட்டுக்கு நாடு அந்தந்த நாட்டின் அரசியல் சூழ்நிலைகளுக்கு ஏற்ப மாறி அமைகின்றன. எனவே, அரசியலை ஓர் அறிவியலாகக் கருத முடியாது போய்விடுகிறது.

(v) ஒருமுக நோக்கமின்மை (No unanimity)

அறிவியல் ஆராய்ச்சியாளர்களிடையே ஒருமுக நோக்கமிருக்கும். ஆனால் அரசியல் ஆராய்ச்சியாளர்கள் நாட்டிலுள்ள பலவிதமான பிரச்சினைகள் மீது கவனம் செலுத்துவதால் அவர்களுடைய நோக்கம் சிதைவுற்று அதனிமித்தம் அவர்களிடையே ஒருமுக நோக்கம் ஏற்பட வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. அரசியலை அறிவியலாக ஒப்புக்கொள்ள முடியாததற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

மேற் கூறிய காரணங்களை முன்னிட்டு அரசியலை ஓர் அறிவியலாகக் கருத முடியாவிட்டாலும் பிரைஸ், கெட்டில், கார்ணர், சீலி, பர்ஜஸ், வில்லோபி போன்ற அரசியல் நிபுணர்கள் அரசியலை ஓர் அறிவியலாகவே எண்ணுகின்றனர். இவர்கள் தங்களுடைய கருத்துக்கு ஆதரவாகக் கீழ்க்காணும் காரணங்களைக் குறிப்பிட்டுள்ளனர்:

(i) அரசியலில் சமூக நூல் சாயல் (Social Science Aspect of Politics)

அரசியலை ஓர் அறிவியலாக ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் அதை ஒரு சமூக அறிவியல் என்றாவது கூறலாம். அரசியல் மனிதனுடைய சமூக சேவைகளைப்பற்றி ஆராயும். அரசியலிலும் பலவித பொதுவான விதிகள் உள்ளன. இந்தப் பொதுவான விதிகள் பொருளியலில் காணப்படும் பொதுவான விதிகளைப்

போலவே காட்சியளிக்கின்றன. எனவே, முறையான அறிவைப் பெறுவதற்கு அரசியலிலும் வழிமுறைகள் உள்ளன. பொதுவான சில வழிமுறைகள் காணப்படுவதால் அரசியலையும் ஓர் அறிவியலாகக் கருதுவதில் தவறில்லை. போலக் என்னும் அறிஞர் கூறுவது போன்று அரசியலை அறநெறி சம்பந்தப்பட்ட உண்மைகளைப் போதிக்கும் நிறைவு பெறாத ஓர் அறிவியல் என்று கூறலாம்.

(ii) முறையான கல்விக்கு வாய்ப்பிருத்தல் (Systematic study possible)

தெளிவின்மையும் துல்லியமின்மையும் அரசியல் கல்வியில் காணப்பட்டாலும் முறையான கல்விக்கு அரசியலில் வாய்ப்பிருக்கிறது என்று சில அறிஞர்கள் கூறியுள்ளனர். காரணத்திற்கும் விளைவிற்கும் தொடர்பு ஏற்படுத்தி ஆராயும் அறிவியல் ஆராய்ச்சி முறை அரசியலிலும் காணப்படுவதாக அவர்கள் எண்ணுகின்றனர். முறைப்படி ஆராய்ந்து பெற்ற அனுபவமும் சோதனைகள் நடத்தியதன் விளைவாகக் கிடைத்த அறிவும் சேர்ந்ததுதான் அறிவியல் என்போமானால் அரசியலையும் ஓர் அறிவியல் என்றே கூறல் வேண்டும். சோதனைச் சாலைகளில் சோதனைகளைச் செய்து பார்த்து அரசியலை ஆராய முடியாது என்பது உண்மைதான் என்றாலும் சில வரையறைகளுக்குட்பட்டுச் சோதனைகளை அரசியலிலும் நடைபெறச் செய்யலாம். முறைப்படி கல்வியின் மூலமாக அரசியல் மேதைகள் பல விதிமுறைகளைக் கண்டுபிடித்து உள்ளனர். அந்த விதிமுறைகளை எல்லாம் இன்றைய அரசியல் அமைப்புகளில் கையாள முடியும் என்பதில் சிறிதளவேனும் ஐயமில்லை. சுவிட்சர்லாந்து நாட்டில் நேரடி ஜனநாயக முறை மிகவும் வெற்றிகரமாகச் செயல்பட்டு வருவது இதை நிரூபிக்கும். எனவே, அரசியலை ஓர் அறிவியலாகக் கருதுவதில் தவறில்லை என்றே தோன்றுகிறது.

அரசியல்கள் (Political Science)

சில ஃபிரெஞ்சு மேதைகள் அரசியல் என்று கூறுவதைவிட அரசியல்கள் என்று கூறுவதையே விரும்புகின்றனர். அரசியல் அமைப்பு, நீதித்துறை, பொருளாதாரம், சட்டமன்றம், சமூகச் சங்கங்கள், ஆட்சித் துறை முதலியன அரசினுடைய பல கூறுகளாகும். இவை அனைத்தையும் ஒரு தனித்துறையால் ஆராய முடியாது என்பதால் இவை ஒவ்வொன்றையும் தனித் தனியாக அரசியலுடன் இணைத்து, அரசியலை எல்லாவற்றிற்கும் பொதுவான ரீதியில் அரசியல்கள் என்றே கூற வேண்டும் என்று அவர்கள் கருதியுள்ளனர்.

மேற் கண்டவாறு ஆராயுமிடத்து அரசியலை ஓர் அறிவியலாகக் கூறவும் இடமுள்ளது; அறிவியல் இல்லை என்று

வாதாடவும் இடமுள்ளது. எனவே, அறிவியல் என்றோ அறிவியல் இல்லை என்றோ வாதாடுவதைவிட அரசியலை அறிவியலும் கலையும் சேர்ந்த ஒரு சமூக அறிவியல் என்று கூறுவதே நலம். அறிவியல் என்பது முறைப்படி பெறும் அறிவு. கலை என்பது முறைப்படி பெற்ற அறிவை வாழ்க்கைக்குப் பயன்படுத்துவதாகும். அரசியல் ஆராய்ச்சியாளர்கள் பல அரசியல் கோட்பாடுகளைத் தோற்றுவித்து, அரசியலை ஒரு முறைப்படியான அறிவாக ஆக்கியுள்ளனர். எனவே, அரசியலையும் ஓர் அறிவியல் என்று கருதலாம். அரசியல் கோட்பாடுகளைச் செயல்படுத்துகின்ற நிருவாகிகள் அரசியல் அறிவைக் கலையாக வாழ்க்கைக்குப் பயன் படுத்துகின்றனர். இவ்வாறு அரசியலையும் ஒரு கலை என்று கருதலாம். அறிஞர் ஜான்சன் இதை அறிந்திருப்பாரேயானால் 'அரசியல் என்பது பொல்லா மாக்கட்கு இறுதிப் புகலிட மாயிருப்பது' (Politics is the last resort of scoundrals) என்று கூறியிருப்பாரோ?

## அரசியல் கோட்பாட்டியலும் அரசியல் தத்துவமும் (Political Theory and Political Philosophy)

பலருக்கு அரசியல் கோட்பாட்டியலுக்கும் அரசியல் தத்துவத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு தெரிவதில்லை. இரண்டும் ஒன்றுதான் என்று அநேகர் நினைத்துவிடுகின்றனர். ஆனால், அரசியல் வல்லுனர்கள் இரண்டிற்குமிடையே உள்ள வேறுபாட்டினை நன்கு அறிவர்.

அரசியல் கோட்பாட்டியல் என்பது அரசியல் நூலாளர்களின் (political scientists) கோட்பாட்டியல் செயலைக் (theoretical work) குறிக்கும். அரசியல் தத்துவம் (political philosophy) என்பது அரசியல் தத்துவஞானிகளின் கோட்பாட்டியல் (theoretical work) செயலைக் குறிக்கும். அரசியல் கோட்பாட்டியல் தெளிவான உண்மைகளுடன் (facts) தொடர்பு கொண்டு நூல் இயல் (அறிவியல்) தன்மை பெற்று விளங்கும். இதனுடைய நோக்கம் பொதுவான விளக்கக் கோட்பாடுகளையோ அல்லது தற்கோள்களையோ ஏற்படுத்துவதாகும். இவ்விதம் ஏற்படுத்திய தற்கோள்களுள் ஒன்று 'ஜனநாயக அடிப்படையில் ஆரம்பித்த அமைப்பு முதற்கொண்டு எந்த ஓர் அமைப்பானாலும் இறுதியில் குழு ஆட்சியில் போய் முடிந்துவிடுகிறது' என்கிற கருத்தாகும். இத்தகைய தற்கோள்கள் அனுபவத்தின் அடிப்படையில் தோன்றியுள்ளதால் மேலும் இதுபோன்ற பல உண்மைகளை விளக்க இவை உதவுகின்றன. அதே நேரத்தில் அரசியல் தத்துவம் எனப்படுவது ஒரு சித்தாந்தமாகக் காட்சியளிக்கிறது. அரசியல் கோட்பாட்டியல் அரசையும் அரசாங்கத்தையும் பற்றிய உண்மையான நிலை என்ன என்று ஆராய முனையுங்கால், அரசியல்

தத்துவமோ அரசும் அரசாங்கமும் என்ன என்ன காரியங்களைச் செய்ய வேண்டும் என்பதனைக் கற்பனை வாயிலாக விளக்க முயல்கிறது. இதற்கு உதாரணமாகப் பிளேட்டோவின் 'குடியரசு' சித்திரிக்கும் கருத்தியலான சமூகத்தை அல்லது 'உட்டோப்பியா'வைக் கூறலாம்.

தத்துவஞானக் கருத்துகளை அரசையும் அரசாங்கத்தையும் பற்றிய கருத்துணர்வுகளுக்குப் பயன்படுத்துவது அரசியல் தத்துவமாகும். அரசியல் தத்துவம் இரண்டு நோக்கங்களைக் கொண்டுள்ளது. அவைகளாவன: (1) நம்பிக்கைகளைத் திறனாய்வு செய்து மதிப்பிடல். (2) கருத்துணர்வுகளைத் தெளிவாக்குதல். இவ்விரு நோக்கங்களையும் கீழ்க் கண்டவாறு ஆராயலாம்:

(i) நம்பிக்கைகளைத் திறனாய்வு செய்து மதிப்பிடல் (Critical evaluation of beliefs)

ஒரு நம்பிக்கையை ஏற்றுக் கொள்ளவோ அல்லது நிராகரிக்கவோ தகுந்த பகுத்தறிவான ஆதாரம் காட்ட முயலுதலே நம்பிக்கையைத் திறனாய்வு செய்து மதிப்பிடலாகும். நூல் இயல் (அறிவியல்) ஒரு நம்பிக்கையை விளக்கிக் கூற முயலும்போது தத்துவம் அதை நேர்மையான ஒரு நம்பிக்கை என்று காட்ட முயலுகிறது. இரண்டுமே (அறிவியலானாலும் சரி தத்துவமானாலும் சரி) ஒரு நம்பிக்கைக்குச் சார்பாக அல்லது எதிராக உள்ள ஆதாரங்களைத்தான் ஆராய்கின்றன. ஆனால், அறிவியல் ஒன்று நிகழ்வதற்கான காரணம் பற்றிய நம்பிக்கையான கருத்திற்குச் சார்பாகவோ அல்லது எதிராகவோ உள்ள நேர்மையான ஆதாரங்களை மட்டுந்தான் ஆராய்கிறது. ஆனால், தத்துவமோ எல்லா வித நம்பிக்கைக் கருத்துகளுக்கும் சார்பாகவும் எதிராகவும் உள்ள நேர்மையான ஆதாரங்களை ஆராய்கின்றது. இதற்காகத் தத்துவஞானிகள் ஒவ்வொரு நம்பிக்கையையும் ஆராய்வதாக எண்ணுவது தவறு. பழையதொரு நம்பிக்கையை மறுக்கவல்ல புதியதொரு நம்பிக்கை தோன்றும் பொழுதுதான் அவர்கள் அந்த நம்பிக்கைக்குச் சார்பாகவோ அல்லது எதிராகவோ உள்ள நேர்மையான ஆதாரங்களை ஆராய முயலுகின்றனர். உதாரணமாக, தற்கால அறிவியல்கள் சில மரபுரை நம்பிக்கைகளை மறுத்துக் கூறும் நிலையில் உள்ளன. படைப்புபற்றிக் கிறித்தவர்களின் வேதாகமம் தந்துள்ள விளக்கம் டார்வினுடைய பரிணாமக் கொள்கையால் மறுக்கப்பட்டுள்ள நிலையை நோக்கினால் இந்த உண்மை புலனாகும். அரசியல் தத்துவஞானிகள் பழைய நம்பிக்கையிலும் புதிய நம்பிக்கையிலும் காணப்படும் அடிப்படைக் கருத்துகளை வெளிக்கொணர்ந்து, அவைகளில் காணப்படும் முரண்பாடுகளைச்

சுட்டிக்காட்டி முடிவில் புத்தம் புதியதோர் கருத்தை வெளிப் படுத்தி முந்திய முரண்பாடுகளைச் சரிக்கட்டுகின்றனர்.

ஆனால், தத்துவம் பெற்றுள்ள இத்தகைய நோக்கம் ஒரு முக்கிய குறைபாடுடைத்தாய் விளங்குகிறது. அதாவது, ஒரு நம்பிக்கையைப் பகுத்தறிவால் காரணம் காட்டி விளக்க வேண்டு மானால் இரண்டு காரியங்களை அறிவதற்காக அந்த நம்பிக்கை யைப் புடமிட்டுப் பார்க்க வேண்டும். முதலாவதாக, அந்த நம்பிக் கையில் முன்பின் இணைவு இருக்கிறதா என்று அறிய வேண்டும். இரண்டாவதாக, அந்த நம்பிக்கையானது உண்மைகளின் அடிப்படையில் இருக்கின்றதா என்று அறிய வேண்டும். தத்துவ ஞானிகள் தர்க்கவியல் (logic) மூலமாக நம்பிக்கையில் முன்பின் இணைவு இருக்கிறதா என்று சோதிக்கின்றனர். ஆனால், நம்பிக்கையானது உண்மைகளின் அடிப்படையில் இருக்கின்றதா என்று தெரிந்துகொள்வது கடினம். ஏனெனில், ஒரு நம்பிக்கை யானது உண்மையானதா அல்லது பொய்யானதா என்று சோதித்துப் பார்ப்பதன்று இங்குள்ள பிரச்சினை. இங்கு தெரிந்து கொள்ள வேண்டியதெல்லாம் அந்த நம்பிக்கை சரியா அல்லது தவறா என்பதும் நல்லதா அல்லது கெட்டதா என்பதும்தான். இவைகளுக்கும் உண்மைகளுக்கும் பெரும் வித்தியாசம் உண்டு. மேலும் இவைகளை உண்மைகள் என்று கொண்டால் அவைகளைச் சோதித்துப் பார்ப்பதற்கேற்ப கருவியோ அல்லது வழி முறையோ இல்லை. இந்தக் குறையைப் போக்க ஓர் உபாயம் உள்ளது. அதாவது, திறனாய்வு செய்து மதிப்பிடல் செய்யும் போது நம்பிக்கையை நேரடியாகக் காரணம் காட்டி விளக்காமல் மறைமுகமாக மாற்று வழிகளை நீக்கிவிட்டு அந்த நம்பிக்கையை ஆதரிக்க வேண்டும் என்பதே.

**(ii)** கருத்துணர்வுகளைத் தெளிவுபடுத்தல் (Clarification of concepts)

இது நம்பிக்கைகளைத் திறனாய்வு செய்து மதிப்பிடுவதற்குப் பெரிதும் உதவுகிறது. ஒரு நம்பிக்கையைத் திறனாய்வு செய்து மதிப்பிட, கருத்துணர்வுகளுடைய பொருளைத் தெரிந்துகொள்வது அவசியம். பல காரியங்களுக்குப் பொருந்தும் ஒரு பொதுவான கருத்தே கருத்துணர்வாகும். கருத்துணர்வைத் தெளிவாக்கும் பொழுதுதான் அதனுடைய உண்மையான பொருள் விளங்கும். ஒரு கருத்துணர்வைத் தெளிவாக்குவதற்குப் பகுப்பு, தொகுப்பு, திருத்தம் என்ற மூன்று செய்கைகள் நிகழ்கின்றன. ஒரு கருத்துணர்வின் பகுப்பு என்பது அந்தக் கருத்துணர்விற்கு இலக்கணம் கூறும்பொழுது அதனுடைய மூலக்கூறுகள் தெளிவாக்கப்படுதலைக் குறிக்கும். உதாரணமாக, இறைமைக்கு இலக்கணம் கூறுங்கால் அதனுடைய மூன்று முக்கிய மூலக்

கூறுகளையும் உணர்த்தி இறைமைக் கருத்துணர்வை உன்னத சட்ட அதிகாரம் என்று தெளிவுபடுத்துதலைக் காணலாம். கருத்துணர்வுகளின் தொகுப்பு என்பது ஒரு கருத்துணர்வுக்கும் இன்னொரு கருத்துணர்வுக்கும் இடையே காணப்படும் தகுந்த தொடர்புகளைத் தெளிவுபடுத்தலாகும். உதாரணமாக, உரிமை என்கிற கருத்துணர்வுக்கும் கடமை என்கிற கருத்துணர்வுக்கும் இடையே உள்ள தொடர்புகளைத் தெளிவுபடுத்துவதைக் கூறலாம். A என்பவன் B என்பவனுக்கு எதிராக உரிமை பெற்றிருக்கிறான் என்று கூறுவது B என்பவன் A என்பவனுக்கு நேராகப் பெற்றிருக்கும் கடமையை உணர்த்துவதாய் உள்ளது. இவ்விதம் Aயின் உரிமைக்கும் Bயின் கடமைக்கும் உள்ள தகுந்த தொடர்பைத் தெளிவுபடுத்தலே கருத்துணர்வைத் தொகுத்தல் எனப்படுகிறது. கருத்துணர்வின் திருத்தம் என்பது கருத்தைத் தெளிவுபடுத்துவதற்கென்று இலக்கணம் ஒன்றினைப் பயன்படுத்துமாறு சிபாரிசு செய்தலைக் குறிக்கும். உதாரணமாக, இறைமைக் கருத்துணர்வைச் சட்ட அதிகாரமாகத்தான் பயன் படுத்த வேண்டுமே தவிர அரசினுடைய அடக்குமுறைச் சக்தி யாக ஒருபோதும் பாவிக்கக் கூடாது என்று சிபாரிசு செய்தலைக் கூறலாம்.

(iii) சமூகவியல்களின் ஒழுங்குமுறை (Methodology of Social Sciences)

சமூகவியல்களின் ஒழுங்குமுறை அறிவியல் தத்துவத்தின் ஒரு பகுதியாகக் கருதப்படுகிறது. பிற அறிவியல்களைப் போலவே சமூகவியல்களும் அரசியலும், முறையே சமூகவியல் தத்துவத்திலும் அரசியல் தத்துவத்திலும் தோன்றி, தத்துவத்தின் இடத்தை அறிவியல் பெற்று விட்டது என்று அகஸ்டஸ் கோம்ட்டு என்னும் சமூகவியல் வல்லுனர் கருது கிறார். அவருடைய வளர்ச்சி பற்றிய அடிப்படைச் சட்டத்தில் மனித அறிவின் எந்தப் பகுதியானாலும் மூன்று நிலைகளைக் கடந்தாகவேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

அவருடைய கருத்துப்படி, முதல் கட்டம் சமய சித்தாந்தம் அல்லது புனைகதை நிலையாகும். இந்த நிலையின்போது மனிதன் இயற்கையைக் கடந்த சக்திகளுக்குச் சான்றுரை காட்டிக் காரியங்களை விளக்க வைக்க முயலுகின்றான். அதன் பிறகு தத்துவஞானிகள் இந்த நிலையின் நிறைகளைத் தர்க்கிக்கின்றனர். அதன் விளைவாக அடுத்த நிலை ஆரம்பமாகின்றது.

அடுத்த நிலை மறைபொருள் ஆராய்ச்சி அல்லது கருத்தியல் நிலை எனப்படுகிறது. வரம்பிலாச் செயல், வரம்பிலா நீதி,

வரம்பிலா இயற்பொருள் எனப்படும் கருத்தியலான சொற்களால் பெயரிடப்பட்ட உண்மை என்று கருதும் பொருள்களுக்குச் சான்றுரை காட்டிக் காரியங்கள் விளக்கப்படுகின்றன. ஆனால், இந்தச் சொற்றொடர்களெல்லாம் தனிப்பட்ட, குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியை விவரிப்பதற்காகப் பயன்படுத்தும் கருத்தினைத் தெரிவிக்கும் முறை என்றும், தொகுப்புச் சொற்றொடர்கள் பொருள்களின் பெயர்களாயிருக்கக் காரணமில்லை என்றும் கருது கின்றபோது மூன்றாவது நிலை ஆரம்பமாகிறது.

மூன்றாவது நிலை அறிவியல் நிலை எனப்படுகிறது. இந் நிலையில் விளக்கம், ஆராயப்பட்ட நிகழ்ச்சிகளுக்கு இடையே உள்ள எதிரிணை தொடர்புகளைச் சுட்டிக்காட்டும் வடிவம் பெறு கிறது. இங்கு நிகழ்ச்சிகளுக்குப் பின்னாகச் சென்று ஆராய முடியாத பொருள்களைக் கருத்தில் கொள்ளும் முயற்சி கைவிடப் படுகிறது.

இவ்வாறு ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு மாறுதல் ஏற்பட தத்துவ ஞானிகளின் திறனாய்வுச் செயல்களே காரண மாகும். சமய சித்தாந்தம் அறிவியலால் பழமையாக்கப்பட்டு விட்டது. அறிவியல் விளக்கம் தத்துவத்தின் மூலமாகத்தான் தோன்றியது. அறிவியல் தோன்றியதும் தத்துவம் மறைந்து போக வேண்டும். ஏனெனில், உண்மையைக் கண்டறிதல் அறிவியலின் செயலே தவிர தத்துவத்தின் செயலாகாது. ஒரு முறையான அறிவியலில் கருத்து தெரிவிக்கும் முறை தோன்று கின்ற பொழுது தத்துவம் முற்றிலுமாக மறைந்துவிடுகிறது என்றே கூறவேண்டும்.

அறிவியல் வளர்ச்சி தத்துவ ஆராய்ச்சிக்கு மேலும் வாய்ப்பு அளிப்பதாய் உள்ளது. அறிவியல்கள் நிலையானவையல்ல. அவை எப்பொழுதும் வளர்ந்துகொண்டே இருப்பவை. ஒரு அறிவியல் வளரும்பொழுது பொதுவான கருத்துணர்வுகள்கூட மாறலாம். அதன் விளைவாகக் கருத்துணர்வை முன்பு பயன் படுத்திய விதத்திற்கும் இப்போது பயன்படுத்தும் விதத்திற்கும் வித்தியாசமும் குழப்பமும் ஏற்படலாம். இக் குழப்பத்தால் கருத்துணர்வைத் தெளிவுபடுத்த வேண்டியது தத்துவத்தைச் சார்ந்த செயலாகும். அதனால்தான் தத்துவஞானி தர்க்கஇயல் தேர்ச்சியும், கருத்துணர்வுப் பகுப்பில் நுணுக்கமும், ஆராய்ச் சிக்குப் பொருத்தமான இயல்கள் பற்றிய போதுமான அறிவும் பெற்றிருக்க வேண்டியதன் அவசியம் உணரப்படுகிறது.

அறிவியலின் தத்துவம் என்பது தத்துவத்தின் செயல்களை ஒரு புதிய களத்திற்குப் பொருந்துமாறு செய்தலாகும். அதன்

நோக்கங்களாக நம்பிக்கைகளைத் திறனாய்வு செய்து மதிப்பிடலை யும், மாறுபடுகின்ற கருத்துணர்வுகளைத் தெளிவடையச் செய்தலையும் கூறலாம். ஓர் அறிவியலின் வளர்ச்சி வெளிப் படையான முரண்பாடுகளைத் தோற்றுவிக்கலாம். ஆனால், நம்பிக்கைகளை மதிப்பிடுவதன் மூலமாக இந்த முரண்பாடுகளை நீக்கிவிடலாம். இத்தகையதோர் அறிவியல் தத்துவம்தான் ஒழுங்குமுறை என்று அழைக்கப்படுகிறது. ஒழுங்குமுறை யானது சரியான வழிமுறைகளைப் பயன்படுத்தி நம்பிக்கைகளைத் திறனாய்வு செய்து மதிப்பிடும் ஒருவகைக் கருத்துரை ஆராய்ச்சியை மேற்கொள்வதைக் குறிக்கும்.

## அரசியலும் பிற சமூகவியல்களும்
## (Political Science and other Social Sciences)

அரசியல் கோட்பாடுகளை நன்கு உணரப் பொது அறிவு இன்றியமையாதது. பரந்த பொது அறிவில் சிறப்பாகப் பொருளியலில், சட்டவியல், உளவியல், அறவியல் ஆகிய இயல்கள் அரசியல் ஆராய்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்ற துணைத்துறைகளாகும். மேலும் சமூகப் பொதுவியலும் வரலாறும் அரசியல் ஆராய்ச்சிக்குத் தேவையான சான்றுகளையும் மேற் கோள்களையும் தந்து உதவுகின்றன. எனவே, அரசியலை இந்த சமூகநூல் இயல்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தல் அவசியமா கின்றது.

### (i) அரசியலும் பொருளியலும் (Politics and Economics)

அரசியலும் பொருளியலும் ஒன்றை ஒன்று தழுவிக் கிடக்கின்றன. அரசியல் வளர்ச்சிக்கு மூல காரணமாயிருப்பது பொருளியலேயாகும். அரிஸ்டாட்டில் தன்னுடைய 'அரசியல்' என்னும் நூலில் அரசியலுக்கும் பொருளியலுக்கும் இடையே உள்ள நெருங்கிய தொடர்பினை மிகத் தெளிவாகக் கூறியுள்ளார். அரசியல், பொருளாதார அவசியத்தின் விளைவாகவேதான் தோன்றியிருக்க வேண்டும். சிலர் அரசியலைப் பொருளாதாரத் தின் கைப்பாவை என்று கூறியிருப்பதிலிருந்தே இந்த உண்மை விளங்கும். நாட்டில் பொருளாதாரச் சீர்கேடு தோன்றி ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டுவிடுவதைத் தடைசெய்யச் சட்டம் இயற்ற வேண்டியதாயுள்ளது. இந்தச் சட்டத்தை அரசாங்கத்தின் மூல மாகவும் அரசாங்கத்தின் அனுமதியுடனும்தான் இயற்றலாம்.

தொழில் வளர்ச்சியின் விளைவால் தொழிலாளர்களின் நலனைப் பாதுகாக்கவும் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவும் சட்டத்தின் மூலம் பரிகாரம் தேட வேண்டியதாய் உள்ளது.

தொழிலாளர்களுடைய ஊதியம், நலன்கள், கல்வி, வைத்திய வசதிகள் முதலிய பிரச்சினைகளைத் தீர்க்க உதவும் வரவுசெலவு திட்டத்தை அரசாங்கம் பொருளியலின் உதவி கொண்டே தயாரித்துச் செயல்படுத்துகின்றது. அரசியல் கட்சிகள் கூட இன்றைக்குப் பொருளாதார அடிப்படையில்தான் தோன்றி உள்ளன. சமநிலை கோரும் அரசியல் கட்சிகளும் பொது வுடைமை கோரும் அரசியல் கட்சிகளும் பொருளாதார அடிப் படையில்தான் மலர்ந்தன. இரு நூற்றுண்டுகளுக்கு முன்பு வரையிலும் பொருளியலை அரசியல் பொருளாதாரம் என்றுதான் அழைத்திருக்கின்றனர். இந் நூற்றுண்டில்தான் அரசியலும் பொருளியலும் தனித்தனித் துறைகளாகத் தோன்றியுள்ளன. பொருளாதார மக்களாட்சியின் அடிப்படையில் நிறுவப்படாத எந்த அரசியல் மக்களாட்சியும் நிலைத்து நிற்பதில்லை என்பது உண்மை. இதிலிருந்து அரசியலுக்கும் பொருளியலுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு விளங்கும்.

## (ii) அரசியலும் சட்டவியலும் (Politics and Jurisprudence)

அரசியல், அரசாங்கமும் அதன் அமைப்புகள் பற்றியும் கூறுங்கால், சட்டவியல், சட்டம் பற்றியும் அதன் அமைப்புகள் பற்றியும் விளக்குகிறது. அரசாங்கத்திற்கும் சட்டத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டு. உண்மையைச் சொன்னால் சட்டக்கல்வி அரசியல் கல்வியின் ஒரு பகுதியாகவேதான் அமைந்திருக்க வேண்டும். ஆனால் சட்டங்களின் எண்ணிக்கை பெருகி விட்டதாலும் நுண்ணறிவின் மேலுள்ள ஆர்வத்தின் காரணமாகவும் சட்டக் கல்வி தனித்துறை பெற்றது என்றுதான் கூற வேண்டும். மனிதனின் பழக்க வழக்கங்களிலிருந்து தோன்றியதுதான் சட்டம். சமூகத்தில் மனிதன் ஒழுங்காக வாழச் சட்டம் தேவைப்படுகிறது. அந்தச் சட்டம் சமூகத்தின் பொது சம்மதத்தைப் பெற்றதாயிருக்க வேண்டும். மக்களின் விருப்பு வெறுப்பிற்கிணங்கச் சட்டங்களை இயற்றுவது அரசாங் கத்தின் பொறுப்பு. மக்களுடைய விருப்பத்திற்கு எதிராக இயற்றிய சட்டங்களை மக்கள் மதித்து நடக்க மாட்டார்கள் என்பது மட்டும் உறுதி. எனவே, பொதுவாக அரசாங்கங்கள் மக்களின் நிலையைப் புரிந்துகொண்ட பிறகுதான் சட்டங்களை இயற்றுகின்றன. உதாரணமாக, பொதுவுடைமை நாட்டில் தொழிலாளர்களின் நலன்களைப் பேணுவதற்கென்றே சட்டங்கள் இயற்றப்படுகின்றன. அரசாங்கம் திறம்பட்ட சட்டங்களை இயற்று வதற்குச் சட்டவியல் பெரிதும் உதவுகிறது என்பதில் கடுகள வேனும் சந்தேகமில்லை.

(iii) அரசியலும் உளவியலும் (Politics and Psychology)

அரசியல் அறிவைப் பெறுவதற்கு உளவியல் பெரிதும் உதவுகிறது. மனிதனின் மனநிலையை அறிந்து கொண்டு அதற்கு ஏற்றாற்போல் சமூக வாழ்க்கையை அமைத்துக் கொள்வதே நல்லது. தனி மனிதனின் மன நிலையை அறிய உளவியல் பெரிதும் பயன்படுகிறது. உளவியலின் உதவிகொண்டு மனிதனின் உள்ளத்து எழுச்சிகளை அறிந்து அதற்கேற்ப சமூக வாழ்க்கையை அமைத்துத் தருவதே அரசியலின் நோக்கம். அதனால்தான் அரசியல் கோட்பாடுகள் உளவியல் அடிப் படையில் அமைந்துள்ளன. சிக்மண்டு ஃபிராய்டு என்னும் உளவியல் நிபுணர் மனித உள்ளத்தில் தெளிந்த உணர்வு நிலை, அதன்கீழ் சிறிது மறைந்த உணர்வுநிலை, அதற்கும் அடியில் புலன்படா உணர்விலா நிலை என மூன்று நிலைகள் உள்ள தாகவும் நமது செயல்கள் யாவும் இம் மூன்று நிலைகளாலும் உந்தப்படுகின்றன என்றும் கருதுகிறார். இவருடைய இக் கருத்து விரைவில் உலகெங்கும் பரவி சமூகம், குடும்பம், தனிவாழ்வு எல்லாவற்றிலும் பெரும் மாறுதல்களை ஏற்படுத்திவிட்டது. எனவே, உளவியல் முடிவுகள் அரசியல் ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவதாக உள்ளன.

(iv) அரசியலும் அறவியலும் (Politics and Ethics)

அரசியலுக்கும் அறவியலுக்கும் அதிக வேறுபாடு கிடை யாது என்றே கூற வேண்டும். அறவியல் தனி மனிதனின் நல் லொழுக்கத்தைப்பற்றிப் போதிக்கும் நீதிநூல். அரசியல் மனித சமூகத்தில் நல்லொழுக்கத்தை அடைய முயற்சிக்கும் ஒரு சமூக நூல். மனிதன் சமூகத்தில் மற்றவர்களுடன் தொடர்பு கொண்டு வாழ்கிறான். அந்தச் சமூகத்தில் நல்லொழுக்கம் ஏற்படும் பொருட்டுச் சட்டங்கள் இயற்றப்படுகின்றன. இச் சட்டங்கள் அரசாங்கத்தின் அனுமதியுடன் இயற்றப்படுகின்றன. பிளேட் டோ எழுதிய குடியரசு என்னும் அரசியல் நூல் நீதி அல்லது நேர்மை என்றால் என்ன என்று விளக்கும் ஒரு நூலாகும். அரசியலில் நன்மை தீமை என்று பாகுபாடு செய்ய நீதி என்னும் அளவுகோல் தேவை. இந்த அளவுகோலை அரசியல் அறிஞர்கள் நீதித்துறையிலிருந்தே பெறுகின்றனர். இத்தாலிய ராஜ தந்திரியான மாக்கியவல்லி எழுதிய 'பிரின்ஸ்' என்னும் நூலில் ஒழுக்கத்திற்குச் சிறந்த இடம் கொடுக்கப்படவில்லை. சிலர் அரசியலில் ஒழுக்கக்கேடு ஏராளம் உள்ளது என்ற அடிப் படையில் மாக்கியவல்லியை ஆதரித்துள்ளனர். அரசியல் நீதியைக் காட்டிலும் அரசியல் சூழ்ச்சிகளே நடைமுறையில் வெற்றி பயக்கும் என்றாலும் ஒழுக்கத்தின் அடிப்படையில்

தான் சட்டம் தோன்றியிருக்கிறது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். எனவே, தனி மனிதனின் நல்லொழுக்கத்தைப் பொருட்படுத்தாத எந்த அரசியலும் நேர்மையின் அடிப் படையில் அமைந்த இறுதிப் பயனை அடைய முடியாது. தற் காலத்தில் அரசியல் கோட்பாடுகளும், தத்துவங்களும், செய் கைகளும் நல்லொழுக்கத்தின் அடிப்படையில் முன்னேற்ற மடைந்து வருவதைக் கண்கூடாகக் காணலாம். ஆக்டன் பிரபு கூறுகிற பிரகாரம், அரசாங்கம் எதைச் செய்ய வேண்டும் என்பதைவிட எதைக் கண்டிப்பாகச் செய்தாக வேண்டும் என்பதே முக்கியமானதாகும். வெறும் ஆட்சியை நடத்துவது மட்டும் ஓர் அரசாங்கத்தின் நோக்கமாயிருத்தல் கூடாது. மக்களுடைய நலம் கருதுதலே அரசாங்கத்தின் அடிப்படைக் கொள்கையாயிருத்தல் வேண்டும். இத்தகையதோர் பெரு நோக்கைப் பேணிக் காக்க அறவியல் பெரிதும் உதவுகிறது. 'அறமின்றி அரசியல் மலர்ச்சியடையாது' என்னும் உண்மையை ஒவ்வொரு குடிமகனும் அறிந்தாக வேண்டும்.

### (v) அரசியலும் வரலாறும் (Politics and History)

பேராசிரியர் ஜான்சீலி, 'வரலாறு அரசியலுக்கு வேராகவும், அரசியல் வரலாற்றின் கனியாகவும் விளங்குகிறது,' என்று மிக அழகாகக் கூறியுள்ளார். இவருடைய இந்தக்கூற்று வரலாற்றுக்கும் அரசியலுக்கும் இடையே உள்ள நெருங்கிய தொடர்பை எடுத்துக் காட்டுவதாய் உள்ளது. இன்று நாம் பயிலும் வரலாறு ஒரு கால் நம் முன்னோருடைய அரசியலாக இருந்திருக்கவேண்டும். அதுபோலவே இன்று நம்மை ஆட்டிவைக்கும் அரசியல் நாளைக்கு வரலாறாக மாறிவிடப் போகிறது. வரலாறு அரசியல் ஆராய்ச்சிக்குத் தேவையான மூலப்பொருள்களை அளிக்கிறது. அந்த மூலப்பொருள்களிலிருந்துதான் அரசியல் அமைப்பு களின் நன்மை தீமைகள், பயன்பாடுகள், தோற்றுவாய், வளர்ச்சி, அழிவு ஆகிய விவரங்களை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. இந்த அறிவின் மூலமாகவேதான் நாம் அரசியலை நடை முறைக்குக் கொண்டு வருகிறோம். வரலாற்றின் அடிப்படையில் தோன்றாத எந்த அரசியல் நிறுவனமும் கற்பனையாகவேதான் உள்ளது. கற்பனையை நடைமுறைக்குக் கொண்டு வருவது ஆபத்தை விளைவிக்கும். ஏனெனில், கற்பனையின் அடிப்படையில் தோன்றும் அரசியல் நிறுவனங்களின் நன்மை தீமைகளை எளிதில் உணர்ந்து கொள்ள முடிவதில்லை. அரசியலும் வர லாற்றின் வளர்ச்சிக்கும் அதன் முக்கியத்துவத்துக்கும் பெரும் உதவி செய்கிறது. வரலாற்றில் அரசியல் நிகழ்ச்சிகள்தாம் அதிக அளவில் இடம் பெறுகின்றன.

ஆனுல், அரசியலுக்கும் வரலாற்றுக்கும் இடையே ஒரு பெரும் வேறுபாடு உண்டு. அது யாதெனில் வரலாற்றில் வெறும் நிகழ்ச்சிகள், உண்மைகள் அவைகளின் தொடர்புகள் போன்றவை மட்டுமே இடம் பெறுகின்றனவே தவிர, வாதம் அல்லது தர்க்கம் செய்வதற்கான கருத்துகளுக்கு இடமே இல்லை. ஆனுல் அரசியலிலோ, எந்தெந்த அரசியல் அமைப்புகள் மக்களுக்கு நலன் பயக்கும், எந்தெந்த அரசியல் அமைப்புகள் நலன் பயக்காது என்ற அபிப்பிராய பேதங்களை அடிப்படையாகக் கொண்டு கருத்துணர்வுகள் எழுதப்பட்டுள்ளன. எனவே, அரசியலில் தர்க்க முறையில் கருத்துணர்வுகளை வாதிட வாய்ப்புள்ளது.

(vi) அரசியலும் சமூகப் பொதுவியலும் (Politics and Sociology)

மனிதனுடைய செய்கைகள் எந்தெந்த துறையினைச் சார்ந்தவையாயிருப்பினும் சரி அவைகளனைத்தும் மற்ற மனிதர்களும் வாழ்கின்ற சமூகத்தில் நிகழ்வதால் அந்தச் செய்கைகளை விளக்கும் இயலை சமூகப் பொதுவியல் எனக் கருதி பொது அறிவுப் பகுதியில் சேர்க்க அகஸ்டஸ் கோம்ட்டு என்னும் அறிஞர் விரும்பினுர். மனிதன் சமூகத்தில் எவ்வாறு வாழ்கிருன் என்பதுபற்றியும் மனித சமூகத்தின் துவக்கம், அதன் அமைப்பு, வளர்ச்சி, இயல்புகள், அரசியல் அமைப்புகள் ஆகியவைகளைப் பற்றியும் சமூகப் பொதுவியல் விளக்குகிறது. சமூகத்தைப்பற்றி எடுத்துரைக்கும் எல்லாவகை அறிவியல்களுக்கும் சமூகப் பொதுவியலே தந்தை என்று கருதப்படுகிறது. அரசியல், மனிதனின் அரசியல் செய்கையை மட்டும் பிரதான அம்சமாகக் கொண்டுள்ளது. சமூகப் பொதுவியல் அரசியல் செய்கையையும் பொருளாதார, சமூக, கலாசார, கல்வி போன்ற பலவித செய்கைகளையும் பல்வேறு அம்சங்களாகக் கொண்டுள்ளது. இவ்வாறு சமூகப் பொதுவியல் ஒவ்வோர் இயலுடனும் தொடர்புகொண்டு விளங்குகிறது. சமூகப் பொதுவியலின் உதவியின்றி அரசியல் அறிவு பெறுவது கடினம். ஏனெனில், அதிகாரம் எவ்வாறு சமூகத்தில் துவங்கியது, சட்டம் எவ்வாறு தோன்றியது என்பதையெல்லாம் தெரிந்து கொள்வதற்குத் தேவையான மூலக்கருத்துகளைச் சமூகப் பொதுவியல்தான் அரசியல் ஆராய்ச்சியாளர்களுக்கு அளிக்கிறது.

சமூகப் பொதுவியலுக்கும் அரசியலுக்கும் உள்ள ஒரு வேறுபாடு என்னவென்ருல், சமூகப் பொதுவியல் அரசியலை மனிதனின் முக்கியமான காரியமாகக் கருதவில்லை. மக்கள் சமூகத்தில் காணப்படும் பலதரப்பட்ட சங்கங்களையும் பல்வேறு

பட்ட மக்கள் தொடர்புகளையும் மட்டுமே சமூகப் பொதுவியல் முக்கிய அம்சமாகக் கருதுகிறது. ஆனால் அரசியலோ மனித னுடைய அரசியல் வாழ்க்கை, அரசியல் கோட்பாடுகள் அரசாங்கம், அதனுடைய பிரிவுகள், அரசியல் அமைப்புகள் ஆகியவைகளைத்தான் பிரதான அம்சங்களாக விளக்குகிறது. எனவே, அரசியல் சமூகப்பொதுவியலைக்காட்டிலும் சிறியதாகவே உள்ளது. சமூகப் பொதுவியல் இதுவரையிலும் தோன்றியுள்ள சமூக நிறுவனங்களைப்பற்றிக் கூறுகிறது. ஆனால் அரசியலோ சென்றகால அரசியல் அமைப்புக்களின் அடிப்படையில் நிகழ் காலத்திற்கு ஏற்ப வருங்காலத்தின் தேவையைக் கருத்தில் கொண்டு நிறுவப்படும் மனிதனுடைய அரசியல் நிறுவனங்களைப் பற்றி எடுத்துரைக்கின்றது.

## அரசியல் ஆராய்ச்சிக்கான அணுகு முறைகள்
## (Methods used for the study of Political science)

அரசியலை ஆராய்வதற்கு சில அணுகு முறைகள் உள்ளன. அவைகளைப் பரிசோதனை முறை, ஒப்பீட்டு முறை, வரலாற்று முறை, கண்டறிதல் முறை, தத்துவ ஞானமுறை என்று வகைப் படுத்தலாம். இம்முறைகளின் உதவியின்றி அரசியல் கல்வியை முறைப்படி கற்க முடியாது. எனவே, இம்முறைகளைப்பற்றித் தெரிந்து கொள்வது அவசியமாகிறது.

(i) பரிசோதனை முறை : (Experimental Method)

சமூக சூழ்நிலைகளைக் குறிப்பிட்ட விதமாய் ஏற்படுத்தி அரசியல் பரிசோதனையைச் செய்து பார்ப்பது இயலாத காரியம். வேதியியல், பௌதிகம் போன்ற அறிவியல்களில் பரிசோதனை முறையை முழுமையாகக் கையாள வாய்ப்பிருக்கிறது. ஏனெனில் குறிப்பிட்ட சோதனைச் சாலையில் வேண்டிய உஷ்ண நிலையை ஏற்படுத்தி நினைத்த சோதனையை நடத்தி விளைவை நிர்ணயித்துக் கொள்ளலாம். இருப்பினும், அரசியலிலும், பரிசோதனை முறையைக் கையாள வாய்ப்புள்ளது. பிளேட்டோ கிரேக்க நாட்டிலிருந்து சிஸிலிக்குச் சென்று அங்கு அரசாண்டு வந்த மன்னருக்கு ஓர் அரசன் பெற்றிருக்க வேண்டிய இயல்புகளைப் பற்றிப் போதித்தார். இது அவர் நடத்திக் காட்டிய அரசியல் பரிசோதனைக்குச் சான்றாக விளங்குகிறது. இந்தியாவில் ஆங்கிலேயர் ஆண்டு வந்த காலத்தில் இந்தியர் களின் சுதந்திர தாகத்தைத் தடுப்பதற்காக அவர்கள் கொண்டு வந்த 1909 ம் ஆண்டின் மிண்டோ மார்லி சீர்திருத்தங்களும், 1919ம் ஆண்டின் மான்ட்போர்டு சீர்திருத்தங்களும், 1935ம்

ஆண்டின் சுயாட்சி சட்டமும் ஆங்கிலேய ஆட்சியாளர்கள் நடத்திப் பார்த்த அரசியல் பரிசோதனைகள் என்று கூறலாம். சுதந்திர இந்தியாவில் இன்று அமல்படுத்தப் பட்டிருக்கும். சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், அதிகாரப்பங்கீடு, ஜனநாயக சமதர்மம் போன்ற புனிதக்கோட்பாடுகள் யாவும் அரசியல் பரிசோதனைகள்தாம். இவ்வாறு அரசியல் பரிசோதனைகள் ஒவ்வொரு நாட்டிலும் நடந்து வருவதை நாம் காணலாம். அரசியற் கல்வி பயிலுகின்றவர்கள் இந்த பரிசோதனை களைக் கண்டறிந்து தேவையான முடிவுகளைப் பெற முயல வேண்டும்.

(ii) ஒப்பீட்டு முறை (Comparative Method)

இது ஒரு முக்கியமான முறையாகும். இந்த முறையின் கண் அரசியலைச் சார்ந்த உண்மைகளை அதனதன் தன்மைகளின் அடிப் படையில் வகைப்படுத்தி, ஒரே தன்மையுடைய உண்மைக் கருத்துக்களை ஒன்றோடொன்று ஒப்பிட்டு நேர்மையான கருத் துணர்வு கண்டு பிடிக்கப்படுகிறது. இந்திய அரசியல் அமைப்பு நிர்ணய சபை இந்திய அரசியல் அமைப்பை வரை வதற்கு இந்த முறையே பயன்படுத்தியது. இந்திய அரசியல் அமைப்பு நிர்ணய சபையின் அங்கத்தினர்கள் ஆங்கிலேய, அமெரிக்க, அயர்லாந்து, கானடிய, ஆஸ்திரேலிய அரசியல் அமைப்புகளை ஆராய்ந்து அவைகளுடைய நிறைகுறைகளை ஒப்பிட்டுப் பார்த்து இந்திய அரசியல் அமைப்பினை வரைந்தார்கள். அரிஸ்டாட்டில் தன்னுடைய கருத்தியலான அரசை (ideal state) ஏற்படுத்த இம்முறையையே பின்பற்றினாராம். அவர் சுமார் நூற்றைம்பது அரசியலமைப்புகளைச் சேகரித்து அவைகளை ஒன்றோடொன்று ஒப்பிட்டுப்பார்த்து அதன் அடிப் படையில்தான் தனது கருத்தை வெளியிட்டார். இந்தமுறையைப் பயன் படுத்தும் பொழுது ஒரு காரியத்தைக் கருத்தில் கொள்ளல் வேண்டும். அதாவது ஒரு நாட்டின் அரசியல் சூழ்நிலையுடன் அந்த நாட்டின் பொருளாதார, சமூக, மற்றும் அறநிலை சூழ் நிலைகளையும் கருத்தில் கொள்ளல் வேண்டும். மேலும், ஒப்பிடு வதற்காக எடுத்துக் கொண்ட அரசாங்கங்களோ அல்லது அரசியல் அமைப்புகளோ ஒரே தன்மை உடைத்தாய் இருத்தல் வேண்டும்.

(iii) வரலாற்று முறை (Historical Method)

இதை ஒப்பீட்டு முறையின் ஒரு பிரிவு என்று தான் கூற வேண்டும். அரசியல் நிகழ்ச்சியை வரலாற்று உண்மைகளின்

அடிப்படையில் தான் நிர்ணயிக்க முடியும். பொல்லாக் என்பவரின் கருத்துப்படி இந்த முறை அரசியல் நிறுவனத்தை வரலாற்றுப் பரிணாம அடிப்படையில் ஆராய முயற்சிக்கிறதே தவிர தற்போதைய சூழ்நிலைகளின் அடிப்படையில் ஆராயவில்லை. அரசியல் கோட்பாடுகளை வரலாற்று உண்மைகளின் அடிப் படையில் ஆராயும் பொழுது சிறிதளவேனும் கற்பனைக்கு இடம் தருதல் கூடாது. சீலி, லாஸ்கி என்னும் அறிஞர்கள் வரலாற்று முறையை தீவிரமாக ஆதரித்தவர்களாவர். வரலாற்று முறை கடந்த கால சம்பவங்களை விளக்குவதோடு மட்டுமல்லாமல் வருங்கால அரசியல் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகவும் உள்ளது. அரசியல் அறிஞர்கள் கடந்தகால அரசியலின் வெற்றி தோல்வி களை ஆதாரமாகக் கொண்டு வருங்கால அரசியல் நிலைகளை அறிந்து கொள்ள வரலாறு ஒரு கருவியாகப் பயன்படுகிறது.

(iv) கண்டறிதல் முறை (Observation Method)

கண்டறிதல் முறை அரசியல் ஆராய்ச்சிக்கு அதிக பயன் அளிக்கும் ஒரு முறையாகும். பிரைஸ் என்னும் வல்லுனர் இந்த முறையைப் பயன்படுத்தியே "அமெரிக்கன் பொது சொத்து" என்னும் நூலையும் "தற்கால ஜனநாயகங்கள்" என்னும் நூலையும் எழுதினார். அவர் அமெரிக்கா, ஃபிரான்சு, ஆஸ்திரேலியா சுவிட்சர்லாந்து, கானடா போன்ற நாடுகளுக்குத் தாமே நேராகச் சென்று அங்குள்ள மக்களுடனும், ஆட்சியாளர்களுடனும் நேரடித் தொடர்பு கொண்டு தான் கண்டறிந்த உண்மைகளையே தன்னுடைய புத்தகங்களில் எழுதியுள்ளார். லோவல் என்பவரும் இம்முறையைப் பெரிதும் ஆதரித்தார். அவர் அரசியல் ஒரு கண்டறியும் இயலாகுமே தவிர பரிசோதனை இயலாகாது என்று குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தை முழுவதுமாக ஏற்றுக் கொள்ள முடியாது என்றாலும் கண்டறிதல் முறையின் முக்கியத்துவத்தை நாம் புறக்கணிக்க முடியாது.

(v) தத்துவஞான முறை (Philosophical Method)

தத்துவஞான முறை கற்பனையின் வாயிலாகத் தோன்றிய முறையாகும். பிளேட்டோ, பிளன்ட்சிலி, ரூசோ, கான்ட், போசன்கியுட், மில், செட்ஜ்விக் போன்றவர்கள் இந்த முறையை ஆதரித்துள்ளனர். இம்முறை உண்மையின் அடிப்படையில் அரசியலை ஆராய்வதில்லை. அரசியல் கோட்பாடுகளையும், நிறுவனங்களையும் இம்முறை தத்துவஞானக் கருத்துக்களின் அடிப்படையில் ஆராய்ந்து நாட்டிற்குத் தேவையான அரசியல் நிறுவனங்களைக் குறிப்பிடுகிறது. அரசின் நோக்கங்களையும்

இறுதிப்பயன்களையும் அறநெறி அடிப்படையிலும் தத்துவஞான கருத்துக்களின் அடிப்படையிலும் தொகுத்தாராய்வது இம்முறையின் சிறப்பாகும்.

அரசியல் அறிவை முறைப்படியாக பெறுவதற்கு மேற்கூறிய அணுகு முறைகள் யாவும் பயன்படுகின்றன. வரலாற்று முறை, கண்டறிதல் முறை, பரிசோதனை முறை ஆகிய முறைகளின் மூலமாக அரசையும், அரசாங்கத்தையும் பற்றிய உண்மைகளை நாம் தெரிந்து கொள்கிறோம். தத்துவஞான முறையின்மூலம் அரசியல் நிறுவனங்கள் பற்றிய கருத்தியல் உணர்வுகளைப் பெறுகிறோம். இருவித முறைகளையும் நேர்மையான வகையில் பயன்படுத்தினால் அரசியல் ஆராய்ச்சியாளர்கள் கருத்தியலான அரசை நிறுவுவதற்கானக் கோட்பாடுகளை எளிதாக ஏற்படுத்தி விடுவர். எனவே, எல்லா முறைகளுமே அரசியல் ஆராய்ச்சி களுக்கு இன்றியமையாதவைகளாக விளங்குகின்றன.

## அரசியல் கல்வியினால் ஏற்படும் பயன்
## (Value of the study of Political science)

தற்காலத்தில் அரசியல் கல்வியின் முக்கியத்துவம் அதிக அளவில் உணரப்பட்டு வருகிறது. ஏனெனில், அரசியல் கல்வி தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் பயனளிக்கும் வகையில் உள்ளது. ஒவ்வொரு மனிதனும் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ ஏதாவது ஒரு வகையில் அரசியலோடு சம்பந்தப் பட்டுள்ளான். நாம் நம்மை அறியாமலே நமது நாட்டின் அரசாங்கம், கல்விச்சாலை, ஆலயம், வாணிகம் வர்த்தகம், அரசியல் கட்சிகள் போன்றவைகளின் அரசியல் செய்கைகளில் பங்கு கொண்டு விடுகிறோம். இவ்வாறு அரசியல் மனிதனின் அன்றாட செயல்களில் இடம்பெற்று மனிதவாழ்க் கைக்கு இன்றியமையாததாய் இருந்து வருகிறது.

அரசியல் கல்வி ஆளுகின்றவர்க்கும் ஆளப்படுகின்ற வர்க்கும் பயன்படுகிறது. பொதுக்காரியங்களை நிர்வகிக்கும் பொழுது பின்பற்ற வேண்டிய கோட்பாடுகளை அரசியல் கல்வி போதிக்கின்றது. அரசியல் கல்வியின் மூலமாக நம் நாட்டு நிர்வாகிகள் தங்களுக்கு வழி காட்ட வேண்டிய கோட்பாடுகளை நன்கு உணர்ந்து கொள்கின்றனர். அரசியல் அறிவில்லாத ஒரு நிர்வாகி நாட்டு நிர்வாகத்தைத் திறமையாகவும் ஒழுங்காகவும் நடத்துவது கடினம். எனவேதான் நிர்வாகத்தில் திறமையை ஏற்படுத்தி நிர்வாகியானவன் போதிய அரசியல் அறிவைப் பெற்றிருக்க வேண்டியதன் அவசியம் வலியுறுத்தப்படுகிறது

அரசியல் கல்வியினுல் அறிவுடைய, முதல்தரமான குடி மக்கள் தோன்றுகின்றனர். அரசியல் அறிவு பெறுகின்றனர். ஆதியில் அரசு ஏன், எவ்வாறு தோன்றியது என்றும் அது இன்றும் தொடர்ந்து செயல்படுவதற்கான காரணம் என்ன என்றும் திட்டவட்டமாகத் தெரிந்து கொள்கின்றனர். மேலும் குடிமக்கள் தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள உரிமைகளையும் அவர்கள் செய்ய வேண்டிய கடமைகளையும் நன்கு உணர்ந்து கொள்ள அரசியல் கல்வி உதவுகிறது. உரிமைகளின் முக்கியத் துவத்தையும் கடமைகளின் அவசியத்தையும் உணர்ந்து வாழும் குடிமக்கள்தாம் நாட்டின் செல்வங்களாகக் கருதப்படுகின்றனர், ஏனென்ருல், அவர்கள் தங்களுடைய நாட்டின் சமூக, பொருளாதார, மற்றும் அரசியல் காரியங்களில் உண்மையான பங்கு பெறவும், மற்றவர்களைப் பங்கு பெறச் செய்யவும் செய் கின்றனர். மேலும் அரசியல் கல்வியின் மூலமாக மக்கள் அரசு ஆற்ற வேண்டிய கடமைகளையும் நிறைவேற்ற வேண்டிய குறிக்கோள்களையும் தெரிந்து கொண்டு நாட்டு அரசியலில் கூடுதல் பங்கு பெறமுடிகிறது. இவ்வாறு அரசியல் கல்வியின் வாயிலாக மக்கள் தனிமனிதனுக்கும் அரசின் அதிகாரத்திற்கும் இடையே உள்ள தொடர்பினைத் தெரிந்து கொண்டு சிறந்த பிரஜைகளாக வாழ முடிகிறது.

அரசியல் கல்வி நாட்டு மக்களிடையே அரசியல் விழிப் புணர்வை ஏற்படுத்துகிறது. அரசியல் விழிப்புணர்வுடைய மக்களால்தான் நேர்மையான அரசாங்கத்தை ஆதரிக்கவும், முறைகேடான அரசாங்கத்தை எதிர்க்கவும் முடியும். மக்கள் அரசாங்கத்தின் குற்றம் குறைகளைச் சுட்டிக்காட்டத் தவறினுல் அரசியல் நிர்வாகிகள் தங்கள் கடமைகளை நேர்மையாகவும் திறமையாகவும் செய்யமாட்டார்கள். எனவே மக்கள் பெற்று உள்ள அரசியல் விழிப்புணர்வு நாட்டில் சிறந்த ஒரு அரசாங்கத்தை ஏற்படுத்துகிறது என்பது உண்மையாகும்.

ஜனநாயக அரசாங்கம் பொது கருத்திற்கிணங்கச் செயல் படுகிறது. பொது கருத்துக்கு எதிராக செயல்படும் எந்த அரசாங்கமும் அதிக நாள் நிலைத்து நின்றதில்லை. சட்ட இறைமை அரசியல் இறைமைக்கு அடிபணிய வேண்டுமென்பது அரசியல் நியதி. மக்களுக்கு சுதந்திரம் அளிக்காத எந்த அரசும் அழிந்துவிடும் என்பது வரலாறு கூறும் உண்மை. அத்துமீறிச் செயல்படும் அரசாங்கத்தை நீக்கிவிடுவார்கள் மக்கள். அத்து மீறிச் செயல்படும் அரசாங்கத்தின் தீய நோக்கங்களை மக்கள் அறிந்து கொள்ள அரசியல் கல்வி பெரிதும் உதவுகிறது

அரசியல் கல்வி ஒரு நாட்டின் பொதுக்கருத்தை வளர்க்கிறது. பொதுக்கருத்து மக்களுடைய உண்மையான விருப்பைத் தேர்தல் மூலமாகவோ அல்லது புரட்சியின் மூலமாகவோ தெரிவித்து மக்கள் நலம் ஒன்றையே கருதும் அரசாங்கத்தை ஏற்படுத்தி சமூகத்தில் சுமுகமான வாழ்க்கையை அமைத்துத் தருகிறது.

பாராளுமன்ற ஜனநாயக முறையில் அரசியல் கட்சியில் அதிக முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன. பெரும்பான்மைக் கட்சி அரசாங்கத்தை அமைக்கிறது. சிறுபான்மைக் கட்சி எதிர்க் கட்சியாகச் செயல்படுகிறது. இரு கட்சிகளுமே பாராளுமன்ற ஜனநாயகம் வெற்றி பெற இன்றியமையாதவையாகும். நல்ல கொள்கைகளை உடைய கட்சிகள் இல்லாவிட்டால் மக்கள் குறுகிய நோக்குடையவர்களாகி விடுகிறார்கள். நல்ல கொள்கை யுடைய அரசியல் கட்சிகள் தோன்ற அரசியல் கல்வி பெரிதும் உதவுகிறது. அரசியல் கல்வியின் மூலமாக மக்கள் கட்சிகளையும், கொள்கைகளையும் சீர்தூக்கிப் பார்த்து நல்ல கொள்கையுடைய கட்சியை ஆதரிக்க முடிகிறது.

குடிமக்கள், அரசியல் தலைவர்கள், சட்டமன்ற உறுப்பினர் கள், நிருவாகிகள், நீதிபதிகள் ஆகியவர்கள் தேசீய பிரச்னைகள் குறித்தும் சர்வதேச காரியங்கள் குறித்தும் முறையான தீர்மானங் களை இயற்றுவதற்கு அரசியல் கல்வி பெரிதும் உதவுகிறது. இன்றைய மாணவர்கள்தாம் நாளைய அரசியல் தலைவர்கள். நம்முடைய நாட்டு எதிர்காலம் இவர்கள் கையில்தான் உள்ளது. ஆனால் தென் இந்தியாவில் உள்ள சர்வகலாசாலைகளுடன் இணைந்த கல்லூரிகளிலும், உயர்நிலைப் பள்ளிகளிலும் அரசியல் கல்விக்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. இது வருந்தத் தக்கதோர் நிலைமையாகும். அரசியல் கல்வியை வளர்க்க முதலில், அரசியலை ஒரு சிறப்புப் பாடமாக உயர்நிலைப்பள்ளி வகுப்புக்களில் பயிற்றுவிக்க வேண்டும். பிறகு படிப்படியாய் புகுமுக வகுப்புக் களிலும் இளங்கலை, முதுகலை பட்டப்படிப்பிலும் அரசியலைப் பயிற்றுவிக்க வேண்டும். மேலும், அரசியல் கல்வி எல்லாக் கல்லூரிகளிலும் அறிமுகப்படுத்தப்பட ஆவன செய்ய வேண்டும். அப்படியானால்தான் மாணவர்களிடத்தில் அரசியல் விழிப்பு உணர்வு ஏற்பட்டு, சிறந்த வாக்காளர்களும் திறமையான அரசியல் நிருவாகிகளும் தோன்றி நம் நாட்டு அரசியல் சிறப்புற்று மக்கள் வாழ்வு மலர வழி ஏற்படும்,

# 2. அரசு (State)

## அரசின் பொருள் விளக்கமும் தன்மையும்
## (Meaning and Nature of State)

மனிதன் குடும்பத்தில் பிறந்து, சமூகத்தில் வாழ்கிற ஒரு சமூகப்பிராணி என்ற உண்மையைச் சென்ற அத்தியாயத்தில் அறிந்தோம். மற்றவர்களுடைய உதவியின்றி மனிதனால் தனித்து வாழ இயலாது. சமூகத்தில் ஒருவரோடு ஒருவர் கூடி வாழ்வதின் மூலமாகத்தான் அவன் தன்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முடிகிறது. இவ்வாறு மனிதன் சமூகத்தில் வாழும்பொழுது சில தகராறுகளும், சிக்கல்களும் ஏற்படுவது இயற்கையே : இந்தத் தகராறுகளையும் சிக்கல்களையும் தீர்த்து வைக்க சட்டங்கள் தேவைப்படுகின்றன. சமூகத்தில் ஒழுங்கையும் பாதுகாப்பையும் ஏற்படுத்துவதற்கான சட்டத்தை இயற்றவும், இயற்றிய அந்த சட்டத்தை அமலாக்கவும் சமூகம் ஒழுங்கான ரீதியில் நிறுவப்படல் வேண்டும். ஒழுங்கான ரீதியில் நிறுவிய சமூகத்தை அரசு என்கிறோம். அதாவது சமூகத்தில் அரசாங்கம் ஒன்று தோன்றி சட்டதிட்டங்களை இயற்றி அமலாக்கும் பொழுது அந்த சமூகம் ஒரு அரசாகத் திகழ்கிறது. எனவே, அரசு என்னும் சொல்லுக்கு, குறிப்பிட்ட ஒரு நிலப் பரப்பில் சட்டத்திற்காக அரசியல் ரீதியில் நிறுவப்பட்ட சமூகம் என்று பொருள் கொள்ளலாம். டி. டி. ராபேல் என்னும் பேராசிரியர் அரசுக்குக் கீழ்கண்டவாறு இலக்கணம் வரைந்து உள்ளார். "அரசு என்பது இறைமை இருப்பதாக அங்கீகரிக்கப் பட்டு, வலிமையால் ஆதரிக்கப்பட்ட சட்டத்தால் குறிப்பிட்ட நிலப்பரப்பின் எல்லைக்குள் உலகப்பொதுவான ஆதிக்கம் செலுத்தி, ஒழுங்கையும் பாதுகாப்பையும் ஏற்படுத்துவதற்கென திட்டமிடப்பட்ட ஒரு சங்கமாகும்". இந்த இலக்கணத்திலிருந்து அரசின் தன்மைகளை அறிந்து கொள்ளலாம். பொதுவாக நில வரம்பிற்குள்ளான உலகப்பொதுவான ஆதிக்க எல்லை, கட்டாய ஆதிக்க எல்லை, மேன்மைச் செயல்கள், கட்டாயத்தன்மை, இறைமை என்னும் சிறப்பியல்புகளை அரசு பெற்று விளங்குகிறது. அவைகளைக் கீழ்கண்டவாறு விளக்கலாம்.

**(i) நிலவரம்பிற்குள்ளான உலகப்பொதுவான ஆதிக்க எல்லை :- (Territorial and Universal Jurisdiction)**

ஓர் அரசின் எல்லைக்குள் இருவகையான மக்கள் வாழ்கின்றனர். முதல்வகை மக்களை பிரஜைகள் என்று கூறலாம். இன்னொரு வகை மக்கள் அயல்நாட்டவராவர். குடியுரிமை பெற்ற பிரஜைகளுக்கு ஒரு சில உரிமைகளும் கடமைகளும் வழங்கப்பட்டுள்ளன. கடமைகள் பிரஜைகள் மீது மட்டும்தான் சுமத்தப்பட்டுள்ளன என்பதற்கில்லை. அந்த நிலப்பரப்பிற்குள் வாழ்கின்ற ஒவ்வொருவர் மீதும் சுமத்தப்பட்டுள்ளன, அதாவது ஒரு அரசின் நிலப்பரப்பிற்குள் வாழ்கின்ற அனைவரும் அந்த அரசின் ஆதிக்க எல்லைக்கு உட்பட்டவர்களாவார்கள். ஓர் அரசில் வாழ்கின்ற பிரஜைகளானாலும் சரி, பிரஜைகளல்லாதவர்களானாலும் சரி, யாவரும் அந்த நாட்டு சட்டதிட்டங்களை மதித்து நடத்தல் வேண்டும் என்பது உலக நியதி. சட்டத்தை எதிர்த்தவர் எவராயிருப்பினும் சரி அவர் அந்தச் சட்டத்தின் மூலமாக விதிக்கப்படும் தண்டனைக்கு உட்படுவர் என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும். அரசின் ஆதிக்க எல்லைக்குட்பட்ட நிலவரம்பு எனப்படுவது அங்கீகரிக்கப்பட்ட அரசின் நிலவரம்பு, நிலப்பரப்பு, நீர், ஆகாய விரிவு ஆகியவைகளைக் குறிக்கும்.

சமூகத்தில் உள்ள தொழிற்சங்கங்கள், வர்த்தகக் கழகங்கள், அரசியல் கட்சிகள் போன்ற தனிமனிதனின் அமைப்புக்களுக்கு நிலவரம்பிற்குள்ளான உலகப் பொதுவான ஆதிக்க எல்லை கிடையாது. இந்தச் சங்கங்களின் ஆதிக்க எல்லைக்கு அங்கத்தினர்கள் மட்டும் தான் கட்டுப்படுவர். அங்கத்தினர்களல்லாதவர்களை இச்சங்கங்களின் சட்டதிட்டங்கள் கட்டுப்படுத்துவதில்லை.

**(ii) கட்டாய ஆதிக்க எல்லை (Compulsory Jurisdiction)**

இது உலகப்பொதுவான ஆதிக்க எல்லை இயல்புடன் சம்பந்தப்பட்டது. உலகப்பொதுவான ஆதிக்க எல்லை எனப்படுவது அரசின் நிலப்பரப்பில் வாழ்கின்ற ஒவ்வொரு குடிமகனும் அரசின் சட்டத்திற்கு உட்பட்டவன் என்னும் உணர்வை ஏற்படுத்துகிறது. கட்டாய ஆதிக்க எல்லை என்னும் சிறப்பியல்பானது ஒரு குறிப்பிட்ட அரசின் குடிமையைத் தெரிந்தெடுக்க வாய்ப்பில்லாத நிலையை விளக்குகிறது. ஓர் அரசில் நிரந்தரமாகவோ அல்லது தற்காலிகமாகவோ வாழ்கின்ற ஒருவன் அவன், விரும்பினாலும் சரி அல்லது விரும்பாவிட்டாலும் சரி, அந்த அரசின் சட்டத்திற்குப் பணிந்தே வாழவேண்டும்

என்றுள்ளது. ஆனால் மற்ற சங்கங்களைப் பொறுத்தவரையில் ஒருவன் தன் விருப்பப்படி ஒரு சங்கத்தில் அங்கத்தினராகிக் கொள்ள முடியும். உதாரணமாக, அரசியல் கட்சி ஒன்றில் ஒருவன் அங்கத்தினராக இருப்பதோ அல்லது அங்கத்தினராக இல்லாமலிருப்பதோ அவனுடைய சொந்த விருப்பத்தைப் பொறுத்தது. ஆனால் அரசைப் பொறுத்த வரையில் அவனுக்கு விருப்பம் இல்லாவிட்டாலும் அவன் அந்த அரசின் குடிமையைப் பெற்றாகவேண்டும். முன்னொரு காலத்தில் ஒரு நாட்டில் வாழ விரும்பாத ஒருவன் இன்னொரு நாட்டிற்குச் சென்று விடலாமென்றிருந்தது. ஆனால் அந்த சலுகை இன்று எல்லோருக்கும் அளிக்கப்படவில்லை. ஒரு சிலருக்குத்தான் தாங்கள் விரும்பிய நாட்டுக்கு தங்கள் குடிமையை மாற்றிக் கொள்ளும் வாய்ப்பு கிடைக்கிறது. அந்த ஒரு சிலர் கூட அவர்கள் விரும்பிச் செல்லுகின்ற நாட்டின் எல்லாச் சட்டங்களையும் விரும்பி ஏற்றுக் கொள்வார்களா என்று கூறுவதற்கில்லை.

கட்டாய ஆதிக்க எல்லை ஒரு தொழிற்சங்கத்தில் கூட காணப்படுகிறது. ஆனால் அரசின் ஆதிக்க எல்லை தொழிற்சங்க ஆதிக்க எல்லையைக் காட்டிலும் அதிக வலிமையுடையதாய்க் காணப்படுகிறது. ஒரு தொழிற் சங்கத்தின் அங்கத்தினர் ஒருவர் அந்த தொழிற் சங்கத்தில் அங்கத்தினராக இருக்க வேண்டாமென்று நினைத்தால் தன்னுடைய தொழிலை (வேலை) இழந்தாலும் பரவாயில்லை என்று முடிவுசெய்து விட்டால் போதுமானது. அந்தச் தொழிற் சங்கத்தில் உள்ள தன்னுடைய அங்கத்தினத்துவத்தை ராஜினமா செய்து விட்டு சங்கத்திலிருந்து வெளியேறி விடலாம். வெளியேறிவிட்ட பிறகு வேறு எந்த சங்கத்திலும் அங்கத்தினராகாமல் சுதந்திரமாக வாழமுடியும். ஆனால் ஒரு பிரஜை தான் வாழ்கின்ற அரசை விட்டு வெளியேறி வேறு எந்த அரசிலும் குடிமை பெறுமல் சுதந்திரமாக வாழமுடியாது. ஏதாவது ஒரு அரசில் அவன் குடிமை பெற்றே வாழவேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டுள்ளது. இதுதான் அரசின் கட்டாய ஆதிக்க எல்லை என்று கூறப்படுகிறது.

**(iii) முதன்மையான செயல்கள்:– (Predominant Functions)**

அரசு ஏனைய பிற சங்கங்களைப் போலல்லாமல் முதன்மையான செயல்களையே செய்கிறது. அரசு தன்னுடைய செயல்களைச் செய்வதற்கு எல்லாவகையிலும் தகுதிபெற்று விளங்குகிறது. ஒவ்வொரு அரசின் செயல்களையும் எதிர்மறைச் செயல்கள் என்றும் நேர்மறைச் செயல்கள் என்றும் இரு வகைகளாகக் கூறலாம். நடைமுறையில் உள்ள உரிமைகளை அனுபவிக்கத் தடையாக இருக்கும் இடையூறுகளை

நீக்கி ஒழுங்கை நிலைநாட்டும் அரசின் மேன்மையான செயல் எதிர்மறைச் செயலாகும். புதிதாக உரிமைகள் வழங்குதலும் பழைய உரிமைகளைப் புதியமுறையில் அளித்தலும் அரசின் நேர்மறைச் செயல்களாகும். தற்கால அரசுகளில் நீதியை நிலை நிறுத்தித் தன்னலம் காக்கும் செயலும் நேர்மறைச் செயலாகும்.

அரசின் எதிர்மறைச் செயல்தான் அரசை மற்ற சங்கங்களி லிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. மற்ற சங்கங்களும் அரசைப்போலவே ஒழுங்கை நிலைநாட்டுவதற்குத் தங்களுக்கென ஒழுங்கு நடவடிக்கை நடமுறைகள் பெற்றுள்ளன. ஆனால் அவைகளுடைய ஒழுங்கை நிலைநாட்டும் செயல் இரண்டாந்தர செயலாகவே உள்ளது. சங்கத்தின் முதன்மைச் செயல் வேறாக உள்ளது. மேலும் சங்கங்கள் அவைகளுக்கு உள்ளேதான் ஒழுங்கை நிலைநாட்டிக் கொள்ள முடியுமே தவிர சங்கங்களுக்கு வெளியில் ஒழுங்கை நிலைநாட்டும் முயற்சியில் ஈடுபடமுடியாது. ஆனால் அரசைப் பொறுத்த வரையில் ஒழுங்கை நிலைநாட்டுவது அதனுடைய முதன்மைச் செயலாக உள்ளது. மேலும் அரசு சங்கங்களுக்கு உள்ளே ஒழுங்கை நிலைநாட்டி வெளியிலும் அவை களுக்குப் பாதுகாப்பு அளிக்க வல்லதாயுள்ளது.

நேர்மறைச் செயலாகிய நன்னலம் காக்கும்செயல் அரசுக்கு மட்டும் சொந்தமான செயலன்று. அநேக சங்கங்களும், மக்கள் சமுதாயங்களும் தங்களுடைய அங்கத்தினர்களின் நலனை முன் னேற்றுவதில் ஆர்வம் காட்டத்தான் செய்கின்றன. சங்கங்களைப் பொறுத்தவரையில் இது ஒரு தன் இயல்பான செயலாகவே உள்ளது. ஆனால் அரசின் நன்னலம் காக்கும் செயல் ஒரு கட்டாயச் செயலாகக் கருதப்படுகிறது.

(iv) கட்டாயத்தன்மை (Coersive Method)

அரசு தன்னுடைய செயல்களைச் சட்டத்தின் உதவியுடன் நடைபெறச் செய்கிறது. அரசின் சட்டம் கட்டாயப்படுத்தும் சக்தி பெற்றதாக விளங்குகிறது. அரசின் கருவியாகப் பயன் படும் அரசாங்கம், சட்டத்தை இயற்றுவதற்கென ஒரு சட்ட மன்றப் பிரிவையும், இயற்றிய சட்டத்தை செயல்படுத்துவதற் கென ஒரு ஆட்சித்துறை பிரிவையும், சட்டத்தை மீறுபவர்களைத் தண்டிக்கவும் சட்டங்களுக்கு விளக்கம் கூறவும் ஒரு நீதித்துறை யையும் பெற்று விளங்குகிறது. மற்ற சங்கங்களுக்கும் சட்ட திட்டங்கள் உள்ளன. ஆனால் அவைகள் தங்களுடைய அதி காரத்தை அரசின் சட்டங்களிலிருந்தே பெறுகின்றன. அரசின் அதிகாரமே இறுதி அதிகாரமாக விளங்குகிறது. அரசின் சட்டங்கள் மட்டுமே கட்டாயத்தன்மை பெற்று விளங்கு

கின்றன. எனவே தான் அரசின் சட்டங்கள் மற்ற சங்கங்களின் சட்டங்களை விட மேன்மை வாய்ந்தவை என்று கூறப்படுகிறது.

(v) இறைமை:- (Sovereignty)

அரசு இறைமைபெற்ற ஓர் அமைப்பு. அதனுடைய சட்ட திட்டங்கள் உயர்ந்தவை, உன்னதமானவை. மனிதனுடைய மற்ற சங்கங்கள் அனைத்தும் அரசின் இறுதி அதிகாரத்திற்கு உட்பட்டவை. அவைகளின் சட்ட அதிகாரத்திற்கு ஊற்றாய், உறைவிடமாய் விளங்குகிறது அரசு. அரசின் சட்ட அதிகாரமே முடிவானது வேறு எந்த ஒரு அதிகாரத்திற்கும் அரசு பணியாது. சட்டப்படி சர்வதேசச் சட்டத்தைக் கூட அரசின் சட்டத்தைக் காட்டிலும் உயர்ந்ததாக கருதுவதற்கில்லை. சர்வதேசச் சட்டங்களை மதிப்பதும் மதிக்காததும் அரசின் சொந்த விருப்பைப் பொறுத்தது. ஒரு அரசு விரும்பினால் சர்வதேச சட்டத்திற்குப் பணிகிறது. பணிந்தாக வேண்டும் என்று கட்டாயம் எதுவும் இல்லை. ஒரு அரசு இறைமை பெற்ற அரசு என்று கூறினால் அந்த அரசு வேறு எந்த சக்திக்கும் கட்டுப் படாது என்று பொருள். பொதுவாக இறைமை என்னும் சொல்லுக்கு பூரண சுதந்திரம் என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். எனவே அரசு பூரணசுதந்தரம் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

மேற்கூறிய சிறப்பியல்புகள் யாவும் அரசின் தன்மையை நன்கு விளக்கி, அரசுக்கும் தனி மனிதனின் பிற சங்கங்களாகிய விளையாட்டுச்சங்கம், ஆலயம், தொழிற்சங்கம் வர்த்தகக் கழகங் கள் அரசியற்கட்சிகள் முதலியவைகளுக்கும் உள்ள வேறுபாடு களையும் தெளிவாக விளக்குகின்றன.

## அரசும் பிற நிறுவனங்களும்
## (State and other Entities)

அரசின் தன்மைகளை ஆராயுங்கால் அரசிற்கும் மற்ற சங்கங்களுக்கும் உள்ள வேறுபாட்டினைத் தெரிந்து கொண்டோம். இனி அரசுக்கும் பிற நிறுவனங்களாகிய மனிதன் வாழும் சமூகம், மனிதனின் நல்வாழ்க்கைக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள அரசாங்கம், அரசை விட மேம்பட்ட தேசம் ஆகியவைகளுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளைக் காணலாம்.

(i) அரசும் சமூகமும் (State and Society)

ஒருவருக்கொருவர் உதவி செய்து எல்லோருடைய ஒத்துழைப்பையும் பெற்று அன்றாடத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் நோக்குடன் கூடி வாழும் மனிதக்கூட்டம் சமூகம் எனப்படும். நன்கு நிறுவப்பட்ட ஒரு சமூகத்திற்குள் பல

சமுதாயங்கள் இருக்கின்றன. சமுதாயம் என்பது பொதுவான சமயம், பொதுவான இனம், பொதுவான மொழி, பொதுவான மரபு போன்றவைகளின் அடிப்படையில் இணைந்து வாழ்கின்ற மனிதக் கூட்டத்தைக் குறிக்கும். உதாரணமாக, தமிழர் சமுதாயம், அரிசன சமுதாயம், நாடார் சமுதாயம், முகமதிய சமுதாயம், ஹிந்து சமுதாயம் என்பனவற்றைக் கூறலாம். இப்படிப்பட்ட பல சமுதாயங்களைக் கொண்ட மனித வாழ்க்கையை சமூகம் என்று கூறுகிறோம். இந்த சமூகம் அரசியல் ரீதியில் அமைந்த ஒரு சமூகமானால் அரசு எனப்படும். சமூகம் அதில் வாழ்கின்ற மனிதனை மட்டுமே குறிக்கிறது. அவன் வாழும் சூழ்நிலையைச் சமூகம் குறிக்காது. ஆனால் அரசுக்குக் குறிப்பிட்ட எல்லைகளுக்குள் அமைந்த நிலப்பரப்பு உண்டு. அந்த நிலப்பரப்பில் வாழ்கின்ற மனிதனையும் அவன் வாழும் சூழ்நிலையையும் அரசு குறிக்கும். சமூகம் அரசைவிட அளவில் பெரியது என்றும் கூறலாம். உதாரணமாக, இந்திய அரசில் வாழ்கின்ற கிறிஸ்துவ சமுதாயம் உலகத்தில் உள்ள கிறிஸ்துவ சமுதாயத்தின் ஒரு பகுதியினராவர். மேலும் கிறிஸ்தவ சமுதாயத்தினர் இந்திய அரசின் நிலப்பரப்பிற்கு வெளியில் உள்ள நிலையையும் காணலாம். ஒரு சமூகத்தில் வாழ்கின்ற மக்கள் அந்த சமூகத்தில் தொன்றுதொட்டு பின்பற்றப்பட்டு வரும் விதிகளையும், வழக்காறுகளையும், மரபுகளையும் மதித்து நடக்கின்றனர். ஒரு வேளை யாராவது அவைகளை மீறிவிட்டால் அவர்களைத் தண்டிப்பது கடினம். அரசுக்கு கட்டாயப்படுத்தும் சக்தியிருப்பது போல சமூகத்திற்கு இல்லை. அரசு சட்டத்தை மீறியவர்களைத் தகுந்த முறையில் தண்டிக்க முடிகிறது. எனவே தான் அரசின் சட்டங்களுக்கு சமூகத்தின் நியதிகளைக் காட்டிலும் அதிக வலிமை இருப்பதாகக் கருதப்படுகிறது. சமூகத்திற்கு இல்லாத அரசாங்கம் அரசுக்கு இருப்பதுதான் இதற்கான காரணமாகும்.

(ii) அரசும் அரசாங்கமும்: (State and Government)

அரசும் அரசாங்கமும் ஒன்றுதான் என்று சிலர் தவறாக எண்ணி விடுகின்றனர். ஆனால் உண்மையில் அரசு வேறு, அரசாங்கம் வேறு. அரசு கருத்தியலானது (abstract) அரசாங்கம் பருப்பொருளானது (concrete). அதனால் தான் அரசையும் அரசாங்கத்தையும் ஒன்றாகக் கருதி விடுகின்றனர். அரசாங்கம் மக்களுடைய விருப்பைத் தெரிவிக்கும் அரசின் ஒரு கருவியாக விளங்குகிறது. அரசாங்கத்தின் மூலமாகத்தான் அரசு தன்னுடைய குறிக்கோள்களை நிறைவேற்றுகிறது. அரசில் எல்லா மக்களும் இடம் பெறுகிறார்கள். ஆனால் அரசாங்கத்தின்

அதிகாரத்தைப் பிரயோகித்து நிர்வாகத்தை நடத்துகின்ற ஒரு சிறு எண்ணிக்கையுள்ள மக்கள் மட்டுமே அரசாங்கத்தில் இடம் பெறுகின்றனர். அரசுக்கு இறைமை உள்ளது. அந்த இறைமையைப் பிரயோகிக்கும் அரசின் கருவியாக அரசாங்கம் செயல்படுகிறது. அரசாங்கம் அரசின் இறைமையைத் தனது சட்டங்களின் மூலமாகப் பிரயோகிக்கிறது. அரசாங்கம் மாறலாம். ஆனால் அரசு நிலையானது. இவ்வாறு அரசும் அரசாங்கமும் ஒன்றுக் கொன்று தொடர்புடைய தனிப்பட்ட நிறுவனங்களாகும்.

(ii) அரசும் தேசமும் : (State and Nation)

அரசு தேசம் என்னும் இரு சொற்களும் வெவ்வேறு காரியங்களைக் குறிக்கின்றன. அரசு என்னும் சொல் அரசியல் ரீதியில் நிறுவப்பட்ட இறைமை பெற்ற ஒரு மக்கள் சமூகத்தைக் குறிக்கும். ஆனால் தேசம் என்னும் சொல் அதைவிட விரிவான பொருளைத் தருகிறது. அரசும் தேசீயமும் (Nationalism) சேர்ந்து தேசத்தை உருவாக்குகின்றன. தேசீயம் என்பது யாவரும் ஒன்று என்கிற ஒரு மேன்மையான உணர்வாகும். ஒரு வேளை தேசீயம் மற்ற தேசங்களுக்கு எதிரானதோர் உணர்வாக இருப்பினும் ஒரு அரசின்கண் வாழ்கின்ற மக்கள் அனைவரையும் ஒன்றாக இணைக்கவல்ல ஓர் உயரிய சக்தியாக விளங்குகிறது என்பதில் ஐயமில்லை. தேச ஒற்றுமையும் ஒருமைப்பாடும் வளர தேசீயம் இன்றியமையாதது. தேசீயத்தின் முக்கியத்துவம் நாட்டின் நெருக்க காலங்களில் அதிக அளவில் உணரப் படுகிறது. பொதுவான நிலப்பரப்பு, பொதுவான வரலாற்றுப் பின்னணி, பொதுவான கலாச்சாரமும் பண்பாடும், பொதுவான இனம், பொதுவான மொழி, பொதுவான அரசியல், பொருளாதார விருப்பு வெறுப்புகள் போன்றவை ஒரு நாட்டில் தேசியத்தை வளர்க்க உதவும் சக்திகளாகும். இந்த சக்திகளின் மூலமாக இணைந்து வாழும் மக்கள் சமூகம் எளிதாக ஒரு தேசமாகி விடமுடிகிறது. தேசீய உணர்வு பெற்ற அரசு ஒரு தேசமென ஒப்புக் கொள்ளப் படுகிறது. தேசமாகக் கருத முடியாத எந்த அரசும் இன்றைய உலகில் சுயமாக எதையும் சாதித்து விட முடியாது என்பது மறுக்க முடியாத உண்மை. ஆகவே, ஒவ்வோர் அரசும் தேசீய உணர்வை வளர்க்க வேண்டிய கடமையைப் பெற்றுள்ளது.

## அரசின் தோற்றம்
## (Origin of the State)

ஆரம்பகாலத்தில் அரசு எவ்வாறு தோன்றியிருக்க வேண்டும் என்னும் உண்மையை விளக்கப் பல கருத்துக்கள்

உள்ளன. தெய்வீக உரிமைக் கொள்கை, வலிமைக் கொள்கை, தாய்வழிக் கொள்கை, தந்தைவழிக் கொள்கை, சமூக உடன் பாட்டுக் கொள்கை, பரிணமைக் கொள்கை என்னும் கொள்கைகள் அரசின் தோற்றத்தைப் பற்றி ஆராய்கின்றன. அவைகளின் தன்மைகளையும் நிறை குறைகளையும் இப்பகுதியில் ஆராயலாம்.

(i) தெய்வீக உரிமைக்கொள்கை (Divine Origin Theory)

அரசின் தோற்றத்தை ஆராயும் கொள்கைகளிலெல்லாம் மிகவும் பழைமையானது தெய்வீக உரிமைக் கொள்கையாகும். இக்கொள்கை அரசு ஆண்டவனுல் ஏற்படுத்தப்பட்ட ஒரு நிறுவனம் என்று கூறுகிறது. இந்த கொள்கை நான்கு கருத்துக்களைத் தெரிவிக்கிறது. முடியாட்சி தெய்வத்தால் கிடைத்த வரப்பிரசாதம் என்றும், அரசாட்சி பரம்பரை ஆட்சி உரிமை என்றும் அரசர்கள் ஆண்டவன் ஒருவனுக்கே கடமைப் பட்டவர்கள் என்றும் சட்டப்படி ஆட்சி செய்யும் அரசனை எதிர்ப்பது பாவம் என்றும் இக்கொள்கை கூறுகிறது. இவ்வாறு தெய்வீக உரிமைக் கொள்கை அரசரின் வரம்பிலா அதிகாரத்தை நிலை நிறுத்துகிறது. அரசன் கடவுளுக்குத்தான் பொறுப்பு உள்ளவன். மக்களுக்கு ஒருக்காலும் பொறுப்புடையவனுகான். கிறிஸ்தவர்களின் வேதாகமத்தின் பழைய ஏற்பாட்டில் ஆண்டவனே எல்லாவகையான அரசியல் அதிகாரத்திற்கும் இருப்பிடம் என்னும் கருத்து தெரிவிக்கப் பட்டுள்ளது. புராதன யூதமக்கள் தெய்வீக உரிமைக் கொள்கையை மிகவும் நம்பி னர்கள். 16ம் 17 ம் நூற்ருண்டுகளில் ஆட்சி செய்து வந்த அரசர்கள் தங்களுடைய ஆட்சி உரிமைக்கு ஆதரமாக இக்கொள்கையை வலியுறுத்தி வந்தனர். குரோஷியஸ், ஹாப்ஸ், லாக்ரூஸோ போன்றவர்கள் இக்கொள்கையைத் தீவிரமாக எதிர்த்தார்கள். தற்காலத்தில் இக்கொள்கையின் முக்கியத்துவம் குறைந்து விட்டது. மக்கள் சம்மதம்தான் அரசியல் அதிகாரத் திற்கு அடிப்படை என்று கூறிய சமூக உடன்பாட்டுக் கொள்கை அரசும் ஆலயமும் தனித்தனியாகப் பிரிந்து ஆலயம் அரசுக்குக் கீழ் கொண்டு வரப்பட்டது, ஜனநாயகத்தின் வளர்ச்சி ஆகியவை தெய்வீக உரிமைக் கொள்கையின் மீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையைக் குறைத்துவிட்டன.

நிறைகள் (Merits)

(i) நாகரிக சமூகத்தில் வாழ்ந்த மனிதர்களின் பணிதலைப் பெற்று சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்ட தெய்வீக உரிமைக் கொள்கை ஆதியில் உதவியாய் இருந்திருக்க வேண்டும்.

(ii) இக்கொள்கை மனிதன் அரசியல் அதிகாரத்திற்குப் பணி வதற்கு அறநெறியைக் காரணமாகக் குறிப்பிடுகிறது. அதாவது உன்னத சக்தியாகக் கருதப்படும் ஆண்டவனின் பிரதிநிதியாக ஆட்சிபுரியும் அரசனின் கட்டளைகளை மீறுவது தவறு என்று உணர்ந்த மக்கள் அரசியல் அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டிருந் தனர் என்று கருத இடமுள்ளது.

குறைகள் (Demerits)

(i) அரசு, மனிதர்களால் ஏற்படுத்தபட்ட ஒரு நிறுவனம். கடவுள்தான் அரசைத் தோற்றுவித்தார், அரசன் அவருடைய பிரதிநிதி என்று கூறுவது வெறும் கற்பனையே. மனிதர்களின் தேவையும் அவனுக்கிருந்த மேம்பட்ட அறிவும்தான் அரசைத் தோன்றச் செய்தன.

(ii) இக்கொள்கை முடியாட்சியை மட்டும்தான் ஆதரிப்பதாய் உள்ளது. அரசன் கடவுளுடைய அவதாரம் என்று கருதும் இக்கொள்கை வேறு எந்த அரசாங்க முறையையும் ஆதரிக்க வில்லை.

(iii) ஆளுகின்ற அரசனை ஆண்டவனுக்குப் பொறுப்புள்ளவன் என்று கூறுவதால் ஆட்சிப் பொறுப்பின்மை ஏற்படுவதற்கு இக் கொள்கை வழிவகுக்கிறது.

(ii) வலிமைக் கொள்கை (Theory of Force)

இக்கொள்கையின் பிரகாரம் உயரிய வலிமையின் விளைவாக அரசு தோன்றியிருக்க வேண்டும் என்று யூகிக்க முடிகிறது. ஆதியில் மனிதர்கள் நடத்திய ஆக்கிரமிப்புகளின் விளைவாக அரசு தோன்றியிருக்க வேண்டும். வரலாறு தரும் செய்தி களிலிருந்து தெரிவது என்னவென்றால், பலம் குறைந்த மனிதக் கூட்டங்களை, பலம்பொருந்திய கூட்டத்தினர் விரட்டிப்பிடித்துத் தங்களுக்கு அடிமைப்படுத்தி அவர்கள் மீது அதிகாரம் செலுத் தினர். அடிமைப்படுத்தப் பட்டவர்கள், அடிமைப்படுத்திய வர்களுக்குப் பணிந்தனர். இவ்வாறு அரசியல் அதிகாரம் பலம் பொருந்தியவர்கள் கொண்டிருந்த வலிமையின் அடிப் படையில் எழுந்து நாளடைவில் இன்று நாம் காணும் அரசும் அதன் அதிகாரமும் தோன்றியிருக்க வேண்டும்.

இக்கொள்கையைப் பலர் ஆதரித்தனர். பிளேட்டோவின் குடியரசில் கிளான்கோன் (Glancon) நீதி வலிமை படைத்தவர் களின் விருப்பப்படி அமைகிறது என்று குறிப்பிடுவதிலிருந்து பிளேட்டோ வலிமைக் கோட்பாட்டிற்கு ஆதரவு தந்திருக்கிறார்

என்று தெரிகிறது. மார்க்ஸ், (Marx) ஏஞ்சல்ஸ் (Engels) போன்ற சமதர்மவாதிகள் கூட இக்கொள்கையை வலியுறுத்தியே தங்களுடைய கருத்தினை வெளியிட்டார்கள். ஜெர்மானிய முற் போக்காளர்களாகிய நிட்சக்கி (Nitschke), டிரட்சக்கி (Trietschke கிளாசிவிட்ஸ் (Cleausewitz) போன்றவர்கள் அரசுக்கு வலிமை சக்தி இருப்பதாகவும் 'கள்உளி மாங்கனுக்கு காடுமேடெல்லாம் தகடுபொடி', (Might is right) என்னும் உண்மை அரசுக்குப் பொருந்தும் என்றும் குறிப்பிட்டுள்ளார்கள். மேலும் ஜெர்மானிய தத்துவஞானியான ஒப்பன் ஹீமர் (Oppen heimer) கூட வலிமைக் கொள்கையை மிகவும் ஆதரித்துள்ளார்.

நிறைகள் (Merits) :-

(i) இக்கொள்கை ஓரளவிற்கு வரலாறு தரும் உண்மைகளின் அடிப்படையில் தோன்றியிருப்பது இதனுடைய ஒரு முக்கிய நிறையாகும். யுத்தங்களும் ஆக்கிரமிப்புகளும், அரசை ஏற் படுத்த பெருந்துணை புரிந்துள்ளன என்பது வரலாறு தரும் உண்மை. வலிமைக்கோட்பாடும் இதையே எடுத்துக்கூறி அரசின் தோற்றத்தை ஆராய்கிறது என்பதால் இக்கொள்கை நம்பக்கூடியதாக உள்ளது.

(ii) அரசுக்கு மிகவும் முக்கியமான இயல்புகளில் ஒன்று வலிமையாகும். வலிமையின்றி எந்த அரசும் செயல்பட முடி யாது. அதாவது சட்டதிட்டங்களை அமலாக்க அரசுக்கு வலிமை தேவைப்படுகிறது. நாட்டுக்கு உள்ளே ஆனாலும் சரி, வெளியே ஆனாலும் சரி சட்டங்களை அமலாக்க அரசுக்கு வலிமை தேவைப் படுகிறது. இந்த வலிமையின் முக்கியத்துவத்தைக் குறிப்பிடுவது இக்கொள்கையின் நிறைகளில் ஒன்றாகும்.

குறைகள் (Demerits)

(i) வலிமைக்கோட்பாடு வலிமைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கிறது. அரசியின் தோற்றத்திற்கு சாதகமாக இருந்த சமூக ஒத்துழைப்பு, மக்கள் சம்மதம், பொது நலன் ஆகிய காரணங்களை இக்கொள்கை ஏற்றுக்கொள்ளவில்லை. துரீன் என்பவர் வலிமையைவிட மக்களுடைய விருப்பின் அடிப் படையில்தான் அரசு அன்று தோன்றியது என்றும், இன்று அரசு நிலைத்து நிற்பதற்கும் அதுவே காரணம் என்றும் குறிப் பிட்டுள்ளார்.

(ii) இக்கொள்கை போரின் அவசியத்தை வலியுறுத்துவதாய் உள்ளது. ஆனால் போரும் ஆக்கிரமிப்பும் அரசை அழித்து

விடக்கூடும் என்பதும் உண்மைதான். போர் தொடுக்கும் ஓர் அரசு அதிக வலிமை உடையதாய் இருக்குமானுல் ஒரு வேளை போர் தொடுக்கப்பட்ட அரசு தனது இறைமையை இழக்க நேரிடலாம்.

(iii) வலிமைக் கோட்பாடு நியாயக் கோட்பாட்டிற்கு எதிராகச் செயல்படக் கூடியது. வலிமையானது நியாயம், நேர்மை என்கிற கோட்பாடுகளின் அடிப்படையில் பிரயோகிக்கப் படுவதில்லை. வலிமை தவருகப்பிரயோகிக்கப்பட்டால் நேர்மை யான அரசாங்கங்கள்கூட கவிழ்ந்துவிடும். அது மட்டு மல்லாமல் வலிமையின் அடிப்படையில் பெறுகின்ற பணிதல் அதிகநாள் நிலைப்பதுமில்லை.

(iii) தாய்வழிக் கொள்கை: (Matriarchal Theory)

தாய்வழிக் கொள்கையும், தந்தைவழிக் கொள்கையும் அரசின் தோற்றத்திற்கு ஆதிகால குடும்ப வாழ்க்கையை அடிப்படையாகக் கூறுகின்றன. தாய்வழிக் கொள்கையின் பிரகாரம் தாய்வழித் தோன்றிய குடும்பமே ஆதியில் தோன்றிய சமூகமாகும். வாரிசும் பிறப்புரிமையும் தாயின்வழியாகவே கணக்கிடப்பட்டது. தாய்வழித் தோன்றிய குடும்பத்தில் தலைமூத்தபெண் குடும்பத் தலைவியாகக் காணப்பட்டாள். ஒரு பெண்ணுக்குப் பல புருஷர்கள் இருந்தனர். ஆஸ்திரேலிய மலை வாசியினர், மலபார் சாதியினர், தென் இந்தியாவில் உள்ள தோடர் என்னும் மலைவாசியினர் போன்ற மக்களிடையே இன்னும் தாய்வழிக் குடும்ப வாழ்க்கை இருந்து வருகிறது. தாய்வழிக் குடும்ப வாழ்க்கையின் இயல்புகள் யாவையெனில் (1) குறுகிய கால மணவாழ்க்கை (2) தாயின் மேன்மையான அதிகாரம் (3) சொத்துரிமையும் குடும்ப அதிகாரமும் பெண்களுக்கே உரியது. (4) வாரிசு பெண்கள் மூலமாக நிர்ணயிக்கப்பட்டது. இக்கொள்கையை மேக்லனன் (Meclennan) மோர்கன் (Morgan) ஜெங்ஸ் (Jenks) போன்றவர்கள் ஆதரித்தனர்.

குறைகள்: (i) இக்கொள்கை குடும்பத்தின் தோற்றத்தை மட்டும் ஆராயப் பயன்படுகிறதே தவிர, அரசின் அதிகாரத்திற்கான ஆதாரங்களை ஆராயத் தவறி விடுகிறது.

(ii) அரசு தோன்றுவதற்குக் காரணமாயிருந்த மற்ற காரியங்களை இக்கொள்கை புறக்கணித்து விடுகிறது.

(iii) பெண்கள் ஆண்களை விட எல்லா விதத்திலும் தாழ்ந்தவர்கள் என்னும் உண்மையை இக்கொள்கை கருத்தில் கொள்ளவில்லை.

நிறை:– இக்கொள்கை அரசின் தோற்றத்தில் குடும்பத்திற்குக் கொடுக்கபட்டுள்ள முக்கியத்துவத்தை உணர்த்துகிறது.

(iv) தந்தைவழிக் கொள்கை (Patriarchal Theory)

தாய்வழிக் கொள்கை போலவே தந்தைவழிக் கொள்கையும் அரசின் தோற்றத்திற்குக் குடும்பத்தை அடிப்படையாகக் கூறுகிறது. ஆதிகாலச் சமூகங்களில் அரசு தோன்றுவதற்கு ஏற்ற சூழ்நிலையைக் குடும்ப வாழ்க்கைதான் ஏற்படுத்தியிருக்கிறது. இக்கொள்கையின் படி தந்தையைத் தலைவராகக் கொண்ட குடும்பம் கோத்திரம் என்னும் பெயரிணைப்பெற்று பெரிய மக்கள் குலமாக விரிந்து நாளடைவில் அரசாக வளர்ச்சி அடைந்ததாக வரலாறு கூறுகிறது. முதலில் மனிதன் தன்னுடைய மனைவி அல்லது மனைவியருடனும் குழந்தைகளுடனும் குடும்பத்தை ஏற்படுத்தினன். இந்தக் குடும்பத்தில் தந்தையின் அதிகாரமே மேன்மையானதாகக் கருதப்பட்டது. இத்தகைய குடும்பம் தந்தைக்கு ஓர் அரசனுக்குக் கொடுக்கவேண்டிய இடத்தையும் மரியாதையையும் அளித்திருந்தது. ஆரம்பத்தில் சிறிதாக இருந்த குடும்பம் நாளடைவில் அளவில் பெரியதாக வளர்ந்துவிட்ட பிறகும் முதலில் வணங்கிய அதே தலைமூத்த ஆண்மகனுக்கே மதிப்பும் மரியாதையும் கொடுக்கலாயிற்று. அரிஸ்டாட்டில்கூட குடும்பத்தின் விரிவே அரசு என்று கூறியிருப்பதிலிருந்து தந்தை வழி அல்லது தாய்வழிக் குடும்பத்தின் முக்கியத்துவம் தெரிய வருகிறது. சர் ஹென்றி மேயின் (Sir Henry Maine) தந்தைவழிக் கொள்கையைத் தீவிரமாக ஆதரித்தவர். இவர் கிறிஸ்தவர்களின் வேதாகமத்தில் தந்தைவழிக் கொள்கைக்கு ஆதாரங்கள் இருப்பதாகவும் இந்தியாவில் உள்ள இந்துக் குடும்பங்கள் தந்தைவழிக் கொள்கையை விளக்கும் நல்ல உதாரணங்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார். தந்தைவழிக் கொள்கையின் முக்கிய அம்சங்களாக 1) ஆண்வாரிசு 2) நிரந்தரமான மணவாழ்க்கை 3) தந்தையின் மேன்மையான அதிகாரம் ஆகியவற்றைக் கூறலாம்.

நிறை:- தந்தைவழிக் கொள்கை ஆண்வாரிசுவின் முக்கியத்துவத்தையும் நிரந்தர மணவாழ்க்கையின் நிறையையும் வலியுறுத்துகிறது. அரசின் தோற்றத்திற்குக் குடும்பத்தை மூல காரணமாக குறிப்பிடுவதே இக்கொள்கையின் முக்கிய நிறையாகும்.

குறைகள்:– (i) தந்தைவழிக் குடும்பம் உலகெங்கும் காணப்பட்டது என்பது உண்மையாகாது.

(ii) குடும்பத்தை விட குலமே அரசு தோன்றுவதற்கு முக்கிய காரணமாக இருந்திருக்க வேண்டும் என்று ஆஸ்திரேலியாவிலும் மலேயா பிரதேசங்களிலும் உள்ள புராதன சமூகங்களை ஆராய்ந்து ஜெங்ஸ் (Jenks) போன்றவர்கள் கருத்து தெரிவித்துள்ளனர்.

(iii) இக்கொள்கை சமூகத்தின் தோற்றத்தை மட்டுமே விளக்குகிறது. அரசு எவ்வாறு தோன்றியது என்பதை விளக்கத் தவறி விடுகிறது.

### தாய்வழிக் கொள்கைக்கும் தந்தைவழிக் கொள்கைக்கும் உள்ள வேறுபாடு (Difference betweeu Matriarchal and Patriorcbal Theories)

| தந்தைவழிக் கொள்கை | தாய்வழிக் கொள்கை |
|---|---|
| 1. கொள்கையை வெளியிட்டவர் சர் ஹென்றி மெயின் என்பவர். | 1. கொள்கையை வெளியிட்டவர் மேக்லெனன், மோர்கன், ஜெங்ஸ் என்பவர்கள். |
| 2. ஆதிகால குடும்பம் தந்தைவழித் தோன்றியது, அதாவது குடும்பத்தின் தலைவர் தந்தையாவர். | 2. ஆதிகால குடும்பம் தாய் வழித் தோன்றியது, அதாவது குடும்பத்தின் தலைவி தாயாவாள். |
| 3. நிரந்தர மணவாழ்க்கை. | 3. குறுகிய கால நிலையற்ற மணவாழ்க்கை. |
| 4. வாரிசு ஆண்மகன் மூலம் நிர்ணயிக்கப்பட்டது. | 4. வாரிசு பெண்மகள் மூலம் நிர்ணயிக்கப்பட்டது. |
| 5. புராதன இந்தியாவில் காணப்பட்ட குடும்பங்களையும், புராதன ரோம் நாட்டில் காணப்பட்ட பேட்ரியா பொட்டஸ்டாஸ் (Patria, Potestas) குடும்பங்களையும் உதாரணமாகக்கூறலாம். | 5. ஆஸ்திரேலியாவில் உள்ள தாய்வழிக் குடும்பங்களையும், இந்தியாவில் வசிக்கும் மலபார் மக்களையும் தோடார் ஜாதியினரையும் உதாரணமாகக் கூறலாம். |
| 6. குடும்பங்கள் கோத்திரங்களாகவும், கோத்திரங்கள் குலங்களாகவும் | 6. குலம் தான் ஆதியில் தோன்றிய சமூகக்கூறு. குலம் கோத்திரங்களாகப் |

| | |
|---|---|
| வளர்ச்சியடைந்து முடிவில் அரசு தோன்றிற்று. | பிரிந்து, கோத்திரங்கள் பல குடும்பங்களை ஏற்படுத்தின. பல குடும்பங்கள் சேர்ந்து அரசை ஏற்படுத்தியது. |

(v) சமூக உடன்பாட்டுக் கொள்கை (The Social Contract Theory)

சமூக உடன்பாட்டுக் கொள்கை மனித சமூகத்தில் ஆதியில் அரசு என்று ஒரு நிறுவனம் இல்லை என்றும், இயற்கை நிலையில் மனிதர்களின் நடத்தையை ஒழுங்குபடுத்த இயற்கை சட்டத்தைத் தவிர வேறு எந்த அரசியல் சட்டமும் இல்லை என்றும், நாகரீகத்தின் ஒரு கட்டத்தில் இயற்கை நிலையில் வாழ்ந்த மக்கள் சமூக உடன்படிக்கை ஒன்றை ஏற்படுத்தி அதன் மூலமாக அரசு என்னும் நிறுவனத்தை ஸ்தாபித்தனர் என்றும் கூறுகிறது. சமூக உடன்பாட்டுக் கொள்கையைத் தீவிரமாக எடுத்துரைத்தவர்கள் மூவர். அவர்கள் தாமஸ் ஹாப்ஸ், ஜான்லாக், ஜீன ஜேக்கியஸ் ரூஸோ ஆகியோராவர். இவர்கள் மூவரும் ஒரே கருத்தினை வெளியிட்டாலும் அவர்கள் வெவ்வேறு முறையில் தங்களுடைய கருத்தினை வெளியிட்டுள்ளனர்.

## ஹாப்ஸின் சமூக உடன்பாட்டுக் கொள்கை
## (Social Contract Theory of Hobbes)

(i) இயற்கை நிலை (State of Nature)

ஹாப்ஸ் 'லெவியாதான்' என்னும் தனது நூலில் சமூகம் தோன்றுவதற்கு முன்னுல் மனிதன் மிகவும் கேவலமான நிலையில் மிருகத்தைப் போல் வாழ்ந்திருக்கிருன் என்னும் கருத்தைத் தெரிவிக்கிருர். அவருடைய கருத்துப்படி இயற்கை நிலையில் வாழ்ந்த மனிதனுக்கு நல்லது கெட்டது என்று பாகுபடுத்தும் அறிவு இல்லாதிருந்தது. மனிதனின் மனத்தில் எப்பொழுதும் அச்சமும் சுயநல உணர்வுகளுமே குடிகொண்டிருந்தன. அவனுக்கு இருந்த ஆசைகளுக்கு அளவே இல்லை. அவன் வாழ்ந்த இயற்கை நிலையில் அமைதியே இல்லை. ஓயாத சண்டைகளுக்கு மத்தியில் அவன் எப்படி அமைதியாக வாழ முடியும்?

(ii) உடன்பாடு (Contract)

ஆபத்தான அமைதியற்ற இயற்கை நிலையில் வாழ்ந்த மக்கள் அந்த மோசமான சூழ்நிலையிலிருந்து வெளியேற

விரும்பினர். ஆபத்திலிருந்து தப்ப விரும்பியவர்கள் ஒரு சீரியல் சமூகத்தை ஏற்படுத்தத் தீர்மானித்தனர். இயற்கை உரிமைகளை ஒழுங்காக அனுபவிக்க இயற்கை நிலை அனுமதிக்க வில்லை. எனவே, அந்த இயற்கை உரிமைகளை ஒருவரிடமோ அல்லது சிலரைக் கொண்ட ஒரு குழுவிடமோ ஒப்படைத்துவிட்டு அவர்கள் இடும் கட்டளைகளை ஒரு உடன்படிக்கையின் மூலமாகப் பணிய ஒப்புக் கொண்டனர். இந்த உடன்படிக்கை ஒவ்வொரு வரும் ஒவ்வொருவருடனும் ஏற்படுத்திக் கொண்ட உடன் படிக்கையாகும். இவ்வுடன்படிக்கைதான் சமூக உடன்படிக்கை என்று அழைக்கப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும் ஒவ்வோர் அடுத்த மனிதனிடம் இவ்வாறு கூறினான், "நான் என்னுடைய உரிமையை இந்த மனிதனிடமோ அல்லது இந்த மனித குழுவினிடமோ (அரசாங்கம்) தந்து, இவனுக்கோ அல்லது இந்த குழுவிற்கோ அதிகாரம் அளிப்பது போல் நீயும் உன்னுடைய உரிமையை இவனுக்கு அளித்து இவனுடைய செய்கைகளுக்கு என்னைப் போல் அதிகாரம் அளிக்க வேண்டும்". இந்த உடன்படிக்கையின் மூலமாகத்தான் அரசு தோன்றியது. இவ்வாறு ஏற்படுத்திய உடன்படிக்கையின் மூலமாக இயற்கை உரிமைகள் ஒரு மனிதனிடமோ அல்லது ஒரு குழுவினிடமோ ஒப்படைக்கப்பட்டது. அதிகாரத்தையும் உரிமைகளையும் பெற்றுக்கொண்ட அந்த மனிதனே அல்லது சிலரைக் கொண்ட குழுவோ இறைமையாளராக ஏற்றுக் கொள்ளப்பட்டது. மக்கள் இந்த இறைமையாளரின் கட்டளைகளுக்குப் பணிந்து நடந்தனர். ஹாப்ஸின் சமூக உடன்பாட்டின் ஒரு முக்கிய காரியம் என்னவென்றால், இறைமையாளர் உடன்பாட்டுக்குக் கட்டுப்பட்டவரல்லர். மக்களை மட்டுமே உடன்பாடு கட்டுப் படுத்தும். எனவே, இறைமையாளர் வரம்பிலா அதிகாரம் செலுத்த உரிமை பெற்றிருந்தார். இதிலிருந்து இந்த சமூக உடன்பாடு முடியாட்சியை ஆதரிக்கிறது என்பது விளங்கும்.

ஹாப்ஸ் கூறும் சமூக உடன்பாட்டின் நிறை குறைகளைக் கீழ் கண்டவாறு விளக்கலாம்.

நிறைகள்

(i) இறைமை பற்றிய கருத்தை அரசியல் அறிவுக்கு அளித்த பெருமை ஹாப்ஸின் சமூக உடன்பாட்டையே சாரும். ஹாப்ஸின் இறைமைக் கருத்தைத் தழுவியே ஆஸ்டின் தனது சட்ட இறைமைக் கருத்தை விளக்கியுள்ளார்.

(ii) ஹாப்ஸின் சமூக உடன் பாட்டுக் கொள்கை அறிவியல் ரீதியில் அமைந்துள்ளது.

**குறைகள்**

(i) ஹாப்ஸ் மனிதனின் வாழ்க்கையை மிகவும் கேவலமான முறையில் சித்தரிக்கிறுர். அவர் கூறும் இயற்கை நிலை வாழ்க்கை நம்பக் கூடியதாக இல்லை.

(ii) மனிதன் சுயநலமிதான் என்ருலும் அவனிடம் மற்றவர் களோடு ஒத்துழைக்கும் குணமும் இருக்கிறது என்பதை இக்கொள்கை கருத்தில் கொள்ளவில்லை.

(iii) அரசுக்கும் அரசாங்கத்திற்கும் உள்ள வேறுபாட்டினை விளக்காதது இக்கொள்கையின் ஒரு பெருங் குறையாக உள்ளது.

(iv) உடன்பாடு என்று ஒன்று ஏற்பட்டால் அதற்கு இரு கட்சியினர் இருப்பர். இரு கட்சியினரையுமே அந்த உடன்பாடு கட்டுப்படுத்த வல்லது. ஆனல் ஹாப்ஸின் உடன்பாட்டுக்கு மக்கள் மட்டும் தான் கட்டுப்பட்டவர்கள். இறைமையாளரை அந்த உடன்பாடு கொஞ்சமும் கட்டுப்படுத்துவதில்லை.

(v) ஹாப்ஸின் சமூக உடன்பாடு சுதந்திரம், ஜனநாயகம் என்னும் கருத்துக்களுக்கு எதிரானது. மக்களுக்கு விரோதமாகச் செயல்பட்டால் கூட இறைமையாளரை எதிர்க்க மக்களுக்கு உரிமை கிடையாது.

(vi) ஹாப்ஸ் தன் உடன்பாட்டில் சட்ட இறைமையைப் பற்றி மட்டும் குறிப்பிடுகின்றனர். அதற்கும் மேலான அரசியல் இறைமையைப் பற்றி எதுவுமே கூறவில்லை.

## லாக்கின் சமூக உடன்பாட்டுக் கொள்கை
## (Social Contract Theory of Locke)

(i) இயற்கை நிலை (State of Nature)

லாக்கின் சமூக உடன்பாட்டுக் கொள்கையிலும் இயற்கை நிலைபற்றி கூறப்பட்டுள்ளது. ஆனல் இந்த இயற்கை நிலை ஹாப்ஸ் விவரித்துள்ள இயற்கை நிலையைப்போல் கேவலமான தாக இல்லை. லாக்கின் இயற்கை நிலையில் வாழ்ந்த மனிதன் சுயநலமியாகவோ அல்லது மிருகத்தனமாகவோ வாழவில்லை. அதற்கு எதிராக லாக்கின் மனிதன் எல்லோருடனும் அன்பாகப் பழகுகிருன். அமைதியும் ஒத்துழைப்பும் அந்த இயற்கை நிலையில் காணப்பட்டது. ஒருவருடன் ஒருவர் ஓயாமல் சண்டையிட்டுக் கொள்ளவில்லை. சுதந்திரமும் சமத்துவமும் எல்லோராலும் அனுபவிக்க முடிந்தது எவ்வளவோ உரிமைகளை லாக்கின் இயற்கை நிலையில்

வாழ்ந்த மனிதன் அனுபவித்து வந்தாலும் ஒரு சில கஷ்டங்களும் இருந்தன. இயற்கை நிலையிலிருந்த குறைகள் யாவையெனில், முதலாவதாகச் சட்டங்கள் தெளிவாக இல்லை. இரண்டாவதாக, சட்டங்களை அமலாக்க முறையான கருவி (அரசாங்கம்) எதுவும் இல்லை. மூன்றாவதாக, வழக்குகளைத் தீர்த்து வைக்கவல்ல அதிகாரம் எதுவுமில்லை. இக்குறைபாடுகளை நீக்க இரண்டு உடன்பாடுகள் ஏற்படுத்தப்பட்டன. அந்த உடன்பாடுகள் சமூக உடன்பாடு என்றும், அரசாங்க உடன்பாடு என்றும் கூறப்படுகின்றன

(ii) சமூக உடன்பாடு (Social contract)

இயற்கை நிலையில் காணப்பட்ட கஷ்டங்களைப் போக்கிப் பாதுகாப்பை ஏற்படுத்த மனிதர்கள் ஒருவரோடு ஒருவர் ஒரு உடன்படிக்கையை ஏற்படுத்தி, அதன் மூலமாக ஒரு சீரியல் சமூகத்தை ஏற்படுத்தினர். லாக்கின் கொள்கையில் இரண்டு உடன்பாடுகள் ஏற்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. முதல் உடன்படிக்கையின் மூலமாக இயற்கை நிலை மறைந்து சீரியல் சமூகமாகிய அரசு தோன்றுகிறது. சீரியல் சமூகத்தை ஏற்படுத்துவதற்காக மனிதன் தன்னுடைய உரிமைகள் சிலவற்றைச் சமூகத்திடம் ஒப்படைத்து விடுகிறான். ஹாப்ஸின் உடன்பாட்டில் கூறப்படுவது போல் இறைமையாளர் என்று ஒரு நபரிடமோ அல்லது சிலரைக் கொண்ட ஒரு குழுவிடமோ உரிமைகள் ஒப்படைக்கப்படவில்லை. இவ்விதமாக லாக் மக்களுடைய இறைமைக்கு முக்கியத்துவம் தருகிறார்.

(iii) அரசாங்க உடன்பாடு (Government contract)

லாக்கின் இரண்டாவது உடன்படிக்கை அரசாங்க உடன்பாடாகும். முதல் உடன்பாட்டின் விளைவாகச் சீரியல் சமூகம் தீர்மானங்களையும் சட்ட திட்டங்களையும் அமலாக்குவதற்கென ஒரு அதிகாரத்தை ஏற்படுத்தியது. இதுவே அரசாங்கம் தோன்றுவதற்குக் காரணமாயிற்று. மக்கள் தங்களிலிருந்து ஒருவரை ஆட்சியாளராகத் தெரிந்தெடுத்து அவரிடம் அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பினைத் தந்தனர். அரசாங்க உடன்பாடு ஆட்சியாளருக்கு வரம்பில்லா அதிகாரத்தைக் கொடுக்கவில்லை. ஆட்சியாளர் மக்களுடைய விருப்புக்கு இணங்கியும் அவர்களுடைய முடிவுகளின் அடிப்படையிலும் தான் ஆட்சி செய்ய அனுமதிக்கப்பட்டார். சீரியல் சமூகத்தின் விருப்பங்களுக்கு எதிராகச் செயல்பட்ட அரசாங்கத்தை நீக்கிவிட மக்கள் சமூகத்திற்குச் சகல உரிமையும் உண்டு.

இவ்வாறு சமூகஉடன்பாடு அரசாங்க உடன்பாட்டைக் காட்டிலும் உயர்ந்ததாகவும் மக்கள் சமூகம் அரசாங்கத்தைவிட மேன்மை வாய்ந்ததாகவும் உள்ளது. லாக்கின் அரசாங்கம் வரம்பிற்குட்பட்ட முடியாட்சியைத் தோற்றுவிக்கிறது. மேலும் லாக்கு சட்டமியற்றும் அதிகாரம், ஆட்சி செய்யும் அதிகாரம், கூட்டமைவு அதிகாரம் என மூன்று வகை அதிகாரங்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சட்டமியற்றும் அதிகாரம்தான் எல்லாவற்றிற்கும் மேலானது. ஏனென்றால் சட்டமியற்றும் அதிகாரத்தின் மூலமாகத்தான் மக்கள் சமூகத்தின் விருப்பு தெரிவிக்கப்படுகிறது. மக்கள் சட்டமியற்றும் அதிகாரத்தை விட உயர்ந்தவர்கள். இறுதி அதிகாரம் அவர்களிடமே உள்ளது. ஆட்சி செய்யும் அதிகாரம் நீதி நிருவாக அதிகாரத்தையும் உள் அடக்கும். ஆனால் ஆட்சி செய்யும் அதிகாரம் சட்டமியற்றும் அதிகாரத்திலிருந்து தனித்து இருக்க வேண்டும். கூட்டமைவு அதிகாரம் உடன்படிக்கைகள் ஏற்படுத்துவதற்கான அதிகாரமாகும்.

லாக் கூறும் இந்த சமூக உடன்பாட்டுக் கொள்கையின் நிறை குறைகளைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

நிறைகள்

(i) சமூகத்திற்கும் அரசிற்கும் உள்ள வித்தியாசத்தையும் அரசிற்கும் அரசாங்கத்திற்கும் உள்ள வித்தியாசத்தையும் லாக் நன்கு விளக்கியுள்ளார்.

(ii) மக்களுடைய சம்மதத்தின் அடிப்படையில் அரசாங்கம் தோன்றுவதாகக் குறிப்பிடுவது லாக்கின் கொள்கையில் காணப்படும் சிறப்பாகும்.

(iii) சட்ட இறைமைக்கும் மேலாக விளங்கும் அரசியல் இறைமைக் கருத்தை முதன் முதலில் அறிவித்த பெருமை லாக்குக்கே உரியது.

(iv) மான்டேஸ்கியூ குறிப்பிட்ட அதிகாரம் பிரிவினைக் கொள்கையை லாக்கின் கொள்கை முன்கூட்டியே அறிவித்துள்ளது. சட்டமியற்றும் அதிகாரம், ஆட்சி செய்யும் அதிகாரம், கூட்டமைவு அதிகாரம் என அரசாங்கத்தின் அதிகாரம் மூவகைப்படும் என்று விளக்கப்பட்டுள்ளது.

குறைகள்:-

(i) மக்கள் ஆரம்பகாலத்தில் இரு உடன்படிக்கைகளை ஏற்படுத்தியிருப்பார்களா என்பது சந்தேகத்திற்குரிய காரியமாக உள்ளது,

(ii) லாக் இறைமை யாரிடம் உள்ளது என்பதைத் திட்ட வட்டமாகக் கூறவில்லை. மேலும், இறைமையின் பல வகைகளைக் குறிப்பிடவில்லை. ஆளுபவர் மக்களுடைய சம்மதத்திற்கு இணங்க ஆட்சி செய்ய வேண்டும் என்று கூறும் லாக்கு இறைமை, மக்களிடமே உள்ளது என்று திட்ட வட்டமாக கூறத் தவறிவிடுகிறார். ஹாப்ஸ் கூறிய சட்ட இறைமையைப் பற்றி எதுவுமே லாக் கூறவில்லை. எனவே லாக் கூறும் இறைமை அரசாங்கத்திடம் உள்ளதா அல்லது மக்களிடம் உள்ளதா என்று புரிந்து கொள்ள முடியவில்லை.

(iii) லாக் இயற்கை நிலையில் வாழ்ந்த மக்கள் இயற்கை உரிமைகளை அனுபவித்து வந்ததாகக் கூறுவது நம்ப முடியா மாலிருக்கிறது. பெந்தம் என்பவர், இயற்கை நிலையில் மனிதன் இயற்கை உரிமையை அனுபவித்தான் என்று கூறுவது தவறு என்று கருதுகிறார்.

## ரூசோவின் சமூக உடன்பாட்டுக் கொள்கை
## (Social Contract Theory of Rousseau)

(i) இயற்கை நிலை (State of Nature)

ரூசோவின் இயற்கை நிலையில் வாழ்ந்த மனிதன் ஓர் உன்னத உயிரினமாகக் காட்சியளிக்கிறான். அவன் களங்க மற்றவனாகவும், எளிய வாழ்க்கையை வாழ்பவனாகவும், இன்பம் அனுபவிப்பவனாகவும் காணப்பட்டான் என்று ரூசோ கூறுகிறார். ஹாப்சும் லாக்கும் கூறிய கருத்துக்களுக்கு மாறான கருத்தை ரூசோ தருகிறார். ரூசோவின் இயற்கை மனிதன் தன்னியல் பாகவே அன்புடையவனாகவும், மற்றவர்களுக்கு இரங்கும் சுபாவ முடையவனாகவும் வாழ்பவன். ஆனால் ரூசோவின் இயற்கை மனிதன் தான் அனுபவித்து வந்த இன்பமான வாழ்க்கையை சமூகசட்டங்கள் இல்லாத காரணத்தால் தொடர்ந்து அனுபவிக்க முடியவில்லை. ரூசோ அதற்குச் சில காரணங்களைக் குறிப்பிடு கிறார். முதலாவதாக, மக்கள்தொகை பெருகியதும் அறிவு வளர்ச்சியும் இயற்கை மனிதனின் இன்பம் அழிவதற்கு காரண மாகியது. இரண்டாவதாக, இயற்கை நிலையில் அனுபவிக்கப் பட்ட சமத்துவமானது, குடும்பம், தனியார் சொத்து போன்ற சமூக நிறுவனங்கள் தோன்றிய பொழுது மறைந்து விட்டது. களங்க மற்றவர்களாக விளங்கியவர்கள் சுயநலமிகளாக மாறி ''உன்னுடையது'' ''என்னுடையது'' என்று பேச ஆரம்பித்து விட்டார்கள். சிலருக்குக் கூடுதல் சொத்துக்கள் கிடைத்தன. சிலருக்குக் குறைவாகக் கிடைத்தன. வலிமையுடையவர்கள் கூடுதலாகப் பெற்றுக் கொண்டனர். எளியவர்கள் குறைவாகத்

தான் பெற முடிந்தது. இவ்வாறு பணக்காரன், ஏழை என்ற வேறுபாடு இயற்கை நிலையில் தோன்ற ஆரம்பித்தது. மூன்றாவதாக, பேராசையும் சுயநலமும் கொண்ட மனிதன் ஒருவனோடு ஒருவன் சண்டையிட்டுக் கொண்டான். இதன் விளைவாக இயற்கை நிலையின் ஆனந்த மயமான வாழ்க்கை அழிய ஆரம்பித்தது. எனவே, இந்த அழிவு நிலையிலிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்கென ஒரு உடன்படிக்கையை ஏற்படுத்தி அதன் மூலமாய்ச் சீரியல் சமூகத்தைத் தோற்றுவிக்கிறான்.

(ii) சமூக உடன்பாடு (Social contract)

ரூசோவின் சமூக உடன்பாடு யாதெனில், ஒவ்வொருவரும் எல்லோருடனும், எல்லோரும் ஒவ்வொருவருடனும் உடன்படிக்கை செய்து கொண்டனர். இவ்வாறு செய்து கொள்ளும் உடன்படிக்கையின் மூலம் தோன்றும் சீரியல் சமூகத்தில் அல்லது அரசில் எல்லோரும் ஒவ்வொருவரையும் ஒவ்வொருவரும் எல்லோரையும் நம்பி வாழ்ந்தனர். உடன்படிக்கை பொது நன்மைக்காகவும் ஒவ்வொருவருடைய நன்மைக்காகவும் ஏற்படுத்தப்பட்டது. சமூக உடன்பாட்டை ஏற்படுத்தியபொழுது மனிதன் தன்னுடைய இயற்கை நிலை இன்பத்தை இழந்தான்.

(iii) ரூசோவின் பொது விருப்புக் கருத்து (Rousseau's Idea of General Will)

ரூசோவின் சமூக உடன்பாட்டுக் கொள்கையின் சாராம் சமாகப் பொது விருப்பு விளங்குகிறது. தனிமனிதன் ஓர் உடன்பாட்டின் மூலமாகச் சீரியல் சமூகம் ஒன்றின் அங்கத்தினராகி விடுகிறான். அவ்வாறு சமூகத்தில் அங்கத்தினராகி விடுகின்ற அவன் பொது விருப்புக்குத் தன்னுடைய உரிமைகள் யாவற்றையும் கொடுத்து விடுகிறான். பொது விருப்பு என்பது உடன்பாட்டிற்கு இணங்கியவர்கள் அனைவருடைய விருப்பாகும். பொது விருப்பை எல்லோருடைய விருப்பு என்றும் கூறுவதற்கில்லை. மனிதனின் உள்ளத்தின் அடியில் காணப்படும் மனச்சாட்சியின் உணர்த்துதலைப் பொது விருப்பாகக் கொள்ளலாம். இந்தப் பொது விருப்பு பொதுநலனைக் குறிக்கோளாகக் கொண்டு அமைகிறது. எல்லோருடைய ஏகமனதாக அமையும் விருப்பு பொது விருப்பாகாது. ஏகமனதாகத் தெரிவிக்கப்பட்ட விருப்பு உடன்பாட்டை ஏற்படுத்தும்பொழுது மட்டும்தான் தேவைப்படுகிறது. உடன்பாடு ஏற்பட்டு அரசு அமைக்கப்பட்ட பிற்பாடு தேவைப்படுவதெல்லாம் எல்லா மக்களின் சம்மதமே. இங்குச் சம்மதம்

எனப்படுவது மனிதன் பெற்றிருக்கும் மனச்சாட்சியின் உண்மையான உணர்தலேயாகும்.

தனி மனிதனின் சுயவிருப்பு பொதுவிருப்பில் சேராது. பொதுவிருப்பு ஒரு குறிப்பிட்ட தனி மனிதனின் நலனையோ அல்லது ஒரு தனிப்பட்ட கூட்டத்தினரின் நலனையோ முன்னேற்றுவதில் ஆர்வம் காட்டாது. பொது விருப்பின் முக்கிய குறிக்கோள் பொது நலனேயாகும். தனி மனிதன் ஒருவனின் மேம்பட்ட விருப்புதான் பொது விருப்பாக அமைய முடியும். பொது விருப்பு எல்லோராலும் மதிக்கப்படுகிறது. தனி மனிதனின் சுயநலம் பேணாத பொது விருப்புதான் அவனுடைய உண்மையான விருப்பாகக் கருதப்படுகிறது. தனி மனிதனின் இந்த உண்மை விருப்பின் பிரதிபலிப்பான விருப்புதான் எல்லோராலும் விரும்பிப் போற்றப்படும் புண்ணியவிருப்பாகும்

பொது விருப்பைப் பின்பற்ற மறுக்கும் தனி மனிதனைத் தண்டிப்பது நியாயமான செயலாகும். பொது விருப்புக்கு எதிராகச் செயல்படுகின்றவரை அரசு தனது வலிமையின் உதவியால் தண்டிக்க வேண்டும். பொது விருப்பு தனி மனிதனின் உண்மை விருப்பு என்ற முறையில் பொது விருப்பை மீறியவர் தண்டிக்கப்பட வேண்டும் என்பது சரிதான். பொது விருப்பு பொது நன்மையை முன்னேற்றுவதை குறிக்கோளாகக் கொள்வதால் அது சரியானதும் முறையானதுமான விருப்பாகும், எனவேதான் பொது விருப்பை மீறுவது குற்றமான செயலெனக் கருதமுடிகிறது.

ரூசோ, தனிமனிதன் பொது விருப்பிற்குப் பணிய வேண்டும் என்று கூறி அரசிற்கு மக்கள் நாணயமுடைய வர்களாக நடத்தல் வேண்டும் என்னும் உண்மையைத் தெளிவாக்குகிறார். அரசு அதன்கண் வாழும் மக்களின் நலனையும் அவர்கள் அமைக்கும் பலவிதமான சங்கங்களின் நலனையும் கருத்தில் கொள்வதால் அரசே மேன்மையுடையது. எனவே சங்கங்களுக்குப் பணிவதை விட கூடுதலாகக் அரசின் சட்டங்களுக்குப் பணிய வேண்டும் என்று ரூசோ கருதுகிறார்.

ரூசோவின் பொது விருப்புக் கருத்தின்படி சட்டங்கள் யாவும் பொது விருப்பின் பிரதிபலிப்பாகும். பொது விருப்பை உருவாக்குபவன் என்ற முறையில் சட்டங்களை இயற்றுபவனாகவும் தனி மனிதன் காணப்படுகிறான் அதே பொது விருப்பிற்குத் தன்னுடைய சுய உரிமைகளை அளித்து

விடுவதால் அவன் அந்தப் பொது விருப்பிற்குப் பணியவேண்டியவனுகி விடுகிருன்.

பொது விருப்பின் அடிப்படையில் அரசு அமைந்துள்ளதால் தனி மனிதனின் உயிருக்கும் உடைமைக்கும் அதிகபாதுகாப்பு கிடைக்கிறது. மேலும் பொது விருப்பு தனிமனிதனுக்கு சுதந்திரமும் சமத்துவமும் அளிக்கிறது.

பொது விருப்பு எல்லோருடைய உண்மை விருப்பு என்பதால் எல்லோரும் அரசியலில் நேரடியாகப் பங்கு கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகிறது. எல்லோரும் அரசியலில் நேரடியாகப்பங்கு கொள்ள அளவில் பெரிய அரசுகள் இடமளிப்பதில்லை. அரசு அளவில் சிறியதாக இருந்தால்தான் பொது விருப்பு உண்மையானமுறையில் செயல்பட முடியும். எனவே, ரூசோவின் பொது விருப்புக் கருத்து பண்டைய கிரேக்க நகர அரசுகள் போன்ற சிறிய அரசுகளை ஆதரிப்பதாக உள்ளது.

நிறைகள் :-

(i) ரூசோவின் கருத்து பொது இறைமைக்கு முக்கியத்துவம் அளிக்கிறது. மக்கள் அரசாங்கத்தை ஆக்கவும் அழிக்கவும் உரிமை பெற்றிருக்கிருர்கள் என்னும் ஜனநாயகக் கருத்திற்கு முக்கியத்துவம் தருவது ரூசோவின் சமூக உடன்பாட்டுக் கொள்கையின் சிறப்பாகும்.

(ii) வலிமையை விட விருப்பே அரசு ஏற்படுவதற்கான காரணமாகக் கூறப்படுவது ஒரு முக்கிய நிறையாகும்.

(iii) ரூசோவின் சமூக உடன்பாட்டுக் கொள்கை வரம்பிலா முடியாட்சியை ஒழித்து மக்களாட்சிக் கருத்தை நிலைநாட்டுகிறது. சுதந்திரமும் சமத்துவமும் ரூசோ ஆதரிக்கும் மக்களாட்சிக் கருத்துக்களாகும்.

குறைகள்.

(i) எல்லோருடைய விருப்பிற்கும் பொதுவிருப்பிற்கும் இடையே தெளிவான வேறுபாட்டைக் காணமுடியாத நிலையில் அரசியல் ஆராய்ச்சியாளர்க்குப் பொது விருப்புக் கருத்து பெருங் குழப்பத்தை ஏற்படுத்துவதாக உள்ளது.

(ii) ரூசோவின் பொது விருப்புக் கருத்தை அப்படியே பின்பற்றினுல் நிலையான அரசாங்கம் ஏற்படுவது கடினம். ஏனென்ருல் பொது விருப்பு பெரும்பான்மையினரின் விருப்பைக் குறிக்காமல் எல்லா மக்களின் உண்மை விருப்பாக உள்ளது.

(iii) ரூசோ இயற்கை நிலையில் வாழ்ந்த மனிதர் உரிமைகளையும் சமத்துவத்தையும் அனுபவித்து வந்ததாகக் கூறுகிறார். உரிமைகளும், சமத்துவமும் கட்டுப்பாடுகள் இல்லாத ஒரு சமூகத்தில் அனுபவிக்க முடிந்தவை என்று கூறுவது நம்புவதற்கில்லை.

(vi) வரலாற்றுக் கொள்கை அல்லது பரிணாமக் கொள்கை (Historical or Evolutionary Theory)

எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட, ஒரு கொள்கையாக வரலாற்றுக் கொள்கை காணப்படுகிறது. இக்கொள்கையை பரிணாமக்கொள்கை என்றும் கூறலாம். அரசு தெய்வம் தந்த பரிசும் இல்லை, மனிதனுடைய படைப்பும் இல்லை, அல்லது குடும்பத்தின் விரிவான ஒரு தோற்றமாகவோ, வலிமையின் விளைவாகவோ அரசைக் கருதமுடியாது என்பதே இக்கொள்கையின் முடிவு. அரசு திடீரெனத் தோன்றிவிடவில்லை. அது படிப்படியாய்ப் பல சக்திகளின் விளைவாகத் தோன்றியது என்று இக் கொள்கை கருதுகிறது. பர்ஜஸ் (Burgess) என்பவர் கூறுகின்றபடி அரசு தொடர்ச்சியாகவும், படிப்படியாகவும் வளர்ந்த மனித சமூகமாகும். மனித சமூகம் அரசாக வளர்வதற்குப் பல காரியங்கள் காரணமாயிருந்தன. அவைகளைக் கீழ்க்கண்டவாறு ஆராயலாம்.

(i) குடும்பத் தொடர்புகள் (Family Ties)

குடும்பத் தொடர்பு அரசின் பரிணாமத்திற்குப் பெரிதும் உதவிற்று. ஒரே குடும்பத்தில் தோன்றிய அனைவரும் இரத்த பாசத்தால் கட்டுண்டு கிடந்தனர். பொது உணர்வு, பொதுக் குறிக்கோள், பொது விருப்பு போன்ற உயர்ந்த எண்ணங்கள் தோன்றுவதற்குக் குடும்ப உறவுகள் காரணமாயிருந்தன. குடும்பம் கோத்திரமாகவோ, குலமாகவோ, விரிந்த பொழுது அவைகளின் அங்கத்தினர்களிடையே பொது உணர்வு ஏற்படுவதற்குக் குடும்ப உணர்வு மிக முக்கியமாக இருந்தது. குடும்ப உறவால் பிணைக்கப்பட்ட குடும்ப அங்கத்தினர்கள் தாங்கள் வாழ்ந்த சமூகத்தை ஒழுங்குபடுத்தியபொழுது அரசு தோன்றியது. இவ்வாறு பரிணமித்த அரசின்கண் வாழ்கின்ற மக்களிடையே ஒற்றுமையை வளர்ப்பதற்கும் அதே குடும்ப உறவுதான் துணைபுரிகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

(ii) சமயம் (Religion)

சமயம் அரசின் பரிணாமத்திற்குப் பெரிதும் உதவிற்று. குடும்ப உறவைப் போலவே சமயமும் பாதிரியார் போன்ற ஒரு

பொதுவான மனிதனின் அதிகாரத்திற்குப் பணியும் வழக்கத்தை ஏற்படுத்திற்று. பொதுவான சமயம் குடும்பத் தொடர்புகளை பலப்படுத்துவதாய் அமைந்தது. குடும்ப உறவுகளைக் காட்டிலும் பலம் பொருந்திய சக்திகளாகப் பாதிரிமார்களும், மந்திரவாதிகளும் காணப்பட்டனர். ஆதிகாலத்து மனிதன் இயற்கையின் அதிசயங்களைக் கண்டு பயந்து வாழ்ந்தான். உலகில் அவன் கண்ட அதிசயங்களும், அற்புதங்களும் அவனுடைய அறிவுக்கு எட்டாத ஒரு சக்தியின் திருவிளையாடலாகத்தானிருக்க வேண்டும் என்று நம்பினான். அதனால் இயற்கையின் சக்திகளை வழிபட ஆரம்பித்தான். இயற்கையின் மீது ஏற்பட்ட பயத்தின் காரணமாகப் பாதிரிமார்களுக்கும், மந்திரவாதிகளுக்கும் இயற்கையின் ரகசியங்கள் யாவும் தெரியும் என்று நினைத்து அவர்களை அவன் மதிக்கலானான். இவ்வாறு சமயப்பாதிரிமார்களும், மந்திரவாதிகளும் மக்கள் சமூகத்தில் பொது உணர்வை ஏற்படுத்த ஏதுவாயினர். பொது உணர்வு மலர்ந்த சமூகம் நாளடைவில் அரசாக எழுந்தது. அந்த அரசில் பணிவும், ஒழுக்கமும் தழைக்க மதம் பெரிதும் உதவியது.

### (iii) வலிமை (Force)

அதிகாரம் இருக்கும் இடத்தில் வலிமையும் இருக்கும். அதிகாரத்தைப் பிரயோகிப்பதற்கான விருப்பமும் அரசு தோன்றுவதற்குக் காரணமாக இருந்திருக்கிறது. தனி நபரானாலும் சரி, குடும்பமானாலும் சரி, குலமானாலும் சரி, எல்லோருக்கும் தானே அதிகாரம் செலுத்த வேண்டும், அல்லது மற்றவர்களைத் தன்னுடைய கட்டளைகளுக்குப் பணிய வைக்க வேண்டும் என்கிற ஆசை இயற்கையாகவே அமைந்திருக்கிறது. வலிமை மிக்க மனித குலம், பலம் குறைந்த மனித குலத்தைப் பிடித்து அதன்மீது தனது ஆதிக்கத்தை நிலை நாட்டியது. அதன் காரணமாக வலிமை பெற்ற மனித குலம், மக்கள், இடம், பொருள் போன்ற செல்வங்களைக் கூடுதலாகப் பெற முடிந்தது. இவ்வாறு குடும்பங்கள் அல்லது குல கோத்திரங்கள் அரசாகப் பரிணமிக்க வலிமை ஓர் அடிப்படை காரணமாக இருந்திருக்கிறது என்று தெரிகிறது.

### (iv) அரசியல் உணர்வு (Political Consciousness)

அரசின் வளர்ச்சிக்கு அரசியல் உணர்வும் ஒரு காரணமாக விளங்கியது. அரசியல் உணர்வு அரசியல் நிறுவனங்களின் மூலமாக நிறைவேற்றப்படும் நோக்கங்களையும் முடிவுகளையும் பற்றிய அறிவைக் குறிக்கும். சட்டத்தையும், ஒழுங்கையும்

நிலைநாட்டல், உயிரையும் உடைமையையும் பாதுகாத்தல், வெளி நாட்டு ஆக்கிரமிப்புகளைத் தடுத்தல், பொருளாதார, சமூக நிலைகளைச் சீர்படுத்துதல் போன்ற செயல்களைப்பற்றி மக்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டும். மக்களுடைய சம்மதத்தைப் பெறாத எந்த அரசும் நிலைக்க முடியாது. மக்கள் அரசை ஆதரிக்கவும், அங்கீகரிக்கவும் வேண்டுமானால் அரசு செய்யும் நன்மைகளையும் நலன்களையும் நன்கு தெரிந்து வைத்திருக்க வேண்டும். எனவேதான் அரசியல் உணர்வு அரசின் வளர்ச்சிக்குக் காரணமாயிருந்ததாகக் கருதப்படுகிறது.

(v) தனியார் உடைமை (Private Property)

தனியார் உடைமைக்கும் உரிமைக்கும் பாதுகாப்பு அளிக்க வல்ல ஒரு நிறுவனமாக அரசு மட்டுமே உள்ளது. பண்டைக் காலத்தில் ஏராளமான நிலமும் இருந்தது, மக்கள் தொகையும் குறைவு. எனவே, தனியார் சொத்துரிமைபற்றியும் அதன் பாதுகாப்பு பற்றியும் ஒருவரும் நினைக்கவில்லை. ஆனால் இன்றைக்கு நிலமும் குறைவு, மக்கள் தொகையும் கூடுதல் என்பதால் தனியார் வைத்திருக்கும் சொத்துகளுக்கு உரிமை அளிக்கவும், அவைகளைப் பாதுகாக்கவும் தகுதியான நிறுவனம் ஒன்றின் தேவை அதிகரித்துள்ளது. இவ்வாறு தனியார் உடைமை அரசின் வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கிறது என அறியலாம்.

மேற்கூறிய ஐந்து காரணங்களும் அரசு தோன்றுவதற்குப் பெரிதும் உதவியுள்ளன என்னும் உண்மையை வரலாறு நமக்கு விளக்குகிறது. இவை தவிர வேறு சில காரியங்களும் அரசின் வளர்ச்சிக்கு வித்திட்டிருக்கலாம். நாகரீகம், பண்பாடு, பழக்க வழக்கங்கள், போன்ற காரியங்களும் அரசின் வளர்ச்சிக்கு உதவியிருக்க வேண்டும். ஆனால் இவைகளைக் காட்டிலும் தனியார் உடைமை, அரசியல் உணர்வு, வலிமை, மதம், குடும்பத் தொடர்புகள் ஆகியவை அரசு தோன்று வதற்கு மூல காரணங்களாயிருந்தன என்று வரலாறு நிரூபிக்கின்றது.

# 3. இறைமை

## இறைமையின் பொருள் விளக்கமும் தன்மையும்
## (Meaning and Nature of Sovereignty)

அரசினுடைய முக்கிய சிறப்பியல்புகளுள் இறைமையும் ஒன்ருகும். இறைமை என்பதற்கு மேன்மையான அதிகாரம் என்று பொருள். அரசின் நிலப்பரப்பிற்குள் வாழும் எல்லா மனிதர்களும், அவர்களுடைய சங்கங்களும் அரசினுடைய இறைமைக்குப் பணிய வேண்டும். அரசு சட்டங்களின் மூலமாகத் தன்னுடைய இறைமையைப் பிரயோகிக்கிறது. அரசின் இறைமையும் அந்த இறைமையைப் பிரயோகிக்கும் சட்டங்களும் முடிவானவை. அவைகளைக் கட்டுப்படுத்தவல்ல அதிகாரம் அரசுக்கு உள்ளேயும் கிடையாது, வெளியிலும் கிடையாது. அரசின் செயல்களைச் சட்டமன்றமும், ஆட்சித்துறையும் நீதித்துறையும் செய்கின்றன. ஆனல் இவைகளில் எதுவுமே எல்லாக் காரியங்களிலும் தனிப்பட்ட முறையில் மேன்மையான அதிகாரத்தைப் பெற்றிருக்கவில்லை. அரசுதான் தனிப்பட்ட முறையில் அத்தகைய அதிகாரத்தைப் பெற்றுள்ளது.

இறைமையின் முக்கியமான இயல்புகளைக் கீழ்கண்டவாறு விளக்கலாம்.

(i) வரம்பிலாத் தன்மை (Absoluteness)

இறைமை, அரசின்கண் வாழும் ஒவ்வொரு தனிமனிதனையும் அவனுடைய சங்கங்களையும் கட்டுப்படுத்தும் இயல்புடையது. இவ்விதம் அரசுக்கு உள்ளே இறைமை முழு உரிமையும் பெற்று விளங்குகிறது. அரசுக்கு வெளியில் இறைமை வரம்பிலாத் தன்மையுடன் செயல்படுகிறது. ஆனல் ஓர் அரசின் இறைமை வேறு ஓர் அரசின் இறைமையைக் கட்டுப்படுத்தாது. அதாவது அரசின் வெளி விவகாரச் செயல்களில் வேறு எந்த அரசும் குறுக்கிட முடியாது என்பதாகும்.

சட்டப்படி இறைமை வரம்பிலாத் தன்மை பெற்றுள்ளது என்ருலும் நடைமுறையில் அது ஒரு சில வரையறைகளுக்கு

உட்பட்டே செயல்படுகிறது. அரசிற்கு உள்ளே இறைமை தனி மனிதனின் உரிமைகளுக்கு எதிராகச் செயல்பட முடியாது அது போலவேதான் அரசுக்கு வெளியேயும் சர்வதேச சட்டத்திற்கு எதிராக இறைமை செயல்படுவதில்லை. சர்வதேச சட்டத்தை மதிப்பதும் மதிக்காததும் ஒரு அரசின் சொந்த விருப்பத்தைப் பொறுத்தது. என்றாலும் பொதுவாக அமைதியை விரும்பும் அரசு எதுவானாலும் சர்வதேச சட்டத்தை ஓரளவிற்கு மதித்தே நடக்கிறது.

(ii) உலகப் பொதுவான தன்மை (Universality)

இறைமை எல்லோரையும் கட்டுப்படுத்துகிறது. இறைமையின் சக்திக்கு விதிவிலக்காக எவர் ஒருவருக்கும் தனிச் சலுகைகள் எதுவும் கொடுக்கப்படுவதில்லை. எவ்வளவுதான் உயர்ந்த செல்வத்தையோ அல்லது அந்தஸ்தையோ ஒரு தனிமனிதன் பெற்றிருந்தாலும் சரி அவன் இறைமைக்குக் கட்டுப்பட்டே வாழ வேண்டும்.

வெளி நாட்டுத் தூதுவர்கள் அனுபவிக்கும் ஒரு சில சலுகைகளிலிருந்து அவர்கள் தாங்கள் நியமிக்கப்பட்டுள்ள அரசின் இறைமைக்கு விதிவிலக்காக உள்ளனர் போன்று தோன்றினாலும் அவர்களுடைய உண்மையான நிலைமை வேறு. அதாவது அரசு எப்பொழுது வேண்டுமானாலும் சரி, வெளி நாட்டு தூதுவர்களுக்கு அளித்துள்ள சலுகைகளை ரத்துசெய்து விடலாம். எனவே, இறைமை எல்லோரையும் கட்டுப்படுத்தும் தன்மை வாய்ந்ததாக உள்ளது.

(iii) அபகரிக்கப்பட முடியாத் தன்மை (Inalienable)

எந்த ஓர் அரசும் தன்னுடைய இறைமையை யாரிடமாவது விட்டுக் கொடுத்து விட்டு நிலைத்து நிற்க முடியாது. லிபர் என்பவர் கூறுவதுபோல இறைமை அரசுக்கு உயிர் போன்றது. உயிர் பிரிந்து விட்டால் உடல் அழிந்து விடுவதுபோல இறைமையை இழந்து விட்டால் அரசும் அழிந்து விடும்.

ஓர் அரசின் நிலப்பரப்பின் ஒரு சிறு பகுதியை வேறு ஒரு நாடு கைப்பற்றி விட்டால் அந்த அரசு தனது இறைமையை இழந்து விடுவதாக எண்ணிவிடக் கூடாது. அந்தக் குறிப்பிட்ட நிலப்பகுதியின் மீது தனக்கிருந்த உரிமையை இழந்துவிட்டதாக மட்டுமே கருத வேண்டும்.

(iv) நிலையான தன்மை (Permanence)

இறைமை நிலையானது. அரசாங்கம் மாறுவதனால் இறைமை அழிந்து விடுவதில்லை. அரசாங்கம் இறைமையை பிரயோகிப்பதற்கான அரசின் ஒரு கருவியாக மட்டுமே உள்ளது. அரசையே அழித்த பிறகுதான் இறைமையை அழிக்க முடியும்.

(v) பகுபடாத் தன்மை (Indivisibility)

இறைமையைப் பல கூறுகளாகப் பகுக்க முடியாது. இறைமை சார்ந்த அதிகாரங்களை வேண்டுமானால் பகுக்கலாம். உதாரணமாக, சட்டமன்றம், ஆட்சித்துறை, நீதித்துறை ஆகிய அரசாங்கப் பிரிவுகளிடையே இறைமை சார்ந்த அதிகாரங்களாகிய சட்டமியற்றும் அதிகாரம், சட்டங்களை அமல்படுத்தும் அதிகாரம், சட்டங்களுக்கு விளக்கம் கூறும் அதிகாரம் போன்ற அதிகாரங்களைப் பங்கிடலாம். மற்றபடி இறைமையைப் பிரித்தால் அரசிற்கு உள்ளேயே அதற்கு நிகரான இன்னொரு அதிகாரம் தோன்றி அரசை அழித்துவிடும்.

(vi) தனித் தன்மை (Individuality)

இறைமைக்குத் தனிப்பட்ட தன்மை உள்ளது. அதாவது அரசில் அதற்கு நிகரான வேறு எந்த ஓர் அதிகாரமும் கிடையாது. அரசிற்கு வெளியேயும் அதற்கு நிகரான அதிகாரம் எதுவும் இருக்க முடியாது. எல்லா அரசுகளும் இறைமை பெற்றிருந்தாலும் ஒவ்வோர் அரசும் தனது இறைமையையே மேன்மை வாய்ந்ததாகக் கருதுகிறது.

## இறைமையின் பல தோற்றங்கள்
## (Manifestations of Sovereignty)

இறைமையைப் பகுக்க முடியாது என்பது திட்டவட்டமான உண்மையே. ஆனால் அது செயல்படும்பொழுது பல்வேறு தோற்றங்களைப் பெறுகிறது. பொதுவாக இறைமையின் தோற்றங்களை ஆராய்ந்தால் அதனுடைய தோற்றங்களைச் சட்ட இறைமை, அரசியல் இறைமை, பொது இறைமை என்று குறிப்பிடலாம்.

(i) சட்ட இறைமை (Legal Sovereignty)

சட்ட இறைமை என்பது சட்டப்படி செயல்படும் இறைமையாகும். அரசினுடைய சட்டத்தின் அடிப்படையில் தோன்றிய இறுதி அதிகாரமே சட்ட இறைமையாகும். சட்ட இறைமையைப் பிரயோகிக்க ஒரு தனி நபரோ அல்லது சிலரைக்கொண்ட ஒரு

குழுவோ உரிமை பெற்றிருக்கலாம். இந்த இறைமை எல்லாக் குடி மக்கள் மீதும் அவர்களுடைய சங்கங்கள் மீதும் பிரயோகிக்கப் படுகிறது. சட்ட இறைமையை மீறியவர் தண்டிக்கப்படுவார். சட்ட இறைமையின் மூலம் இயற்றப்படும் சட்டங்களை மட்டும் தான் நீதிமன்றம் அங்கீகரிக்கும்.

சட்ட இறைமை தெளிவாக உள்ளது. அது சட்டத்தால் அங்கீகரிக்கப்படும் நிலையில் உள்ளது. ஒழுங்கான ரீதியில் நிறுவப்பட்ட துல்லியமான முடிவான ஓர் அதிகாரமாகச் சட்ட இறைமை செயல்படுகிறது. சட்ட இறைமைக்கு அரசின் விருப்பைச் சட்டப்படி தெரிவிக்க உரிமை உள்ளது. ஆங்கிலேய நாட்டில் பாராளுமன்றம் சட்ட இறைமையைப் பிரயோகிக்கிறது. அமெரிக்காவில் அரசியல் அமைப்பைத் திருத்தும் அதிகாரத்திடம் சட்ட இறைமை காணப்படுகிறது. பிரிட்டனில் சர்வ அதிகாரமும் படைத்த பாராளுமன்றத்திடம் சட்ட இறைமை உள்ளது. இந்தியாவில் சட்ட இறைமை அரசியல் அமைப்பிடம் உள்ளது. ஆனால் நடை முறையில் பெரும்பான்மை பெற்று விளங்கும் பாராளுமன்றம்தான் சட்ட இறைமையைப் பிரயோகிக்கிறது.

### (ii) அரசியல் இறைமை (Political Sovereignty)

சட்ட இறைமைக்கு வரம்பிலாத் தன்மை கிடையாது. பேராசிரியர் லாஸ்கி கூறுவதுபோல் சட்டஇறைமை அதற்குப் பின்னால் மறைந்து நிற்கும் வேறு ஒரு சக்திக்குத் தலைவணங்க வேண்டியதாயுள்ளது. இந்த சக்திதான் அரசியல் இறைமை யாகும். கில்கிரைஸ்ட் என்பவர் கருதுவதுபோல் அரசியல் இறைமையானது சட்டத்திற்குப் பின்னால் காணப்படும் பல் வேறுபட்ட செல்வாக்குகளின் தொகுப்பாக விளங்குகிறது.

அரசியல் இறைமை தெளிவற்றதாகவும் துல்லியமற்ற தாகவும் ஒழுங்கான ரீதியில் நிறுவப்படாததாகவும் உள்ளது. அரசியல் இறைமை வாக்காளர்களைக் குறிப்பிடாது. சட்டமன்ற உறுப்பினர்கள் தேர்தல் நேரத்தில் வாக்காளர்களை சந்திக்க வேண்டியதிருப்பதால் வாக்காளர்களின் விருப்பை அவர்கள் புறக்கணிக்க முடியாது என்பது உண்மைதான். என்றாலும் அரசியல் இறைமை வாக்காளர்களிடமிருப்பதாக எண்ணிவிட முடியாது. வாக்காளர்கள் தங்களுடைய சொந்த விருப்பின் அடிப்படையில் எந்த வேட்பாளருக்கும் வாக்களிப்பதில்லை. அரசியல் கட்சியின் செல்வாக்கும், மேடைப்பேச்சுகளும், பத்திரி கைகளும்தான் வாக்காளர்களின் முடிவை நிர்ணயிக்கின்றன. எனவே, அரசியல் இறைமையின் இருப்பிடத்தை திட்டவட்ட

மாக நிர்ணயிக்க முடியாமலாகி விடுகிறது. மக்கள் திரள் ஒரு வேளை அரசியல் இறைமையின் உறைவிடமாகத் தோன்றலாம். ஆனால் எல்லாமக்களும் வாக்களிக்கும் உரிமை பெற்றிருக்க வில்லை. வாக்குரிமை பெற்ற மக்கள் மட்டும்தான் சட்ட இறைமை மீது செல்வாக்கு பிரயோகிக்க முடியும். எனவே, அரசியல் இறைமை மக்கள் திரளிடம் உள்ளது என்றும் கூறமுடியாமலாகி விடுகிறது. மேலும் அரசியல் இறைமை பொதுக் கருத்தில் இருப்ப தாகவும் கருதுவதற்கில்லை. ஏனென்றால் பொதுக் கருத்து பல் வேறு செல்வாக்குகளுக்கு ஈடுகொடுக்கிறது. எனவே, இறை மையின் இருப்பிடத்தைத் திட்டவட்டமாகக் கூறமுடிவதில்லை. இருப்பினும் அரசியல் இறைமை வாக்காளர், பொதுக் கருத்தை உருவாக்கும் பல்வேறு செல்வாக்குகளாகிய அரசியல் கட்சிகள், செய்தித்தாள்கள், மேடைப்பேச்சுகள், எழுத்தாளர்களின் கருத்துகள், பழக்கவழக்கங்கள், மரபுகள் போன்றவைகளின் தொகுப்பில் அமைந்திருப்பதாகக் கூறலாம்.

(iii) பொது இறைமை (Popular Sovereignty)

பொது இறைமை மக்களுடைய இறுதி அதிகாரத்தைக் குறிப் பிடுவதாய் உள்ளது. ரூசோ என்னும் பிரெஞ்சு மேதையின் அரசியல் கருத்தாகப் பொது இறைமை கோட்பாடு விளங்குகிறது. பிரெஞ்சு புரட்சியின் முக்கிய அம்சம் பொது இறைமையாகும். பொது இறைமைக் கருத்தின்படி அரசின் இறுதி அதிகாரம் மக்களிடம் உள்ளது. சட்ட இறைமை இயற்றும் சட்டங்களும் அதனுடைய செயல்களும் மக்களுடைய சம்மதத்தைப் பெற்று விளங்குகின்றன என்பதே பொது இறைமைக்கருத்தின் முக்கிய அம்சமாகும். தற்கால ஜனநாயக நாடுகளில் பொது இறைமைக் கும் அரசியல் இறைமைக்கும் இடையே வித்தியாசம் காணமுடி யாது. ஆனால் இரண்டிற்கும் இடையே உள்ள உண்மையான வேறுபாடு யாதெனில் அரசியல் இறைமை ஒரு நாட்டில் பொதுக் கருத்தை உருவாக்கும் பல்வேறு சக்திகளின் தொகுப்பாய் விளங்கும்போது பொது இறைமையோ அரசின் இறுதி அதிகாரத்திற்கு உரியவர் மக்கள் என்னும் உண்மையை உணர்த்துகிறது. எனவே, பொது இறைமை வயது வந்தோர் வாக்குரிமையை அடிப்படையாகக் கொண்டு வாக்காளர்களின் பெரும்பான்மையின் அடிப்படையில் சட்ட இறைமையை நிலை நிறுத்துகிறது.

பொது இறைமைக் கருத்தின்படி மக்கள் அல்லது வாக்காளர் சட்ட இறைமையின் வல்லாட்சிப் போக்கை தடுத்து நிறுத்த உரிமை பெற்றுள்ளனர். அதாவது அத்து மீறி செயல்படத்

துணியும் சட்ட இறைமையைப் புரட்சியின் மூலம் அடிபணிய வைக்க மக்களுக்குச் சக்தி இருப்பதால் எந்த ஒரு அரசாங்கமும் பொது மக்களின் விருப்பைப் புறக்கணிக்க முயற்சிசெய்யாது. பொது நலனே பொது இறைமையின் அடிப்படைத்தத்துவம். பொதுநலன் கருதாத எந்த அரசாங்கத்தையும் மக்கள் ஏற்றுக் கொள்வதில்லை. சுயநலம் பேணும் ஆட்சியாளர்களை நீக்கி விட்டுப் பொது நலம் பேணும் இறைமையாளரை ஆதரிப்பதே பொது இறைமையின் சிறப்பான அம்சமாகும். ஆனால் பொது இறைமையின் உண்மையான குறிக்கோளை அடைய நாட்டில் உள்ளமக்கள் யாவரும் அரசியல் விழிப்புணர்வு பெற்றிருக்க வேண்டும். எல்லோரும் அரசியல் விழிப்புணர்வு பெற, கல்விச் சாலைகளில் அரசியலை ஒரு சிறப்புப்பாடமாக பயிற்றுவிக்க வேண்டும்.

## இறைமை பற்றிய கொள்கைகள்
## (Theories about Sovereignty)

இறைமை பற்றி இருவகைக் கொள்கைகள் உள்ளன. அவை மோனிஸ்டிக் கொள்கை என்றும் பன்மையாளர் கொள்கை என்றும் அழைக்கப்படுகின்றன. மோனிஸ்டிக் கொள்கை இறைமையைப் பகுக்க முடியாது என்று கூற, பன்மையாளர் கொள்கை இறைமையைப் பகுக்க முடியும் என்று வாதாடுகிறது. மோனிஸ்டிக் கொள்கையை முதலில் கூறியவர் ஆஸ்டின் என்பவர் ஆவார்.

### (i) ஆஸ்டினின் இறைமைக் கொள்கை (Austin's Theory of Sovereignty)

ஜான் ஆஸ்டினுடைய இறைமைக் கொள்கை சட்ட இறைமைக் கொள்கையாகும். "தனக்கு நிகரான ஓர் உயர் அதிகாரத்திற்கு வாடிக்கையான பணிதலைத் தராத ஒரு நிர்ணயிக்கப்பட்ட மானிட மேன்மையாளர் ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் பெரும்பாலானோருடைய பணிதலை வாடிக்கையாகப் பெறுவாரேயானால், அந்த நிர்ணயிக்கப் பட்ட மேன்மையாளர் அந்த சமூகத்தின் இறைமையாளராவார். அந்த சமூகம் (நிர்ணயிக்கப்பட்ட மேன்மையாளரையும் சேர்த்து) சுதந்திரமான அரசியல் சமூகமாகும்" என்பதே ஆஸ்டினின் கருத்தாகும். இவருடைய இறைமைக் கொள்கையில் நான்கு முக்கிய தன்மைகள் உள்ளன.

அவைகளாவன:-

(1) ஒவ்வோர் அரசிலும் பெரும்பாலான குடிமக்களின் பணிதலை வாடிக்கையாகப் பெறக்கூடிய ஒரு மானிட மேன்மையாளர் இருக்கிறார்.

(2) அந்த மானிட மேன்மையாளர் பிறப்பிப்பதுதான் ஆணை. அவரில்லாமல் சட்டம் எதுவும் கிடையாது.

(3) மேன்மையாளர் பெற்றிருக்கும் அதிகாரம் இறைமை எனப் படும்.

(4) அந்த இறைமை பகுக்க முடியாதது: வரம்பில்லாதது.

ஆஸ்டினின் இறைமையைப் பலரும் கீழ்க்கண்ட காரணங் களுக்காகக் குறை கூறியுள்ளனர்.

முதலாவதாக, ஹென்றிமெயின் என்பவர் இறைமை நிர்ணயிக்கப்பட்ட மேன்மையாளரிடம் இருப்பதாகக் கூற முடியாது என்று கருதுகிருர். சீக்கியர்களின் அரசரான ரஞ்சித்சிங் மக்களின் உயிர்மீது அளவு கடந்த அதிகாரத்தைப் பெற்றிருந்த பிறகும் கூட சமூகத்தின் மரபுவழி வந்த சட்டங் களுக்குக் கட்டுப்பட்டே ஆட்சி செய்தார். எனவே, ஆஸ்டின் கூறுகிற நிர்ணயிக்கப்பட்ட மேன்மையாளரை எந்த சமூகத்திலும் காணமுடியாது என்று ஹென்றிமெயின் கூறுகிருர்.

இரண்டாவதாக. ஆஸ்டினுடைய இறைமைக் கருத்துப்படி நிர்ணயிக்கப்பட்ட மேன்மையாளர் பிறப்பிப்பதுதான் சட்ட மாகக் கருதப்பட வேண்டும். ஆனல் சட்டத்தின் மூலங்களை ஆராய்ந்தால் மரபு, வழக்காறுகள், பழக்க வழக்கங்கள், மதம் போன்ற பல காரியங்கள் சட்டங்கள் ஏற்படக் காரணமாயிருந் திருக்கின்றன என்று தெரிகிறது. எனவே, இறைமையாளர் பிறப் பிப்பதுதான் சட்டம், அவரில்லாமல் சட்டம் எதுவுமில்லை, என்று ஆஸ்டின் கூறுவது தவருகவே தோன்றுகிறது.

மூன்ருவதாக, பன்மையாளர் கருத்தின்படி இறைமையை நோக்கினல் ஆஸ்டினின் கொள்கை தவருகிவிடும். பிளன்ட்சிலி என்பவர் இறைமை வரம்பிலாதது என்னும் ஆஸ்டினின் கருத்தைக் குறைகூறி யுள்ளார். அதாவது இறைமை ஒரு நாட்டிற்கு உள்ளே அரசியல் அமைப்பாலும் வெளியே சர்வதேச சட்டத்தாலும் கட்டுப் படுத்தப் படுவதாக அவர் கருதுகிருர். பேராசிரியர் லாஸ்கி இறைமை வரம்பிற்குட் படாவிட்டால் மனிதனின் மற்றசங்கங்கள் சுதந்திரமாகச் செயல்பட முடியாது என்றும் சுதந்திர நாடுகளிடையே அது போட்டி மனப்பான் மையை ஏற்படுத்தும் என்றும் கூறியுள்ளார்.

நான்காவதாக, ஆஸ்டினின் சட்ட இறைமைக் கருத்து இன்றைய ஜனநாயகக் கோட்பாடுகளுக்கு நேர்விரோதமானது. ஜனநாயகக் கொள்கையின்படி அரசாங்கம் மக்களுடையது.

இறைமை அதிகாரமும் மக்களிடமே இருக்க வேண்டும். ஆனால் ஆஸ்டின் கொள்கையின்படி மக்கள் இறைமை அதிகாரத்தைப் பிரயோகிக்க முடியாது. அரசாங்கமும் ஆளுகின்றவரின் அரசாங்கமாகி விடுகிறது. எனவே, ஆஸ்டினின் இறைமைக் கொள்கை இன்றைய அரசியல் சூழ்நிலைகளுக்கு ஏற்றதாக இல்லை.

**பன்மையாளரின் இறைமைக் கொள்கை (Pluralists' Theory of Sovereignty)**

பேராசிரியர் லாஸ்கி, பார்க்கர், கோல், லின்ட்சே, பௌலட் போன்றவர்கள் பன்மையாளர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களுடைய கருத்துப்படி இறைமையின் சட்டாக்கத் தன்மைக்கு மோனிஸ்டிக் கொள்கையினர் தரும் முக்கியத்துவம் குறைக்கப்பட்டு அரசைப்போலவே மற்ற சங்கங்களுக்கும் முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. அதாவது அரசு எல்லாவற்றிற்கும் மேலான ஒரு நிலையைப் பெற்றிருப்பதாக அவர்கள் கருதவில்லை. மக்கள் ஏற்படுத்தியுள்ள சங்கங்கள் பல மனிதனின் வாழ்க்கைக்கு அரசைவிட இன்றியமையாதனவாக இருப்பதால் அரசுக்கு இந்த சங்கங்களை விட மேலான ஒரு இடத்தை அளிக்க முடியாது என்று அவர்கள் கருதுகின்றனர். மேலும், சங்கங்கள் அரசால் உருவாக்கப்பட்டவையல்ல என்றும் அவைகள் அரசை நம்பி வாழவேண்டியதில்லை என்றும் அவர்கள் எண்ணுகின்றனர். எனவே, பன்மையாளர் அரசுக்கு வரம்பிலா அதிகாரம் அளிப்பதைக் குறைகூறுகின்றனர். ஆனால் அதே நேரத்தில் பல சங்கங்களுடைய செயல்களையும் ஒருங்கிணைப்பதாக அரசுக்கு மேன்மையான இடத்தை அளிக்கலாம் என்றும் கூறுகின்றனர். பன்மையாளரின் கருத்தில் நிறைகளும் உள்ளன; குறைகளும் உள்ளன. அவைகளை ஆராய்ந்தால் உண்மைநிலை விளங்கும்.

**நிறைகள்:-**

(i) தனிமனிதனின் வாழ்வை மேன்மை அடையச் செய்வதில் அரசியல், சமூக, பொருளாதார, கலாச்சார சங்கங்கள் பெற்றுள்ள முக்கியத்துவத்தை இக்கொள்கை உணர்த்துகிறது.

(ii) அரசுக்கு வரம்பிலா அதிகாரம் கொடுக்கப்பட்டால் மக்களுடைய விருப்பு புறக்கணிக்கப்படலாம் என்னும் உண்மையை இக்கொள்கை விளக்குகிறது.

(iii) எல்லா அதிகாரத்தையும் அரசுக்கே அளித்து விடாமல் பிற சங்கங்களுக்கும் சுய உரிமை அளிக்கவேண்டும் என இக்கொள்கை வலியுறுத்துகிறது.

(iv) அரசின் கூடுதல் தலையீடு சங்கங்களின் தனித்தன்மையை அழித்து விடும் என்னும் உண்மையை இக்கொள்கை விளக்குகிறது.

குறைகள்:-

(i) பன்மையாளர் கருத்து கொள்கையளவில் சரியாகத் தோன்றினும் நடைமுறையில் சாத்தியமாகாது. மற்ற சங்கங்களும் அரசைப்போலவே அதிகாரமும், சுய உரிமையும் பெற்றுவிட்டால் அது சமூகத்தில் பெரும் குழப்பத்தையே தோற்றுவிக்கும். அதனால் சட்டமும் ஒழுங்கும் சீர்குலைந்து முடிவில் சீரியல் சமூகமே அழிந்து விடக்கூடும்.

(ii) பன்மையாளர் இறைமையைப் பகுக்கலாம் என்று கருதுகின்றனர். இறைமையைப் பகுக்க முயல்வது அதை அழிக்க முயல்வதேயாகும். அரசுக்கு மேன்மையான அல்லது வரம்பிலா அதிகாரம் அளிக்காவிட்டால் அது மற்ற சங்கங்களின் செயல்களை எவ்வாறு ஒருங்கிணைக்க முடியும்? மற்ற சங்கங்கள்தாம் எங்ஙனம் அரசின் கட்டளைகளுக்குப் பணியும்?

(iii) ஓர் அரசில் உள்ள சங்கங்கள் அரசைப் போலவே அதிகாரம் பெற்றிருந்தால் மக்களின் அத்தியாவசியப் பணிகளைச் செய்யும் அமைப்பு எது என்று தெரியாமல் போய்விடும். சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டாவிட்டால் எந்த சங்கம்தான் சுமுகமாகச் செயல்பட முடியும்? சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவது மிக முக்கிய பணியாகும். இந்தப் பணியை அரசுதான் செய்ய முடியும். அரசு சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டும் பொறுப் பேற்றிருப்பதால் அது தானாகவே மற்ற சங்கங்களை விட அதிக அதிகாரத்தைப் பெற்றுவிடுகிறது. எனவே சங்கங்களும் அரசைப்போலவே அதிகாரம் பெற்றிருப்பதாகக் கருதுவது தவறாகும்.

**(iii) இறைமை பற்றிய சக்திக் கோட்பாடு (Power Theory of Sovereignty)**

அரசின் இறைமையின் தன்மையை விளக்கும் கோட்பாடுகளுள் சக்திக் கோட்பாடும் ஒன்றாகும். சக்திக் கோட்பாடு, அரசின் கட்டாயத்தன்மை பெற்ற வலிமையை அடிப்படையாகக் கொண்டு இறைமையின் தன்மையை விளக்க முனைகிறது.

சட்ட இறைமைக் கருத்து அரசுக்கு இறுதி அதிகாரம் இருப்பதாகவும், தனிமனிதனும் அவனுடைய சங்கங்களும் அரசின் அதிகாரத்திற்கு உட்பட்டிருப்பதாகவும் கூறுகிறது. சட்ட ரீதியில்

நோக்கினுல் இக்கருத்து சரியாகத் தோன்றினுலும் அறநெறியின் ரீதியில் நோக்கினுல் அரசுக்கு இறுதி அதிகாரம் இருப்பதாகத் தெரியவில்லை. அறநெறி மனிதனின் மனச்சாட்சிக்கே இறுதி அதிகாரம் அளிக்கிறது. அரசு சட்டங்களை உருவாக்கி அவைகளை அமல்படுத்த அதிகாரம் பெற்றுள்ளது. ஆனுல் அந்தச் சட்டங்களைப் பணிவதும் பணியாமலிருப்பதும் ஒருவனின் மனச்சாட்சியைப் பொறுத்தே அமைகிறது. எடுத்துக் காட்டாக குடும்பநலத்திட்டத்தை தீவிரமாக அமல்படுத்த அரசால் முடியும். ஆனுல் அந்தத் திட்டத்தை ஏற்றுக் கொள்வதும் ஏற்றுக் கொள்ளமாலிருப்பதும் ஒருவனுடைய மனச்சாட்சியைப் பொறுத்த காரியம். ஒருவேளை சட்டத்தை மீறுவதும் சரியில்லை என்று கூட அவன் நினைக்கலாம். ஆனுல் குடும்ப நலத்திட்டத்தை ஏற்றுக் கொள்வதைவிட அதை அமல்படுத்தும் சட்டத்தை மீறுவது மேல் என்று அவனுடைய மனச்சாட்சி உணர்த்திவிட்டால், அவன் அரசின் சட்டத்தையும்கூட மீறிவிடலாம். எனவே, சட்டப்படி அரசும் அறநெறிப்படி மனச்சாட்சியும் இறுதி அதிகாரம் பெற்றிருப்பதாகக் கொள்ளலாம்.

இவ்வாறு பொதுவாக இறுதி அதிகாரம் ஏதாவதொரு அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகிறது. அரசு தன்னுடைய சட்டங்கள் பெற்றிருக்கும் உயர்நிலையை வைத்தே தனக்கு இறுதி அதிகாரம் இருப்பதாகப் பாவிக்கிறது. அதுபோலவேதான் ஒரு சங்கமும் தனது கருத்துப்படி தன்னுடைய சட்டதிட்டங்கள் இறுதி அதிகாரம் பெற்றிருப்பதாக எண்ணிக் கொள்கிறது. இடைக் காலத்தில் மன்னருக்கும் போப்பாண்டவருக்கும் இடையே தோன்றிய தகராறுகளுக்கும் இதுவே காரணமாகும். ஆனுல் முடிவில் மன்னர்தான் வெற்றி பெற்றதாக அறியலாம். மன்னர் வெற்றி பெறுவதற்கு அவர் பெற்றிருந்த படைபலமே காரணமாய் இருந்தது. அரசு தன்னுடைய இராணுவ பலத்தைக் கொண்டு தனிமனிதனையும் அவனுடைய சங்கங்களையும் தனது சட்ட திட்டங்களுக்குப் பணிய வைக்கிறது. சட்டங்களை மீறுபவர்களை அரசு இராணுவ சக்தி கொண்டு தண்டிக்கிறது. தனிமனிதனும் அவனுடைய சங்கங்களும் தண்டனைக்குப் பயந்து சட்டங்களுக்குப் பணிகின்றனர். அல்லது சட்டங்களை மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் மீறிவிட்டு அரசு அளிக்கும் தண்டனையை ஏற்றுக் கொள்கின்றனர். இவ்வாறு அரசு தனி மனிதனிடமிருந்து ஒழுங்காகப் பணிதலைப் பெற இராணுவ சக்தி உதவுகிறது. தனி மனிதனே அல்லது அவனுடைய சங்கங்களோ இத்தகைய சக்தியைப் பெற்றிருக்கவில்லை. எனவே, அரசின் இறைமைக்கு உள்ள

கட்டாயத் தன்மையும் மேன்மைத் தன்மையும் அது பெற்றுள்ள இராணுவ வலிமையின் மூலமாக உணரப்படுகிறது.

பேராசிரியர், டாக்டர். டி.டி ராபேல் தனது 'Problems of Political Philosophy' என்னும் நூலில் இந்தச் சக்திக் கோட்பாட்டினைக் குறைகூறிச் சில கருத்துகளை வெளியிட்டுள்ளார். முதலாவதாக, அரசு பெற்றுள்ள கட்டாயத் தன்மை வாய்ந்த, இராணுவபலம் மூலம் பெறும் வலிமையை அல்லது சக்தியை அரசின் இறைமைக்கான ஆதாரமாக எல்லா சந்தர்ப்பங்களிலும் கருதுவதற்கில்லை. பொதுவாக அரசிற்கு உள்ளே கட்டாயத் தன்மை வாய்ந்த சக்தி இல்லாதவிடத்து அரசின் சட்டங்களுக்குப் பணிதலைப் பெறுவது கடினம். ஆனால் அரசுக்கு வெளியே பிற அரசுகளுடன் கொண்டுள்ள உறவுகளைப் பொறுத்த வரையில் காட்டாயத் தன்மை வாய்ந்த சக்தி எதுவும் அவசியமில்லை என்பதை அறியலாம். எடுத்துக்காட்டாக, சன் மெரினோ போன்ற எத்தனையோ சிறிய நாடுகளை அமெரிக்கா, பிரிட்டன், சீனா, ருஷ்யா போன்ற பெரிய நாடுகளுடன் ஒப்பிட்டால், சிறிய அரசுகளின், இராணுவபலம் மூலம் பெறும் காட்டாயத் தன்மை வாய்ந்த சக்தி மிகக் குறைவாகவே உள்ளது. எனினும் சிறிய நாடுகளும் இறைமை பெற்றச் சுதந்திர அரசுகளாகத் திகழ்கின்றன. இதற்குக் காரணம் அரசின் வெளிநாட்டு உறவுகளில் இறைமை, சக்திக் கோட்பாட்டிற்கு உட்பட்டிருக்கவில்லை என்பதேயாகும்.

ஆனால் சக்திக் கோட்பாட்டின் ஆதரவாளர்கள் பெரிய அரசுகள் அனுமதிப்பதால்தான் சிறிய அரசுகள் இறைமையுடன் வாழ்கின்றன என்கின்றனர். இவர்களுடைய கருத்துப்படி பெரிய அரசுகள்தான் இறைமையுடைய அரசுகளாகும். இக் கருத்துப்படி இறைமையை ஆராய்ந்தால்கூட முடிவில் பெரிய அரசுகளுக்குக்கூட இறைமையில்லை என்று கூறவும் செய்யலாம். ஏனெனில் சக்திக் கோட்பாட்டின்படி கட்டாயத் தன்மை வாய்ந்த மேன்மையான சக்தி என்பதற்கு ஓர் அரசினுடைய சக்தி பிறிதோர் அரசின் சக்தியை விட வலிமை குன்றியதாக இருத்தல் கூடாது. ஆனால் இன்று நாம் காணுவதெல்லாம் ஒவ்வோர் அரசின் சக்தியும் மற்ற அரசுகளின் சக்தியால் கட்டுப்படுத்தப்பட்டு எந்த ஓர் அரசுமே சுதந்திரத்தை அனுபவிக்க முடியாத நிலையைக் காணலாம். இவ்வாறு சக்திக் கோட்பாட்டின்படி பெரிய அரசுகள் கூட இறைமையைப் பெற்றிருக்கவில்லை என்று கூறவும் செய்யலாம்.

இரண்டாவதாக, அரசு பெற்றுள்ள காட்டாயத் தன்மை வாய்ந்த சக்தியை மட்டும் அரசின் மேன்மையான அதிகாரமான இறைமைக்கு ஆதாரமாகக் கருதுவதற்கில்லை. தாமஸ் ஹாப்ஸ் கூறுவது போன்று, அரசின் அதிகாரத்தை ஆதரிக்க சக்தி மட்டும் போதாது. சக்தியும் அதிகாரத்தின் மீதுள்ள மக்களுடைய சம்மதமும் சேர்ந்துதான் அரசின் இறைமையை நிர்ணயிக்க முடியும். சக்தியை மாத்திரம் வைத்துக் கொண்டு மக்களை மிரட்டி எந்த ஓர் அரசும் நீண்ட நாள் அவர்களுடைய பணிதலைப் பெற முடியாது. குடிமக்கள் அரசின் சட்டங்களைப் பணியச் சம்மதிக்க வேண்டும். அரசியல் அதிகாரத்திற்குப் பணிவதற்குப் பல காரணங்களைக் குறிப்பிடலாம். சக்திக் கோட்பாடு குறிப்பிடும் அரசின் காட்டாயத் தன்மை வாய்ந்த சக்தி இவைகளில் ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால், பரம்பரையாக ஏற்பட்ட ஆட்சியுரிமை, பொதுமக்கள் சம்மதம் அறநெறி போன்றவைகளும் அரசியல் அதிகாரத்தைப் பணிவதற்கான முக்கிய காரணங்களாகும். அரசின் இராணுவ பலம் மூலம் பெறும் சக்தி கொண்டு ஓர் அரசு மக்களைக் கட்டாயப் படுத்திப் பணியவைக்கலாம். ஆனால் அந்த அதிகாரத்தை மக்கள் ஏற்றுக் கொள்ளாதவிடத்து அந்த அரசில் உள்நாட்டுப் போர் ஏற்பட்டு முடிவில் அரசின் அரசாங்கத்தை மாற்றியமைக்க நேரிடலாம். சக்திக் கோட்பாடு இறைமையின் மேன்மையைச் சக்தியின் அடிப்படையில் மட்டும் ஆராய்கிறது. ஆனால் பொது மக்கள் சம்மதமும் இறைமையின் வலிமைக்குத் தேவை என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

# உரிமைகளும் கடமைகளும்
# (Rights and Duties)

## உரிமையின் இயல்புகள்
## (Characteristic features of Rights)

உரிமை என்பது சமூகம் ஒரு தனி நபருக்கோ அல்லது ஒரு கூட்டத்தினருக்கோ செய்ய வேண்டிய கடமையைக் குறிக்கும். ஒவ்வொரு தனி நபருக்கும் ஒரு சில தேவைகள் உண்டு. அந்தத் தேவைகளை அவன் ஒரு சில வரையரைகளுக்கு உட்பட்டுத்தான் பூர்த்தி செய்து கொள்ள முடியும். இந்த வரையரைகளின் அடிப்படையில்தான் சமூகம் மக்களுக்குப் பல சௌகரியங்களைச் செய்து தருகிறது. சமூகம் இவ்வாறு பெற்றுள்ள கடமைகளை நாம் சமூகத்திடமிருந்து பெற்றுள்ள உரிமைகளாகக் கருதுகிறோம்.

ஒவ்வோர் உரிமையும் சமூகத்தால் அங்கீகரிக்கப்பட வேண்டும். சமூகம் அங்கீகரிக்காத உரிமை எதுவும் உரிமையாகாது. சமூகத்தின் ஆதரவின்றியே பலம் படைத்த ஒருவன் தன்னுடைய விருப்பைப் பூர்த்தி செய்து கொள்ள முடிந்தால் அவன் உரிமை பெற்றிருக்கிறான் என்று கூறுவதை விட பலம் பெற்றிருக்கிறான் என்றே கூற வேண்டும். உரிமைக்குச் சமூகம் அளிக்கும் அங்கீகாரம் அறநெறிகளுக்கு உட்பட்டிருக்க வேண்டும். சமூகம் அங்கீகரிக்கும் உரிமைகள் யாவும் பொது நலத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும்.

உரிமையும்-கடமையும் ஒன்றை ஒன்று தழுவிய இருவேறு கருத்துக்களாகும். ஒருவரின் உரிமை இன்னொருவரின் கடமையாகவும், இரண்டாமவரின் கடமை முதல்வரின் உரிமையாகவும் அறியப்படல்வேண்டும். உரிமையும் கடமையும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போன்றவை.

## உரிமையின் வகைகள்
## (Kinds of Rights)

உரிமைகளை அறமாண்பு உரிமைகள், சட்ட உரிமைகள், அடிப்படை உரிமைகள், சீரியல் உரிமைகள், : அரசியல்

உரிமைகள், இயற்கை உரிமைகள் என்று வகைப்படுத்தலாம். ஒவ்வொரு வகை உரிமைகளையும் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

(i) அறமாண்பு உரிமைகள் (Moral Rights)

அறமாண்பு உரிமைகள் சமூகத்தின் அறநெறிக் கோட்பாடுகளின் அடிப்படையில் பின்பற்றப்படும் உரிமைகளைக் குறிக்கும். உதாரணமாக, ஒரு குழந்தை தன்னுடைய பெற்றோர் தன்னை நன்றாக வளர்க்கும் உரிமையைப் பெற்றிருக்கிறது. ஓர் ஆசிரியர் மாணவர்கள் தன்னை மதிக்க வேண்டும் என்கிற உரிமையைப் பெற்றிருக்கிறார். ஆனால் இந்த உரிமைகள் எல்லாம் அரசின் சட்டங்களால் அங்கீகரிக்கப்படவில்லை. இவ்வுரிமைகள் யாவும் மக்கள் கொண்டிருக்கும் அறநெறிக் கருத்துக்களின் அடிப்படையில் பின்பற்றப் படுபவையாகும். அறமாண்பு உரிமைகளை மீறியவனைச் சட்டப்படி தண்டிக்க முடியாது. அதே நேரத்தில் இந்த அறமாண்பு உரிமைகள் சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்டு விட்டால் அவைகள் சட்ட உரிமைகளாகக் கருதப்பட்டு விடுகின்றன.

(ii) சட்ட உரிமைகள் (Legal Rights)

சட்ட உரிமைகள் அரசின் சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட மனிதனின் உரிமைகளாகும். இந்த உரிமைகளை மீறியவர்கள் அரசின் சட்டத்தின் மூலம் விதிக்கப்பட்டுள்ள தண்டனையைப் பெறவேண்டும். எனவே, சட்ட உரிமைகள் அரசின் அதிகாரத்தால் ஆதரிக்கப்பட்டு நீதி மன்றங்களின் மூலமாக அமல்படுத்தப்படுகின்றன.

(iii) அடிப்படை உரிமைகள் (Fundamental Rights)

அடிப்படை உரிமைகள் மனிதனின் ஆளுமையை வளர்ப்பதற்கு மிகவும் தேவையான உரிமைகளாகும். இந்த உரிமைகளின்றி எந்த மனிதனும் தன்னுடைய ஆளுமையை வளர்க்க முடியாது. இந்த உரிமைகளை அரசியல் அமைப்பு உரிமைகள் என்றும் கூறலாம். பொதுவாக நாட்டின் அடிப்படைச் சட்டமாக விளங்கும் அரசியல் அமைப்பின் மூலமாகவே அடிப்படை உரிமைகள் வழங்கப்படுகின்றன. அரசியல் அமைப்பின் மூலமாக அளிக்கப்படுவதால் அரசாங்கம் அடிப்படை உரிமைகளைப் புறக்கணிக்க முடியாத நிலை ஏற்பட்டு விடுகிறது. மக்கள் நலத்திற்காக ஒரு சில அடிப்படை உரிமைகளை மாற்றி அமைத்தாலும் அவைகளை முற்றிலுமாக நிராகரிக்க எந்த அரசுக்கும் உரிமையில்லை. எதேச்சாதிகாரம்

செய்ய விரும்பும் அரசுக்கு அடிப்படை உரிமைகள் தடையாகவே உள்ளன. அடிப்படை உரிமைகளை மீறிய அரசாங்கம் எதுவும் நீண்டகாலம் நிலைத்து நிற்பதில்லை. அடிப்படை உரிமைகளை நிராகரிக்கும் எந்த அரசாங்கத்தையும் முடிவில் புரட்சியே சந்திக்கிறது.

(iv) சீரியல் உரிமைகள் (Civil Rights)

சீரியல் உரிமைகள் சட்ட உரிமைகளின் ஒரு பகுதியாக விளங்குகின்றன. நாகரீகமடைந்த ஒரு சமூகத்தில் வாழ்கின்ற மக்களுக்கு சீரியல் உரிமைகள் மிகவும் இன்றியமையாதவை. ஏனெனில் சீரியல் உரிமைகள்தாம் அவர்களுடைய வாழ்வை மேன்மையடையச் செய்கின்றன. ஓர் அரசு தன்னுடைய மக்களுக்கு எந்த அளவுக்குச் சீரியல் உரிமைகளை அளிக்கிறதோ அந்த அளவுக்கு அவர்களுடைய தரமும் உயர்கிறது. தற்கால அரசுகள் யாவும் தங்களுடைய மக்களுக்கு ஏராளமான சீரியல் உரிமைகளை அளித்துள்ளன. மிக முக்கியமான சீரியல் உரிமைகளைக் கீழ்க் கண்டவாறு விளக்கலாம்.

(a) பாதுகாப்பு உரிமை (Right to Security)

இது ஓர் அடிப்படை சீரியல் உரிமையாகும். இந்த உரிமை அளிக்கப்படாவிட்டால் தனி மனிதனுக்கும் அவன் வாழ்கின்ற சமூகத்திற்கும் பாதுகாப்பு இல்லை. இந்த உரிமையின் மூலமாக ஒவ்வொரு மனிதனின் உயிருக்கும் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. ஒருவனுக்கு அளிக்கப்படும் பாதுகாப்பு உரிமையின் உட்கருத்து யாதெனில் அவன் மற்றவர்களின் பாதுகாப்பு உரிமையை அங்கீகரிக்க வேண்டும் என்பதாகும். குற்றவாளிகளுக்கு மரண தண்டனை அளிப்பதும் வாழ்வில் ஏமாற்றமடைந்த அல்லது ஏமாற்றப் பட்டவர்கள் தற்கொலை செய்துகொள்வதும் பாதுகாப்பு உரிமைக்கு விரோதமான செய்கைகளாகும்.

(b) குடும்ப உரிமை (Right to Family)

இந்த உரிமை மனிதவர்க்கத்தை நிலைக்கச் செய்ய இன்றியமையாதது. தனிமனிதன் தனக்கு என ஒருத்தியை மணந்து ஒரு குடும்பத்தை ஏற்படுத்திக்கொள்ள உரிமை பெற்றிருக்கிறான். அரசின் சட்டங்கள் திருமணம், விவாகரத்து குடும்பத்தினரின் சொத்துரிமை, குழந்தைகளைப் பராமரித்தல் போன்றவைகளை ஒழுங்குபடுத்துகின்றன.

(c) சொத்துரிமை (Rights to Property)

அரசு தோன்றுவதற்கு முன்பே சொத்துரிமை முக்கியத்துவம் பெற்றிருந்திருக்கிறது. அரசு தோன்றுவதற்கான பல்வேறு காரணங்களில் இதுவும் ஒன்று. ஆரம்ப காலத்தில் மக்களிடையே சமத்துவம் காணப்பட்டது. ஆனால் நாளடைவில் மக்கள் தொகை பெருகவே "உனக்கு," "எனக்கு" என்னும் பாகுபாடு தோன்றி, தனியார் சொத்து உரிமையை பாதுகாக்க நிலவரம்புகள் ஏற்படுத்தப்பட்டன. தனியார் சொத்துரிமை மனிதனின் உழைக்கும் ஆர்வத்தைப் பெருக்குவதோடு மட்டுமல்லாமல் அவனுடைய வாழ்வில் தைரியத்தையும் திருப்தியையும் ஏற்படுத்துகிறது.

(d) வேலை உரிமை (Right to Work)

வேலை உரிமை உயிர் வாழும் உரிமையுடன் சம்பந்தப்பட்டது. திறனுடையவர்களுக்கு உழைப்பதற்கு வாய்ப்பும் உழைக்கத் திறனற்றவர்களுக்கு உதவித்தொகையும் அளிக்க ஒவ்வோர் அரசும் கடமைப்பட்டுள்ளது. ஆனால் அநேக நாடுகள் இந்த உரிமையைச் சட்டத்தின் மூலம் தங்களுடைய மக்களுக்கு அளிக்கவில்லை. அதனால் இந்த நாடுகளில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிக அளவில் காணப்படுகிறது. இருப்பினும், நன்னலம் கருதும் அரசுகள் யாவும் இந்த உரிமையை அடிப்படை உரிமையாக அளிப்பதற்கென பல வழிவகைகளை ஆராய்ந்து வருகின்றன. இந்தியாவில் இந்த உரிமை அரசின் வழிகாட்டு நெறிகளின் கீழ் அளிக்கப்பட்டுள்ளது. அடிப்படை உரிமைகளுள் ஒன்றாக அளிக்கப்படவில்லை. வழிகாட்டு நெறிகளை நீதிமன்றங்களின் மூலம் அமல்படுத்த முடியாது. எனவே, இந்த உரிமையை அரசு நிராகரித்துவிட்டால் நீதிமன்றத்தில் வழக்காடி திரும்பப் பெற்றுக் கொள்ள முடியாது. இந்திய அரசு உண்மையான நன்னலம் கருதும் அரசாகத் திகழ வேண்டுமானால் இந்த வேலை உரிமை அடிப்படை உரிமைகளுள் ஒன்றாக அளிக்கப்படல் வேண்டும். ருஷ்ய நாட்டில் இன்றைக்கு வேலையில்லாத் திண்டாட்டம் இல்லாதிருப்பதற்குக் காரணம் அங்கு வேலை உரிமை ஒரு அடிப்படை உரிமையாக அளிக்கப்பட்டிருப்பதேயாகும். வேலை உரிமையோடு சம்பந்தப்பட்ட வேறு ஒரு உரிமை குறைந்தபட்ச ஊதிய உரிமையாகும். இந்த உரிமையும் அநேக நாடுகளில் அளிக்கப்படவில்லை.

(e) உடன்பாட்டு உரிமை (Right to Contract)

உடன்பாட்டு உரிமையின் மூலம் மக்கள் ஒருவரோடு ஒருவர் பல காரியங்களுக்காகவும் உடன்பாடுகளை ஏற்படுத்திக் கொள்ள

முடிகிறது. சமூக நாகரீக வாழ்க்கைக்கு இந்த உரிமை மிகவும் இன்றியமையாதது. தனி நபர்களுக்கிடையே ஏற்படும் உடன் பாடுகளை அரசின் சட்டங்கள் கவனித்துக் கொள்கின்றன. தனி மனிதர்கள் ஏற்படுத்திக் கொள்ளும் உடன்பாடுகள் எப்பொழு தாவது சமூகத்தின் பொதுநலனை பாதிக்குமானால் அரசு தலை யிட்டு அதிலுள்ள குறைபாடுகளைத் தீர்த்து வைக்கிறது.

(f) பேச்சுரிமை (Right to freedom of Speech)

பேச்சுரிமை ஜனநாயக கோட்பாடுகளுள் ஒன்றாகும். சுதந்திர மாகப் பேசுவதற்கு அளிக்கப்படும் உரிமையின் மூலமாகத்தான் ஒருவன் அச்சமின்றி சிந்திக்கவும் செயல்படவும் முடியும். பேச் சுரிமையின் விளைவாக எழுத்துரிமை அளிக்கப்படுகிறது. ஒருவன் சுதந்திரமாக சிந்திக்க முடிந்தால்தான் அவனுடைய கருத்துகளை திட்டவட்டமாகப் பிரசுரிக்க முடியும். பேச்சுரிமையும், எழுத் துரிமையும் வரம்பிலாத் தன்மை யுடையவை யல்ல. இவ்விரு உரிமைகளும் பொது நலனுக்கு எதிராகப் பயன் படுத்தப் படுமானால்அரசு தனது சட்டத்தின் அதிகாரத்தின் மூலமாக இவைகளைக் கட்டுப்படுத்துகிறது.

(g) மதஉரிமை (Right to freedom of Religion)

மத உரிமை, தன் விருப்பப்படி மதங்கள் பற்றிய உண்மைகளை நம்புவதற்கோ அல்லது நம்பாமலிருப்பதற்கோ தனிமனிதனுக்கு அனுமதி அளிக்கிறது. இந்த உரிமையைப் பெற்றவர்கள் எந்தக் கடவுளையும் வணங்கலாம். இந்தியா ஒரு மதச் சார்பற்ற நாடாகத் திகழ்கிறது. அதாவது இந்தியஅரசாங்கம் எந்த ஒரு மதத்தையும் ஆதரிக்கவுமில்லை, அதற்கு எதிராக பிரச்சாரம் செய்வதுமில்லை. இந்திய மக்கள் எந்த மதத்தையும் சார்ந்திருக்கலாம். என்றுள்ளது மதம் மனிதனின் சமூக வாழ்வில் பெரும் பங்கு வகிக்கிறது என் பதால் மதஉரிமை கண்டிப்பாக வழங்கப்பட வேண்டும் என்னும் நிலை எல்லா நாடுகளிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகிறது.

(h) சுதந்திர உரிமை (Right to Liberty)

சுதந்திர உரிமைதான் வாழ்வைப் பொருளுடையதாக ஆக்கு கிறது. வாழ்வின் பல துறைகளிலும் சுதந்திரமாகச் செயல்பட இவ்வுரிமைதான் மிகவும் உதவுகிறது. சுதந்திர மின்றித் தனி மனிதன் தன்னுடைய ஆளுமையை வளர்த்துக் கொள்ளவே முடியாது. ஆனால் கட்டுப்பாடற்ற அல்லது வரையறை களுக்கு உட்படாத சுதந்திரம் உண்மையான சுதந்திர மாகாது. எனவே, அரசு சட்டங்களின் மூலம் சுதந்திரத்தை ஒழுங்கான முறையில் அனுபவிக்க வசதி செய்து தருகிறது.

(h) கல்வி உரிமை (Right to Education)

கல்வி உரிமையின் மூலம் தனி மனிதன் தன்னுடைய அறிவைப் பெருக்கிக் கொள்ள முடிகிறது. அறிவற்ற மக்கள் அரசின் அரசியலில் அதிக பங்கு வகிக்க முடியாது. இந்திய மக்கள் அரசியலில் அதிக ஆர்வம் காட்ட முடியாததற்குக் காரணம் பெரும்பான்மையான மக்களின் அறியாமையே யாகும். அறியாமை என்னும் இருளை நீக்கிடக் கல்வி உரிமை இன்றியமையாதது. ஆகவேதான் அரசு பலவித கல்விகளையும் மக்களுக்கு அளிப்பதற்குத் தேவையான சட்ட திட்டங்களை இயற்றியுள்ளது.

(j) சங்கங்கள் அமைப்பதற்கான உரிமை (Right to form Associations)

இந்த உரிமை ஜனநாயக நாட்டில் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. ஏனெனில் ஜனநாயக நாட்டில் மக்கள் கட்சிகளை அமைத்துத் தங்களுடைய கொள்கைகளை நிலை நாட்ட வேண்டியிருக்கிறது. சமூக, பொருளாதார, கலாச்சார சங்கங்களை ஏற்படுத்தி அவைகள் மூலமாக தங்களுடைய தனிப்பட்ட நோக்கங்களை நிறைவேற்ற வேண்டிய தாயிருக் கிறது. எனவே, சங்கங்களை அமைப்பதற்கான உரிமையை ஒவ் வோர் அரசும் குடி மக்களுக்கு அளித்து ஜனநாயகத்தை வெற்றிபெறச் செய்கிறது.

(v) அரசியல் உரிமைகள் (Political Rights)

அரசியல் உரிமைகள் மக்கள் தங்களுடைய நாட்டின் நிருவாகத்தில் பெரும் பங்கு வகிக்க உதவுகின்றன. பொதுவாக அரசியல் உரிமைகள் நாட்டின் பிரஜைகளுக்கு மட்டுமே அளிக்கப்படுகின்றன. வேறுநாட்டைச் சேர்ந்தவர்களும் ஒரு நாட்டில் வசிக்கலாம். ஆனால் அவர்களுக்கு அரசியல் உரிமைகள் எதுவும் அளிக்கப்படுவதில்லை. ஏனெனில் அயல் நாட்டவர் தங்களுடைய சொந்த நாட்டிற்குத்தான் நாணய முடையவர்களாக நடந்து கொள்ளுகிறார்கள். இவ்வாறு சுதந்திரம் அடைந்த எந்த நாடும் தன்னுடைய குடிமக்களுக்கு மட்டும் தான் அதிகாரத்தைப் பிரயோகிக்கும் உரிமையை அளிக்கிறது. அரசின் இறைமையைப் பிரயோகிப்பதில் மக்களுக்கு சமவாய்ப்புகள் அளிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே அரசியல் உரிமைகள் வழங்கப்படுகின்றன. அரசியல் உரிமை களும் சீரியல் உரிமைகளைப் போலவே சட்டத்தின் அங்கீகாரம் பெற்ற உரிமைகளாக விளங்குகின்றன. அரசியல் உரிமைகளை

நீதிமன்றங்கள் பாதுகாக்கின்றன. முக்கியமான அரசியல் உரிமைகளைக் கீழ்க் கண்டவாறு விளக்கலாம்.

a) வாக்குரிமை (Right to vote)

வாக்குரிமை அரசியல் உரிமைகளிலெல்லாம் மிக முக்கியமான உரிமையாகும். இந்த உரிமை ஜனநாயகத்துடன் பிறந்த உரிமையாகும். இந்த உரிமையைப் பெற்ற மக்கள் அரசாங்க நிருவாகத்தில் அதிக செல்வாக்கு பெற்றிருப்பார்கள். இந்த உரிமையின் மூலமாகத்தான் மக்கள் தாங்களே விரும்பும் அல்லது தங்களுக்கு நன்மை பயக்கும் அரசாங்கத்தைத் தேர்ந்தெடுக்க முடிகிறது. அயல்நாட்டவர், குற்றவாளிகள், புத்தி சுவாதீனமற்றவர்கள் ஆகியவர்களுக்கு இந்த உரிமை அளிக்கப்படுவதில்லை. மேலும், பொதுவாக ஒரு நாட்டில் வயது வந்தோர்க்கு மட்டும்தான் இந்த உரிமை அளிக்கப் படுகிறது. இந்தியாவில் இப்போது 21 வயதை எய்தியவர்களுக்கு மட்டும் தான் வாக்குரிமை அளிக்கப்படுகிறது. ஆனால் 18 வயதை எய்திய அனைவருக்கும் வாக்குரிமை அளிக்க வேண்டுமென கற்றவர் பலர் கருதுகின்றனர். விரைவில் இக்கருத்து அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்படும் என்பதில் சந்தேகமில்லை.

b) தேர்தலில் போட்டியிடும் உரிமை (Right to stand for Election)

தேர்தலில் போட்டியிடும் உரிமையின் மூலமாக மக்கள் தங்களைத் தாங்களே ஆளும் வாய்ப்பினைப் பெறுகின்றனர். எல்லாப் பிரஜைகளும் சட்ட மன்ற உறுப்பினராகச் செயலாற்றுவதற்குத் திறமை பெற்றிராததால் தேர்தலில் போட்டியிட ஒரு சில தகுதிகள் நிர்ணயிக்கப்பட வேண்டியிருக்கிறது. இந்தியாவில் வயதைப் பொறுத்த வரையில் வரையறைகள் நிர்ணயிக்கப் பட்டிருந்தாலும் கல்வித் தகுதிகள் எதுவும் நிர்ணயிக்கப் படவில்லை. கல்வித்தகுதி நிர்ணயிக்கப்படுமானால் திறமையுடையவர்களும் விஷயம் தெரிந்தவர்களும் சட்டமன்ற உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அதன் மூலம் திறமையான நிருவாகத்தை ஏற்படுத்த முடியும்.

c) பொது அலுவல் வகிக்கும் உரிமை (Right to Public Office)

எந்த ஒரு பொது அலுவலும் ஒரு தனிப்பட்ட கூட்டத்தினருக்கு என்று ஒதுக்கப்படவில்லை. ஜாதி, மதம், பால், மொழி என்பவைகளின் பேரில் வேறுபாடுகள் செய்யாமல் குறிப்பிட்ட தகுதிகள் பெற்றிருந்தால் பொது அலுவல் புரிய எல்லோருக்கும் சம வாய்ப்பு அளிக்க வேண்டும் என்பதே இவ்

வுரிமையின் முக்கிய நோக்கமாகும். இந்த உரிமை சமூகத்தில் உள்ள ஏற்றத் தாழ்வுகள் நீங்கி சம வாய்ப்பையும் சம அந்தஸ்தையும் எல்லா வகை மக்களுக்கும் அளிக்கிறது.

d) மனு தரும் உரிமை (Right to Petition)

மனு தரும் உரிமை நாட்டு மக்கள் தங்களுடைய குறைகளை அரசாங்கத்திற்குத் தெரிவிக்க உதவுகிறது. மக்கள் மட்டுமல்லாமல் அரசாங்க அலுவலர்கள்கூடத் தங்களுடைய குறைகளை முறையிட இவ்வுரிமையின் மூலம் வாய்ப்பினைப் பெறுகிறனர். மக்கள் தங்கள் குறைகளைத் தெரிவிக்கும்பொழுது அரசாங்கமும் தன்னுடைய கொள்கைகளையும் செய்கைகளையும்பற்றி மக்கள் என்ன நினைக்கின்றனர் என்பதைத் தெரிந்து கொண்டு அதற்கு ஏற்ப நடந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு மனு தரும் உரிமை மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் பயனளிக்கும் வகையில் உள்ளது.

e) அரசாங்கச் செயல்களைத் திறனாய்வு செய்யும் உரிமை (Right to Criticise)

இவ்வுரிமை அரசாங்கத்தின் கொள்கைகளையும், செய்கைகளையும் குறை கூறும் உரிமையைக் குறிக்கும். பொது மக்கள் அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் குறை கூற உரிமை பெற்றிருப்பதால்தான் அரசாங்கங்கள் தவறான பாதையில் செல்லாமலிருக்கின்றன. பொறுப்புள்ள அரசாங்கத்தை ஏற்படுத்த இந்த உரிமையை மக்கள் மிகவும் கவனமாகப் பயன் படுத்தவேண்டும். எதற்கெடுத்தாலும் அரசாங்கத்தைக் குறை கூறும் போக்கு தவறானது. எது தவறு எது சரி என்பதை நன்கு கண்டறிந்த பிறகே மக்கள் அரசாங்கம் இயற்றும் ஒரு சட்டத்தையோ அல்லது அதனுடைய செயலையோ குறை கூற வேண்டும்.

(vi) இயற்கை உரிமைகள் (Natural Right)

இயற்கை உரிமைக் கொள்கை, உரிமைகள் மனிதனால் தோற்றுவிக்கப்பட்டவையல்ல, அவைகள் இயற்கை தந்த பரிசு என்னும் கருத்தினை உணர்த்துகிறது. உரிமைகள் உலகப் பொதுவானவை என்றும், அவைகள் இயற்கைச் சட்டத்தில் காணப்படுகின்றன என்றும் ஹாப்ஸ், லாக், ரூஸோ போன்ற மேதைகள் நம்பினர். அவர்கள் சமூகமும் அரசும் தோன்றும் முன்னரே இயற்கை உரிமைகள் இருந்தனவாகக் கூறியுள்ளனர். லாக் என்பவர் இயற்கையானது எல்லா மனிதர்களையும் சுதந்திரமுடையவர்களாகவும் அறிவுடையவர்களாகவுமே படைத்து

அவர்களுக்கு உயிர்வாழவும் சுதந்திரமாகச்செயல்படவும் உரிமை அளித்திருக்கிறது என்று கருதுகிருர். அமெரிக்க புரட்சியினரும் பிரரெஞ்சு புரட்சியினரும் செய்த உரிமை பிரகடனங்களில் லாக்கின் கருத்தைக் காணலாம். அமெரிக்கர்க்ள் இயற்கையில் எல்லா மனிதர்களும் சுதந்திரமாக உள்ளனர் என்றும் அவர்களுக்கே உரிய சில உரிமைகளை அவர்கள் பெற்றிருக்கின்றனர் என்றும் கூறியுள்ளனர். அது போலவே தான் பிரஞ்சுப் பிரகடனமும் மனிதனுக்கு இயற்கையான பிரிக்க முடியாத சில உரிமைகள் இருக்கின்றன என்று பிரகடனப்படுத்தியுள்ளது.

இயற்கை உரிமைக் கொள்கை பல வழிகளில் குறை கூறப்படுகிறது. இயற்கை என்னும் சொல்லுக்குச் சரியான பொருளைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. சமூகமும் அரசும் ஏற்படுவதற்கு முன்பே உரிமைகள் இருந்தன என்னும் கூற்றை நம்ப முடியவில்லை. ஏனென்ருல் உரிமைகளை ஒரு சில நிபந்தனைகளின் அடிப்படையில்தான் அனுபவிக்க முடியும். அந்த நிபந்தனைகளை ஏற்படுத்த அரசு போன்ற நிறுவனங்களால்தான் முடியும். அப்படியிருக்க அரசு தோன்றுவதற்கு முன்பே உரிமைகள் எப்படி இருந்திருக்க முடியும்?

இயற்கை உரிமைக் கொள்கையின் ஒரு முக்கிய நிறையாதெனில் இயற்கை உரிமைகள் மனிதனின் அறநெறிவளர்ச்சிக்கு அத்தியாவசியமானவை என்பதே. எனவே, இயற்கை உரிமைகளுக்கு மனிதனின் நல்வாழ்விற்காக சம வாய்ப்புக்களை ஏற்படுத்தும் உரிமைகள் என்று பொருள் கொள்ள வேண்டும்.

## கடமைகளின் தன்மையும் வகைகளும் (Nature and kinds of Duties)

உரிமையும் கடமையும் ஒன்றுக்கு ஒன்று நெருங்கிய தொடர்புடையவை. உரிமையை அனுபவிக்க வேண்டுமாளுல் கடமைகளையும் ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான் நியதி. கடமைகளின்றி உரிமைகளை எந்த தனிமனிதனும் முழுமையாக அனுபவிக்க முடியாது. எனவேதான் கடமைக்கும் உரிமைக்கும் தற்கால அரசுகளில் சம அளவில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. பொதுவாகக் கடமைகளை அறமாண்பு கடமைகள் என்றும் சட்டப்படியான கடமைகள் என்றும் வகைப்படுத்தலாம்.

(i) அறமாண்பு கடமைகள் (Moral Duties)

அறமாண்பு கடமைகளுக்கும் சட்டப்படியான கடமைகளுக்கும் உள்ள வித்தியாசம் யாதெனில் முதல்வகைக் கடமைகளை

மீறியவனை சட்டப்படி தண்டிக்க முடியாது. வயதான பெற்ரேரைப் பராமரித்தல், குழந்தைகளுக்குக் கல்வி அளித்தல், சமூக சேவை செய்தல், சுற்றுப்புறத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுதல் போன்ற கடமைகளைச் செய்வது தனிமனிதனுக்கும் நல்லது சமூகத்திற்கும் நல்லது. ஆனால் இக்கடமைகளை ஒருவன் செய்யத் தவறினால் அவனைச் சமூகம் தண்டிக்க முடியாது.

(ii) சட்டப் படியான கடமைகள் (Legal Duties)

அறமாண்பு கடமைகளைப் போலல்லாமல் சட்டப்படியான கடமைகளை மீறுபவர்களை அரசு தன்னுடைய வலிமையின் உதவி கொண்டு தண்டிக்கிறது. தனிமனிதன் சில கடமைகளைச் செய்ய வேண்டும் என்று கூறுவதற்குக் காரணம் உண்டு. மனிதனுடைய தேவைகள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வருகின்றன. மனிதனின் தேவைகள் அதிகரிக்க அதிகரிக்க அரசின் செயல்களும் அதிகரிக்கின்றன. அது மட்டுமல்லாமல் அரசு மக்களுக்கு ஏராளமான உரிமைகளையும் வழங்க வேண்டியதாயிருக்கிறது. இவ்வாறு வழங்கும் உரிமைகள் ஒவ்வொன்றும் ஒரு கடமையையும் ஏற்படுத்தி விடுகிறது. இந்த கடமைகளை எல்லாம் நிறைவேற்றினால்தான் தனிமனிதன் தனக்கு அளிக்கப்பட்டுள்ள உரிமைகளை முழுமையாக அனுபவிக்கமுடியும்.

ஒரு காலத்தில் மக்கள் தங்களைப் பசியிலிருந்தும், பட்டினியிலிருந்தும் பாதுகாத்துக் கொள்ளுவதற்கான உரிமையைப் பெற்றிருந்தாலே திருப்தியடைந்திருந்தனர். ஆனால் இன்றைக்குப் போதுமான அளவிற்கு நல்ல தரமுடைய ஆகாரம் கிடைப்பதற்கான உரிமைதான் அவர்களைத் திருப்தி செய்ய முடியும். அதுபோலவேதான் கல்வி உரிமை இன்று நல்ல தரமுடிய கல்வியைப் பெறுவதற்கான உரிமையைக் குறிப்பதாய் மாறிவிட்டது. கல்வி அளித்து விட்டால் மட்டும் போதாது. அந்தக் கல்வி நல்ல தரமுடைய கல்வியாகவும் இருக்க வேண்டும். அப்படியானால்தான் மக்கள் அந்தக்கல்வி உரிமையால் திருப்தி அடைவார்கள். இவ்வாறு அரசு இன்றைக்கு மக்களுக்கு அளிக்கின்ற உரிமைகளின் தன்மையில் முன்னேற்றமான மாறுதல்கள் ஏற்பட்டு விட்டதை அறிந்து கொள்ளலாம். இந்தத் தரமிக்க உரிமைகளை எல்லாம் மக்களுக்குப்பயனுள்ள வகையில் அளிப்பதற்கு அரசுக்கு ஏராளமான நிதி தேவைப்படுகிறது. தேவைப்படும் நிதியை வரிமூலமாகவே தான் சேகரிக்க வேண்டியதாயிருக்கிறது. எனவே, அரசு விதிக்கும் வரிப் பணத்தைத் தவருமல் செலுத்துவது ஒவ்வொருவருடைய கடமை

யாகவும் உள்ளது. வரிப்பணத்தைக் குறிப்பிட்ட கால வரையறைக்குள் செலுத்தாமலிருப்பது தண்டனைக்குரிய குற்றமாகும். வரிப்பணம் செலுத்தத் தவறினல் அரசாங்கம் தனது பொறுப்புகளை நிறைவேற்ற முடியாது. அதனல் மக்கள் தங்களுடைய உரிமைகளை முழுமையாக அனுபவிக்க முடியாமலாகிவிடுகிறது. இவ்வாறு கடமையும் உரிமையும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவைகளாக விளங்குகின்றன.

ஜனநாயக நாட்டில் வாக்குரிமையைத் தவருமல் பிரயோகிப்பது ஒவ்வொரு குடிமகனுடைய தலையாய கடமையாகும். மக்கள் ஒவ்வொரு வேட்பாளரின் நிறைகுறைகளைச் சீர்தூக்கிப் பார்த்த பிறகே தங்களுடைய வாக்குகளை அளிக்கவேண்டும். வாக்காளர்கள்தாம் அரசாங்கத்தை ஏற்படுத்துகின்றவர்கள். எனவே, வாக்குரிமை மிக முக்கியமான ஒரு கடமையாகக் கருதப்படுகிறது.

வாக்குரிமையைப் போலவேதான் பொது அலுவல் உரிமையும் ஒரு முக்கியகடமையாக உணரப்பட்டு வருகிறது. தகுதியுடைய, திறமையான பிரஜைகள் பொது அலுவல் புரிய முன்வராவிட்டால், திறமையற்றவர்கள் பொது அலுவல்களில் இடம் பெற்று விட நேரிடும். அதனல் அரசாங்க நிருவாகத்தில் திறமையின்மை ஏற்பட்டு முடிவில் மக்கள் தங்களுடைய உரிமைகளைச் சரியான முறையில் அனுபவிக்க முடியாமலாகி விடும்.

ஜனநாயக அரசாங்கங்கள் நிலைக்க மக்கள் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும். மக்களுடைய ஒத்துழைப்பும் ஆதரவும் இன்றி எந்த அரசாங்கமும் சட்டத்தையும் ஒழுங்கையும் சமூகத்தில் நிலைநாட்ட முடியாது. மேலும் மக்களுடைய நல்வாழ்விற்கு நலன் பயக்கும் நல்ல வாய்ப்புகளை ஏற்படுத்த மக்களுடைய ஆதரவு மிகவும் தேவை. வசதி படைத்தவர்கள் வசதியற்றவர்களின் நலனுக்காக ஒரு சில அசௌகரியங்களை அனுபவித்தே தீர வேண்டும். அதுபோலவே வசதியற்றவர்கள் வசதிபடைத்து விட்டவர்கள்மீது வீணுகப் பொருமை கொள்ளக் கூடாது. இரண்டு வகை மக்களும் அரசாங்கத்தின் கொள்கைகளுக்கும் செயல்களுக்கும் தொடர்ந்து ஆதரவு தர வேண்டும்.

அரசாங்கத்துடன் மக்கள் ஒத்துழைக்க வேண்டியது அவர்களுடைய கடமைகளுள் ஒன்று என்ருலும், மக்களுடைய விருப்பிற்கு எதிராகச் செயல்படும் ஓர் அரசாங்கத்தை எதிர்ப்

பதும் அவர்களுடைய முக்கியமான கடமையாகும். ஒவ்வொரு தீயசட்டத்தையும் மக்கள் எதிர்க்க வேண்டும். எதிர்க்க வேண்டும் என்ருல் புரட்சியின் மூலம் எதிர்க்க வேண்டும் என்று அர்த்தமில்லை. தீய சட்டங்களுக்கு ஆதரவு தராமல் அல்லது அவைகளுக்குப் பணியாமல் இருந்தாலே போதும். அதுவே எதிர்ப்பதற்குச் சமம்தான். மேலும் அரசாங்கம் செய்யும் தவறுகளை அவ்வப்போது சுட்டிக்காட்ட வேண்டும். மக்கள் இதைச் செய்யத்தவறிஞல் அரசாங்கம் திருந்த வேறு வழியே இல்லை. எனவே, அரசாங்கக் கொள்கைகளையும், செயல்களையும் திறனாய்வு செய்யும் உரிமை ஒவ்வொருவருடைய கடமையாகவும் விளங்குகிறது.

மக்களுக்கு அளிக்கப்படும் உரிமைகள்யாவும் அவர்களுடைய கடமைகளையும் பொறுப்புகளையும் அதிகரிக்கச் செய்து விட்டன. ஒவ்வொரு குடிமகனும் நாட்டின் செல்வத்தைப் பெருக்க அரும்பாடுபட வேண்டும். செல்வத்தைப் பெருக்கக் கடின உழைப்பு தேவை. ஜப்பான் இன்று பல துறைகளிலும் முன்னேறி வருவதற்கு அந்த நாட்டு மக்களின் அயராத உழைப்புதான் முக்கியகாரணமாகும். மேலும், மக்கள் தங்களுடைய உரிமைகளையும் கடமைகளையும் நன்கு உணரவேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக ஒவ்வொரு தனி மனிதனும் தன்னுடைய நாட்டிற்கு நாணயமுடையவஞக நடந்து கொள்ள வேண்டும். அரசு எதிர்பார்க்கும் எல்லாக் கடமைகளையும் குடிமக்கள் நிறைவேற்றிஞல்தான் அவர்கள் அரசிடமிருந்து பெறுகின்ற உரிமைகள் யாவும் நன்மை பயக்கும்.

# 4. சட்டம் (Law)

## சட்டத்தின் பொருளும் தன்மையும்
## (Meaning and Nature of Law)

சட்டம் என்பது ஒரு அரசின்கண் வாழ்கின்ற மக்கள் பின்பற்றுகின்ற நடத்தை பற்றிய நியதியைக் குறிக்கும். சட்டம் அரசாங்கத்தால் அமுல் படுத்தப்படும் சமூக நியதி அல்லது ஒழுங்காகும். சட்டத்தை மீறுகிறவர்கள் அரசின் வலிமையைக் கொண்டு தண்டிக்கப்படுகின்றனர். ஆனால் மக்கள் பின்பற்று கின்ற நடத்தை பற்றிய எல்லா நியதிகளும் சட்டங்கள் ஆகா. ஒரு சில சமூக நியதிகளை மட்டுமே சட்டங்கள் என அரசு குறிப்பிட்டுள்ளது. ஹாக்கிங் என்பவர் கூறுவது போல் ஒரு சட்டம் சட்டமாகக் கருதப்படுவதற்குக் காரணம் அரசு முறையான சட்டமியற்றும் ஒரு நிறுவனம் மூலமாக அதைச் சட்டமென பிரகடனப்படுத்தியிருப்பதேயாகும். சட்டத்தின் தன்மைகளைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

(i) சட்டங்கள் எல்லோருக்கும் பொருந்துபவை. ஜனநாயக நாடுகளில் சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்றுள்ளது.

(ii) சட்டம் இறைமையைப் பிரயோகிக்கப் பயன்படும் ஒரு கருவியாக உள்ளது. சட்டம் அரசின் அல்லது மக்களின் விருப்பைத் தெரிவிக்கிறது.

(iii) சட்டங்கள் அரசின் இறைமை அதிகாரத்தின் ஆதரவையும் அங்கீகாரத்தையும் பெற்றுள்ளன.

(iv) சட்டங்களுக்கு முறையாக ஏற்படுத்தப்பட்ட நீதிமன்றங்களே விளக்கம் கூறுகின்றன.

(v) சட்டங்கள் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் வரையப் பட்டுள்ளன. சட்டங்களை மீறுகின்றவர்கள் சட்டத்தில் கூறப் பட்டிருக்கும் விதிமுறைகளின்படி தண்டிக்கப்படுகின்றனர்.

(vi) எல்லா மக்களும் சட்டங்களைப் பற்றித் தெரிந்து வைத் திருக்கவேண்டும், சட்டங்களிருப்பது தெரியாது என்று கூறிச்

சட்டத்தை எவரும் மீறிவிடமுடியாது. சட்டத்தை அறிந்தோ அறியாமலோ மீறிய யாவருக்கும் தண்டனை நிச்சயம் உண்டு.

(vii) சட்டங்கள் மனிதனின் வெளி நடத்தையை மட்டும்தான் கவனிக்கின்றன.

(viii) ஓர் அரசில் ஒரே ஒரு சட்ட முறைதான் அமுலில் இருக்க முடியும்.

## சட்டத்தின் ஆதாரங்கள்
## (The Sources of Law)

அரசுதான் சட்டத்திற்கான ஆதாரம் என்று எளிதாகக் கூறி விடலாம். ஆனால் அது சட்டம் தோன்றுவதற்குக் காரணமா யிருந்த காரியங்களை விளக்கவில்லை. பேராசிரியர் ஹாலந்து கீழ்க் கண்ட ஆதாரங்கள் சட்டம் தோன்றுவதற்கு உறுதுணையாக இருந்திருக்க வேண்டுமென்று குறிப்பிட்டுள்ளார்.

(i) பழக்க வழக்கங்கள் அல்லது மரபு (Habits or custom)

பழக்க வழக்கம் சட்டத்தின் அடிப்படை மூலமாகும். புராதன சமூகத்தில் எல்லாவகையான தகராறுகளும் சச்சரவு களும் சமூகத்தில் வழக்கத்திலிருந்த மரபுகளின் அடிப்படையில் தான் தீர்த்து வைக்கப் பட்டன. மரபுகள் எவ்வாறு, எப்போது சமூகத்தில் தோன்றின என்று ஒருவரும் திட்டவட்டமாகக் கூற முடியாது. ஆனால் சமூக மரபுகள் குடும்பங்களில் தொன்று தொட்டு பின்பற்றப்பட்ட பழக்க வழக்கங்களிலிருந்தே தோன்றி யிருக்க வேண்டும், என்று யூகிக்க முடிகிறது. சமூகத்தில் பின் பற்றப்பட்ட மரபுகளுக்கு சட்டங்களுக்குக் கொடுக்கப்படும் அதே இடத்தைத் தரமுடியாவிட்டாலும், சட்டமியற்றுபவர்கள் மரபு களைக் கருத்தில் கொண்டே சட்டங்கள் இயற்றியிருக்கின்றனர்.

(ii) மதம் (Religion)

புராதன சமூகத்தில் சட்டம் மரபாக இருந்தாலும் அதற்கு ஆதரவு மதமேதான். புராதன மக்களுக்கு மூடநம்பிக்கையும் மதமும்தான் சமூக நடத்தையை ஒழுங்கு படுத்தும் பெரும்சக்தி களாகத் திகழ்ந்தன. புராதன சமூகத்தில் வாழ்ந்த மனிதன் சட்டத்தை ஆண்டவன் இட்ட கட்டளையாகக் கருதினான். மத குருக்கள் அளித்த தீர்ப்புகள் தெய்வீக வல்லமை பெற்றிருந்த தாக அவன் எண்ணினான். அந்தத் தீர்ப்புகளை மீறினால் தெய்வ தண்டனை நிச்சயம் கிடைக்கும் என்று நம்பினான். எனவே மதம் சட்டம் ஏற்படுவதற்குப் பெரிதும் உதவிற்று.

(iii) நியாய விளக்கங்கள் (Interpretation of Justice)

சமூகத் தொடர்புகள் எளிய முறையில் நடைபெற்றபொழுது மரபுகள் பெரும் பங்கு வகித்தன. ஆனால் நாளடைவில் சமூகம் விரிவடைந்து சமூகத் தொடர்புகளில் சிக்கல்கள் ஏற்பட்ட பொழுது மரபுகளாலும் பழக்க வழக்கங்களாலும் மனிதனின் நடத்தையை ஒழுங்குபடுத்த முடியவில்லை. எனவே, அந்த சமூகத்தில் வாழ்ந்த அறிவு பெற்றவர்கள் தங்களுடைய பொது அறிவின் மூலமாகவும் மரபுகளுக்குத் தாங்கள் ஏற்படுத்திக் கொண்ட விளக்கங்களின் மூலமாகவும் சமூகத்தில் தோன்றிய வழக்குகளைத் தீர்த்துவைத்தனர். அவர்கள் கூறிய நியாய விளக்கங்கள்தாம் எதிர்காலத்தில் பல வழக்குகளை ஆராய்ந்து தீர்ப்புசொல்ல ஆதாரமாக எடுத்துக் கொள்ளப் பட்டன. இவ்வாறு அறிவுபெற்றவர்கள் அளித்த நியாய விளக்கங்கள் சட்டத்திற்கு ஒரு முக்கியமான மூலமாக விளங்கின.

(iv) அறிவியல் விமர்சனங்கள் (Scientific Commentaries)

எழுத்தாளர்கள், நீதிபதிகள், திறனாய்வாளர்கள் ஆகியோர் தந்த அறிவியல் விமர்சனங்கள் சட்டம் தோன்ற பெரும் உதவி புரிந்துள்ளது. இவர்கள் மரபுகள், பழக்க வழக்கங்கள், வழக்காறுகள், நியாய விளக்கங்கள் எல்லாவற்றையும் ஆராய்ந்து தங்களுடைய கருத்துக்களையும் விளக்கங்களையும் தந்தனர். அவற்றின் அடிப்படையில்தான் பின்னால் சட்டங்கள் இயற்றப் பட்டன.

(v) நியாயம் (Equity)

நியாயம் என்பது நீதி அல்லது நேர்மையைக் குறிக்கும். ஒரு நீதிபதியின் கடமை நியாயமான தீர்ப்பு வழங்குவதாகும். ஆனால் சட்டம் எல்லா இடத்திலும் தெளிவாக இருக்க முடியாது. சட்டம் தெளிவில்லாமல் குழப்பத்தை ஏற்படுத்தும் பொழுதெல்லாம் எது நியாயம் அல்லது நேர்மை என்று ஒரு சந்தர்ப்பத்தில் நீதிபதியின் மனத்தில் தோன்றுகிறதோ அதற்கேற்ப வழக்குகளுக்குத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. மேலும், காலத்தின் சூழ்ச்சியால் சில சட்டங்கள் மாறுகின்ற சூழ்நிலைக்குப் பொருந்த வில்லை. எனவே, மாறுகின்ற சூழ்நிலைக்குப் பொருந்தும் வகையில் சட்டமியற்றும் நிறுவனத்தின் மூலமாகவோ அல்லது வேறுமுறையிலோ சட்டங்களை மாற்றி அமைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவ்வாறு சட்டங்களை மாற்றி அமைத்து மாறிய சூழ்நிலைக்குப் பொருந்துமாறு செய்ய நியாயம் அல்லது நேர்மை பயன்பட்டது.

(vi) சட்டமியற்றல் (Legislation)

தற்கால அரசாங்கங்களில் சட்டமன்றம் நாட்டிற்குத் தேவையான சட்டங்களை இயற்றும் பொறுப்பேற்றுள்ளது. பெரும்பாலான சட்டங்கள் இந்தக்காலத்தில் சட்ட மன்றத்தின் மூலமாகவே இயற்றப்படுகின்றன. சட்டமன்றம் சட்டம் தோன்றுவதற்கான முக்கிய ஆதாரமாக விளங்குகிறது. சட்டமன்ற உறுப்பினர்கள் சட்டமியற்றுங்கால் மரபுகள் மதம், நியாயம், சட்ட விளக்கங்கள் ஆகியவைகளைக் கருத்தில் கொண்டே சட்டங்களை இயற்றுகின்றனர்.

## சட்டத்தின் வகைகள்
## (Kinds of Law)

சட்டம் தேசிய சட்டம் என்றும் சர்வதேச சட்டம் என்றும் இருவகைப்படும். இருவகைச் சட்டங்களையும் கீழ்க்கண்டவாறு ஆராயலாம்.

(i) தேசீய சட்டம் (National Law)

ஓர் அரசிற்கு உள்ளே வாழ்கின்ற மக்கள் அனைவரையும் கட்டுப்படுத்துகின்ற சட்டம் தேசீய சட்டம் எனக் கருதப்படுகிறது. தேசீய சட்டத்திற்கு யாவரும் தொடர்ந்து பணிதல் வேண்டும். தேசீய சட்டத்தை மீறியவர்கள் கடுமையாகத் தண்டிக்கப் படுகிறார்கள். தேசீய சட்டம் அரசின் இறைமையின் மூலம் செயல்படுகிறது. தேசீய சட்டம் இரு வகைப்படும். ஒன்று அரசியல் அமைப்புச்சட்டம் எனப்படுகிறது. அரசியல் அமைப்பு சட்டத்தின்படிதான் அரசு செயல்படுகிறது. இன்னொன்று சாதாரண சட்டம் எனப்படும். சாதாரண சட்டத்தின் மூலமாக அரசு மக்களுக்குச் சேவை செய்கிறது.

(a) அரசியல் அமைப்புச்சட்டம் (Constitutional Law)

அரசியல் அமைப்புச்சட்டம் அரசாங்கத்தின் சட்டமன்றம், ஆட்சித்துறை நீதித்துறை என்னும் மூன்று பிரிவுகளின் அமைப்பு, கடமைகள், வரம்புகள் ஆகியவைகளை நிர்ணயிக்கும் அடிப்படைச்சட்டமாகும். இச்சட்டம் எழுதப்பட்டதாகவோ அல்லது எழுதப்படாததாகவோ இருக்கலாம். அதாவது தனிப்பட்ட முறையில் ஏற்படுத்தப்பட்ட ஓர் அரசியல் நிர்ணய சபையின் மூலமாக வரையப்பட்டதாகவும் இருக்கலாம். அல்லது வழக்கங்கள், மரபுகள், வழக்காறுகள் போன்றவைகளின் அடிப்படையில் காலப்போக்கில் வளர்ச்சி யடைந்ததாகவும்

இருக்கலாம். அல்லது சாதாரண சட்டங்களை இயற்றுவதற்கு அதிகாரம் படைத்த சட்டமன்றத்தின் மூலம் இயற்றியதாகவும் இருக்கலாம்.

(d) சாதாரண சட்டம் (Ordinary Law)

அரசு பணியாற்றும்பொழுது பின்பற்றும் கோட்பாடுகளே சாதாரண சட்டங்களாகும். மக்களுக்கும் அரசுக்கும் இடையே உள்ள தொடர்பினையும் மக்கள் ஒருவரோடு ஒருவர் கொண்டுள்ள தொடர்பினையும் ஒழுங்கு படுத்துகிறது இச்சட்டம். நாட்டின் சட்டமன்றமே நாட்டிற்குத் தேவையான சாதாரண சட்டங்களை இயற்றப் பொறுப் பேற்றுள்ளது. சாதாரண வழக்குகளை விசாரிப் பதற்கு நீதிமன்றங்கள் சட்டங்களையே பின்பற்றுகின்றன. நீதி மன்றங்கள் அளிக்கும் தீர்ப்புகளை, அமுல் படுத்துவதற்கும் அரசாங்கம் சாதாரண சட்டங்களின் உதவியையே நாடுகிறது. சாதாரணசட்டம் பொதுச்சட்டம் என்றும் தனியார் சட்டம் என்றும் இருவகைப்படும்.

பொதுச்சட்டமும் தனியார்சட்டமும் (Public Law and Private Law)

பொதுச்சட்டம் தனிமனிதனுக்கும் அரசுக்கும் உள்ள தொடர் பினை ஒழுங்கு படுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட சாதாரண சட்டமாகும். பொதுச்சட்டத்தை மீறியவர்கள் கடுமையாகத் தண்டிக்கப் படுவார்கள். பொதுச் சட்டம் பொது மக்களின் உரிமைகளையும் கடமைகளையும் நிர்ணயிப்பதாய் உள்ளது.

தனியார் சட்டம் ஒரு தனி நபருக்கும் இன்னொரு தனிநபருக் கும் இடையே உள்ள தொடர்புகளை ஒழுங்குபடுத்துவதாய் உள்ளது. அரசுக்கும் தனிமனிதனுக்கும் இடையே உள்ள தொடர்புகளைப் பொதுச்சட்டம் ஒழுங்குபடுத்துவதுபோல் தனி நபர்களுக்கிடையே உள்ள தொடர்புகளைத் தனியார் சட்டம் ஒழுங்குபடுத்துகிறது. ஒவ்வொரு தனிமனிதனுக்கும் சட்டத்தின் மூலம் உரிமைகள் அளிக்கப்பட்டுள்ளன. இந்த உரிமைகள் முழுமையான ரீதியில் அனுபவிக்கக் கூடிய உரிமைகளல்ல. ஒரு சில நிபந்தனைகளுக்குட் பட்டுத்தான் தனிமனிதன் இந்த உரிமைகளை அனுபவிக்கமுடியும்.

ஒரு சில அரசுகளில் பொதுச் சட்டம் நிருவாகச் சட்டம் என்றும் பொதுவான சட்டம் என்றும் இரு வகைப்படு கின்றன. அவைகளை இங்கு ஆராயலாம்.

**(1)** நிருவாகச் சட்டம் (Administrative Law)

நிருவாகச் சட்டம் என்பது நிருவாக அதிகாரிகளின் நிலைகளை யும் அவர்களுக்குக் கீழுள்ள பணியாளர்களுடனும் தனி நபர் களுடனும் அவர்கள் கொண்டிருக்க வேண்டிய தொடர்புகளை ஒழுங்குபடுத்தும் சாதாரண சட்டமாகும். இச் சட்டம் பொது அலுவலர்களுடைய உரிமைகள், கடமைகள் ஆகியவைகளையும் தனி நபர்கள் அனுபவிக்கும் உரிமைகள் கடமைகள் ஆகியவை களையும் நிர்ணயிக்கிறது.

**(2)** பொதுவான சட்டம் (General Law)

நிருவாக அதிகாரிகளின் தொடர்புகளை நிருவாகச் சட்டம் ஒழுங்குபடுத்துகின்ற சில நாடுகளில் அரசுக்கும் தனி மனிதனுக் கும் இடையே உள்ள தொடர்புகளை ஒழுங்கு படுத்தும் சாதாரண சட்டத்திற்குப் பொதுவான சட்டம் என்று பெயர்.

(ii) சர்வதேசச் சட்டம் (International Law)

உலகத்தின் பல அரசுகளும் ஒன்றுடன் ஒன்று ஏற்படுத்திக் கொள்ளும் தொடர்புகளை நிர்ணயிக்கும் சட்டம் சர்வதேசச் சட்டம் எனப்படுகிறது. தேசியச்சட்டம் அரசின் வலிமையால் ஆதரிக்கப்படுவதுபோல் சர்வதேசச் சட்டம் வலிமையின் ஆதரவைப் பெற்றிருக்கவில்லை. அதாவது சர்வதேசச் சட்டத் திற்குப் பணியுமாறு எந்த அரசையும் கட்டுப்படுத்தவல்ல சக்தி இவ்வுலகில் கிடையாது. சர்வதேசச் சட்டத்தை ஏற்றுக்கொள்வ தும் ஏற்றுக் கொள்ளாததும் அந்தந்த நாட்டின் சொந்த விருப்பத் தைப் பொறுத்தது. பொதுவாக உலக அமைதியை விரும்பும் நாடுகள் யாவும் சர்வதேசச் சட்டத்தை தேசியச் சட்டத்தைவிட மேலாக மதிக்கின்றன.

## சட்டமும் அறமாண்பும்
## (Law and Morality)

சட்டம் ஒரு மனிதனின் வெளி நடத்தையை மட்டும் பற்றி அமைகிறது. ஆனல் அறமாண்பு அவனுடைய உள்ளத்தின் நோக்கங்களையும் வெளிச் செய்கைகளையும் பற்றி அமைகிறது. அரசு ஒரு மனிதனின் செய்கைகள் சட்டத்திற்கு எதிராக இருந் தால் மட்டும்தான் அவனைத் தண்டிக்கிறது. அவனது உள்ளத்தில் தோன்றுகின்ற நோக்கங்களைப் பற்றி அதற்குக் கவலையில்லை. ஆனல் சட்டங்கள் இல்லாவிட்டால் சமூகத்தில் அறமாண்புடைய

வாழ்விற்கு இடமே இல்லை. சட்டங்கள் அறநெறிகள் வளர்வதற்கான வாய்ப்புகளை உருவாக்குகின்றன. எனவே, சட்டத்திற்கும் அறமாண்பிற்கும் உள்ள வேறுபாடுகளையும் அவற்றிற்கு இடையே உள்ள தொடர்புகளையும் தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகிறது.

(i) சட்டத்திற்கும் அறமாண்பிற்கும் உள்ள வேறுபாடுகள் (Difference between Law and Morality)

அறமாண்பு மனிதனுடைய வாழ்க்கை முழுவதையும் பற்றியது. அதாவது அறமாண்பு மனிதனுடைய சிந்தனைகளையும் நோக்கங்களையும் செய்கைகளையும் கவனிக்கிறது. ஆனால் சட்டம் சமூக நலனைக்கெடுக்கும் மனிதனுடைய வெளிச் செய்கைகளை மட்டும் கவனிக்கிறது. உதாரணமாக, பொய் சொல்லுதல், தீய சிந்தனைகளுக்கு இடமளித்தல் போன்றவை அறமாண்பிற்கு விரோதமானவை. ஆனால் ஒரு மனிதன் பொய் சொல்லியதற்காகவோ அல்லது தீய சிந்தனைகளுக்கு இடமளித்ததற்காகவோ சட்டம் அவனைத் தண்டிப்பதில்லை. அவனுடைய தீய சிந்தனைகளும் பொய் பேச்சுக்களும் சமூகத்திலுள்ள பிற அங்கத்தினர்களுக்கு இடையூறு உண்டுபண்ணும் பொழுதுதான் சட்டம் அவனைத் தண்டிக்கிறது.

அறமாண்பிற்கு மனிதனுடைய மனச்சாட்சியே வல்லமை அளிக்கிறது. ஆனால் சட்டத்திற்கோ அரசினுடைய இறைமை அதிகாரம் வல்லமை அளிக்கிறது. அறநெறி கோட்பாடுகளை ஒருவன் பின்பற்றுவதும் பின்பற்றாமலிருப்பதும் அவனுடைய மனச்சாட்சியைப் பொறுத்தது. ஆனால் சட்டங்களுக்குப் பணிதல் அரசின் வலிமைபற்றி அவனுக்கு இருக்கும் பயத்தைப் பொறுத்தது. சட்டங்களை மீறினால் அரசின் தண்டனைக்குத் தப்பித்துக் கொள்ள முடியாது. எனவே, சட்டத்திற்கு பணிந்தாக வேண்டியதாயுள்ளது. இவ்வாறு சட்டத்திற்குப் பணிய அரசின் அதிகாரமும் அறநெறியைப் பின்பற்ற மனிதனின் மனச்சாட்சியும் காரணமாக உள்ளன.

ஓர் அரசிற்கு உள்ளே எல்லோரையும், கட்டுப்படுத்த வல்ல ஒரேவிதமான சட்டமுறைதான் நடைமுறையில் இருக்கும். ஆனால் அறமாண்பு மனிதனுக்கு மனிதன் மாறுபடக்கூடியதாக இருக்கிறது. அறநெறிக் கோட்பாடுகள் மனிதன் நல்லது கெட்டது பற்றி கொண்டுள்ள அபிப்பிராயங்களைப் பொறுத்து அமைகின்றன. ஆனால் சட்டம் எல்லோருக்கும் பொருந்தக் கூடிய வகையில் உலகப் பொதுவான தன்மை பெற்று விளங்குகிறது.

சட்டம் சமூகத்தின் வசதிக்காக இயற்றப்படுவது. எனவே, சட்டங்கள் முற்றிலும் நேர்மையானவையாக இருக்கும் என்று கூற முடியாது. ஆனல் அறநெறிக் கோட்பாடுகள் முற்றிலும் சரியான வையாகவும் நேர்மையானவையாகவும், இருக்கின்றன. சட்டப் படி தவருன ஒரு செயல் அறநெறிக் கோட்பாட்டின்படியும் தவருகத் தானிருக்கும் என்று கூறமுடியாது. அறநெறிக் கோட் பாட்டிற்கு விரோதமான ஒரு செயல் சட்டப்படி சரியான செயலாக வும் அமையலாம். உதாரணமாக, சாலையில் வேகமாகக் காரை ஓட்டுதல், சாலையில் வலது பக்கமாக வாகனத்தை ஓட்டுதல், இரவு நேரங்களில் விளக்குகள் இல்லாமல் ஊர்திகள் ஓட்டுதல் போன்ற செயல்கள் அறமாண்பிற்கு விரோதமான செயல்கள் அல்ல என்றுலும் சட்டப்படி குற்றமான செயல்களாகும். அது போலவேதான் நம்மைக் கத்தியால் குத்திக் கொலைசெய்ய முயலும் ஒருவனை நாம் தற்காப்பிற்காகக் கொன்று விடுவோமேயாளுல் நம்முடைய செயல் அறநெறிப்படி தவறு என்றுலும் சட்டப்படி தவறில்லை. இன்னும் சொல்லப்போனுல் குதிரைப் பந்தயத்தில் கலந்து கொள்ளுதல், லாட்டரிச் சீட்டு வாங்குதல் போன்ற செயல்கள் அறமாண்பிற்கு எதிரான செயல்கள் என்றுலும் சட்டப்படி குற்றமான செயல்களாகா.

(ii) சட்டத்திற்கும் அறமாண்பிற்கும் உள்ள ஒற்றுமை (Resemblance between Law and Morality)

சட்டத்திற்கும் அறமாண்பிற்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டு. ஒரு சட்டம் அறமாண்பு கோட்பாட்டின் அடிப்படையில் அமையவில்லை என்றுல் அந்தச் சட்டத்தை எல்லா மக்களும் விரும்பி ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அரசின் குறிக்கோள் மனிதனின் அற ஒழுக்கத்தைப் போதிப்ப தில்லை என்றுலும் மனிதனின் நல்வாழ்வுக்குத் தேவையான சூழ் நிலையை ஏற்படுத்துவது அரசின் கடமையாகும். அறநெறி கோட் பாடுகளின் அடிப்படையில் ஏற்படுத்தப்படாத சட்டங்கள் எதுவும் மனிதனுக்கு நல்வாழ்வை ஏற்படுத்த முடியாது. பிளேட்டோ கூறுவது போல் எந்த அரசு மனிதனின் நற் குணத்தை வளர்க்க முடிகிறதோ அந்த அரசே சிறந்த அர சாகும். குடிமக்களின் வாழ்க்கை சீர்கெடுமானுல் அரசே கெட்டு விடும், அரசில் வாழும் மக்கள் நற்குணமுடையவர்களாக இருப் பார்களானுல்தான் அந்த அரசும் சிறந்த அரசாகத் திகழ முடியும்.

தற்கால அரசுகள் யாவும் பெரும்பாலும் அறநெறிகளைப் பின்பற்றியே சட்டங்கள் இயற்றுகின்றன. அறநெறிக்கோட்பாடு

களுக்கு எதிரான சட்டங்களை முடிந்தவரை நீக்கி விடுகின்றன. உதாரணமாக, இந்தியாவில் இறந்து விட்ட கணவனுடன், எவ்வளவுதான் இளமையாக இருந்தாலும் மனைவி உடன்கட்டை ஏறும் 'சதி' என்னும் பழக்கம் பலகாலமாக வழக்கத்திலிருந்தது. இதுபோன்ற பல தீய பழக்கங்களை ஒழிக்க இந்திய அரசாங்கம் சட்டங்கள் இயற்றி உள்ளது போற்றத் தக்க காரியமாகும்.

## சட்டமும் தண்டனையும்
## (Law and Punishment)

சட்டத்தை மீறினால் அரசு தனது வலிமையின் உதவியால் தண்டனை விதிக்கிறது. தண்டனை என்று ஒன்று இல்லாவிட்டால் சட்டத்தை அமல் படுத்துவது மிகவும் கடினம். தண்டனைக்குப் பயந்தே அநேகர் சட்டங்களுக்குப் பணிகின்றனர். அதற்காக அரசியல் பணிவிற்கு தண்டனைபற்றிய பயம்தான் காரணம் என்று கூறிவிடமுடியாது. ஒரு சட்டம் சமூகத்தின் பொது நலத்திற்குத் தேவை என்று கருதுவதாலும் சட்டத்திற்குப் பணியலாம். இருந்தாலும் இரண்டாவது காரணம் தண்டனையால் ஏற்படும் பயத்திற்கு இருக்கும் வலிமையைப் பெற்றிருக்கவில்லை. எனவே தான் தண்டனைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது.

சட்டத்தை மீறியவர்களுக்கு அளிக்கப்படும் தண்டனை குற்றவாளியைப் பழிவாங்குவதாக இருக்க வேண்டுமா அல்லது குற்றவாளிக்கு அளிக்கும் தண்டனை மற்றவர்களுக்கு ஒரு எச்சரிக்கையாக இருக்க வேண்டுமா அல்லது குற்றவாளி திருந்தக் கூடிய நிலையில் இருக்க வேண்டுமா என்பது ஒவ்வோர் அரசையும் பொறுத்த காரியமாகும்.

பண்டைய யூத வம்சத்தில் கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல் என்னும் நிலையில் குற்றவாளிகள் தண்டிக்கப்பட்டார்கள். இவ்வாறு 'பழிக்குப் பழி' என்னும் அடிப்படையில் அளிக்கப்படும் தண்டனை குற்றவாளிகள் திருந்துவதற்கு எந்த வித வாய்ப்பையும் தருவதில்லை. தெரியாமல் ஒருவன் குற்றம் செய்தாலும் மீட்பில்லா தண்டனை கிடைத்து விடுகிறது. மன்னிப்பிற்கே இடமில்லாவிட்டால் வாழ்க்கை பொருளற்று விடும். எனவே மீட்பில்லாத தண்டனை தற்காலத்தில் அதிகமாக அளிக்கப்படுவதில்லை.

கிரீன், போஸன்கியூட் போன்றவர்கள் குற்றவாளியைத் தண்டிப்பது அவனைச் சித்திரவதைப் படுத்தவேண்டும் என்பதற்காக அல்ல, அவனுக்கு அளிக்கும் தண்டனையைப் பார்க்கும் சமூகத்தின் மற்ற அங்கத்தினர்கள் குற்றம் செய்யாமலிருப்பார்கள்

என்பதற்காகவாகும் என்று நம்புகின்றனர். ஜெர்மிமெந்தம் பார்ப்பவர்களின் மனத்தில் அச்சம் எழக்கூடிய வகையில் வைத்து குற்றவாளிகளைத் தண்டிக்கவேண்டும் என்று கூறுகிருர். இவருடைய கருத்து மிகவும் சிறந்ததாகத் தோன்றுகிறது. இன்று காவல் நிலையங்களில் குற்றவாளிகளைக் காவல் பணியினர் அடிப்பதும், துன்புறுத்துவதும் வெளியில் உள்ள அநேக குற்றவாளிகளுக்குத் தெரியாது. தெரிந்தால் ஓரளவுக்கு அவர் களுடைய மனத்தில் தண்டனை பற்றிய பயம் ஏற்படலாம். அதனல் சமூகக் குற்றங்கள் குறையலாம்.

தண்டனை பற்றி நிலவும் இன்னெரு கருத்து யாதெனில் குற்ற வாளியைத் தண்டிப்பதன் மூலம் அவன் திருந்தி நல்லவனுக சமூகத்தில் வாழ வேண்டும் என்பதாகும். இக்கருத்தின் அடிப் படையில்தான் இன்றைக்கு ஜெயில் முறையில் அநேக சீர்திருத் தங்கள் ஏற்பட்டு கைதிகளை நன்னடத்தையின் அடிப்படையில் விடுதலை செய்வது போன்ற காரியங்கள் எல்லாம் நடந்து வரு கின்றன. சீர்திருத்த முறையில் அளிக்கப்படும் தண்டனை குற்ற வாளிகளைத் திருத்துகிறது. எனவே, அரசு எத்தகைய தண்டனை நல்லது என்பதை ஆராய்ந்து சமூகத்தின் பொது நன்மைக்குப் பயன் தரும் தண்டனை முறையைக் கையாள வேண்டும்.

# 6. சுதந்திரம்

## சுதந்திரத்தின் பொருளும் தன்மையும்
## (Meaning and Nature of Liberty)

சுதந்திரம் என்னும் சொல் ஆங்கில மொழியில் 'லிபர்ட்டி' (liberty) என்று அழைக்கப்படுகிறது. "லிபர்ட்டி" என்னும் சொல் லிபர் (Liber) என்னும் லத்தீன் சொல்லிலிருந்து பெறப்பட்டது. சுதந்திரமாக வாழ்வதற்கு உரிமையுடன் வாழ்வதாகப் பொருள் கொள்ளலாம். சாதரணமாக சுதந்திரம் என்னும் சொல் கட்டுப் பாடுகளே இல்லாத நிலையைக் குறிக்கும். ஒரு மனிதன் கட்டுப் பாடுகள் எதுவும் இல்லாத வேளையில் சுதந்திரமாய் வாழ்வதாக நம்பப்படுகிறது. அதாவது, தான் விரும்புவதைச் செய்யத் தடை ஏதும் இல்லாத போது அவன் சுதந்திரமாக இருப் பதாக எண்ணப்படுகிறது. சுதந்திரத்திற்கு எதிராக உள்ள தடை களை அல்லது கட்டுப்பாடுகளைப் பற்றிக் கூறுங்கால் இயற்கை மனிதன் வாழ்க்கையில் ஏற்படுத்தியுள்ள தடைகளை அல்லது வரையறைகளைச் சுதந்திரத்திற்கு எதிரான தடைகளாகக் கணக் கிட முடியாது. உதாரணமாக, ஒரு மனிதன் தேக பலம் இல்லாத காரணத்தால் கடலில் நீந்த முடிய வில்லை என்பதற்காக அவன் சுதந்திரமாக இல்லை என்று கூறிவிட முடியாது. அது போலவே தான் ஒருவன் இயற்கையில் அறிவுக் கூர்மை பெற்றிருக்கவில்லை என்றால் அவன் தன் விருப்பம் போல் கல்வி கற்க முடியாது, அதனால் அவனுக்குச் சுதந்திரமில்லை என்று கூறிவிடமுடியாது. சுதந்திரத்திற்கு எதிரான தடைகளாக விளங்குவது மற்ற மனிதர்களால் வேண்டும்என்றே செயற்கையாக ஏற்படுத்திய கட்டுப் பாடுகளேயாகும். உதாரணமாக, தேர்தல் காலத்தில் ஒரு வாக்காளரைத் தன் விருப்பப்படி வாக்களிக்க விடாமல் அவனை ஒருசிலர் சேர்ந்து ஒரு அறையில் அடைத்து வைத்து விடுவார்களென்றால் அந்தச்செயலை அவனது சுதந்திரத்திற்கு எதிரான தடையாகக் கொள்ளலாம்.

ஒரு அரசில் அளிக்கப்படும் சுதந்திரம் அல்லது லிபர்ட்டி கட்டுப்பாடுகளோ அல்லது தடைகளோ இல்லாத நிலையைக்

குறிக்காது. ஒருவனுடைய சுதந்திரம் இன்னொருவனுடைய சுதந்திரத்தால் கட்டுப்படுத்தப்படுகிறது. அதாவது எல்லோரும் முற்றிலும் சுதந்திரமாகச் செயல்பட விரும்பினுல் சமூகத்தில் ஒருவரும் சுதந்திரத்தை முழுமையாக அனுபவித்துக் கொள்ள முடியாது. ஒரு சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு சுதந்திரம் அனுபவிக்கப்படுமானுல் மட்டும்தான் எல்லோரும் சுதந்திரத்தை அனுபவிக்க முடியும். உதாரணமாக, வகுப்பறையில் அமைதி நிலவ வேண்டியது அவசியம். ஒரு மாணவன் அதிக சத்தமாகத் தன்னுடைய பாடங்களை வாசிப்பதை சுதந்திரமாகக் கருதினுல் மற்ற மாணவர்கள் தங்களுடைய பாடங்களை அமைதியான சூழ் நிலையில் கற்கும் சுதந்திரத்தை இழக்க நேரிடும். எல்லா மாண வர்களும் சத்தமாக வாசிக்க ஆரம்பித்துவிட்டால் ஒருவரும் ஒழுங்காக வாசிக்க முடியாத நிலை ஏற்பட்டு விடும். எனவே, அமைதி ஒவ்வொரு மாணவனின் சுதந்திரத்தையும் கட்டுப் படுத்தி, எல்லா மாணவர்களையும் சுதந்திரமாகத் தங்களுடைய கல்வியைக் கற்கும் வாய்ப்பினை அளிக்கிறது. அது போலவே தான் சீரியல் சமூகத்திலும் ஒவ்வொரு குடிமகனும் தனது சுதந்திரத்தை ஒரு சில கட்டுப்பாடுகளின் அடிப்படையில்தான் அனுபவிக்க வேண்டியதிருக்கிறது. ஆனுல் அரசு ஏற்படுத்தும் கட்டுப்பாடுகளும் நிபந்தனைகளும் நியாயமானவைகளாக இருக்க வேண்டும்.

இரண்டாம் உலகப்போரின்போது சர்சிலும் ரூஸோ வல்ட்டும் சேர்ந்து வரைந்த அட்லாண்டிக் சாஸனத்தில் நான்கு வகை சுதந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. அவைகள் பேச்சுச் சுதந்திரம், வழிபாட்டுச் சுதந்திரம், இல்லாமையிலிருந்து விடு பட்டிருத்தல், பயம் அல்லது அச்சத்திலிருந்து விடுபட்டிருத்தல் என்பவைகளாகும். இவைகளில் பேச்சுச் சுதந்திரமும் வழி பாட்டுச் சுதத்திரமும், சுதந்திரமாகத் தன்னுடைய கருத்துக்களைப் பேசுவதற்கும், சுதந்திரமாக மதவழிபாடு செய்வதற்கும் அளிக்கப்பட வேண்டிய உரிமைகளைக் குறிக்கும். இல்லாமை யிலிருந்து விடுதலை பெறுவதும் பயத்திலிருந்து விடுதலை பெறுவதும் அரசு நீக்கவேண்டிய தடைகளைக் குறிக்கும். ஒரு தனி மனிதன் ஒரு செயலைச் செய்ய விரும்பினுல் அதற்குத் தடையாக இல்லாமையோ பயமோ இருக்குமானுல் அவன் சுதந்திரத்தை அனுபவிக்க முடியாது. எனவே, அரசு இல்லாமையையும் பயத்தையும் நீக்கி அவன் விரும்பியதைச் செய்ய அவனுக்கு வசதி செய்து தரவேண்டும். அரசாங்கத்தின் வேவுபணி மீது உள்ள பயமும், பாதுகாப்பு இல்லாமையால் ஏற்படும் பயமும், போர்

மூலமாக ஏற்படும் பயமும், மக்களை சுதந்திரமாக வாழ விடுவதில்லை. அது போலவேதான் ஏழ்மை, வேலையில்லாத் திண்டாட்டம், குறைந்த பட்ச ஊதியமின்மை, முதிர் வயது அல்லது நோய்காரணமாக வேலை செய்ய இயலாமை போன்றவைகள் மக்களைச் சுதந்திரமாக வாழ விடுவதில்லை. எனவே, இந்தத் தடைகளை நீக்கி மக்களுக்கு உண்மையான சுதந்திரத்தை அளிக்க வேண்டும். இவ்விதமாக சுதந்திரத்திற்கு எதிரான தடைகளை நீக்குதலைச் சுதந்திரம் பற்றிய எதிர்மறைக் கருத்தாக கொள்ளலாம்.

சிலர் சுதந்திரத்தின் எதிர்மறைக் கருத்தினைக் குறை கூறுகின்றனர். அவர்களுடைய கருத்துப்படி சுதந்திரம் நேர்மையான ஒரு கோட்பாடு ஆகும். சுதந்திரத்தின் நேர்மறை யான கருத்து யாதெனில் அரசு, தனது கடமைகளை ஒழுங்காக நிறைவேற்றுவதின் மூலமாகச் சுதந்திரம் உணரப்படுகிறது என்பதாகும். ஒருவனுடைய திறமைகளை வளர்ப்பதற்குத் தேவையான வாய்ப்புகளை அரசு ஏற்படுத்தித் தர வேண்டும். அரசு ஏராளமான வாய்ப்புக்களை ஏற்படுத்தினுல் மட்டும் போதாது. அந்த வாய்ப்புக்களை மக்கள் நல்ல முறையில் பயன் படுத்திக் கொள்ளவும் வேண்டும். தன்னுடைய கடமைகளைச் செய்யத் தவறியவனுக்கு அரசும் தன்னுடைய கடமையைச் செய்யத் தவறி விடும். அதாவது அவனுக்குத் தன்னுடைய நுட்பங்களை வளர்ப்பதற்கான வாய்ப்புகளை அளிக்காது என்ப தாகும். நுட்பங்களை வளர்க்க வாய்ப்பில்லை என்ருல் சுதந்திரம் இல்லை என்றே பொருள்.

## சுதந்திரத்தின் வகைகள்
## (Kinds of Liberty)

சுதந்திரத்தை இயற்கைச் சுதந்திரம், சீரியல் சுதந்திரம், அரசியல் சுதந்திரம், பொருளாதார சுதந்திரம், தேசீய சுதந்திரம் என்று ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம். சுதந்திரத்தின் உண்மை யான தன்மையைத் தெரிந்து கொள்ள ஒவ்வொரு வகைச்சுதந் திரத்தைப் பற்றியும் தெரிந்து கொள்ளுவது அவசியம். சுதந்திரத்தின் வகைகளைக் கீழ்கண்டவாறு விளக்கலாம்.

(i) இயற்கைச் சுதந்திரம் (Natural Liberty)

இயற்கைச் சுதந்திரம் மற்றவர்களின் தலையீடுகளிலிருந்து முற்றிலுமாக விடுபட்டிருத்தலைக் குறிக்கும். இதை முழு விடுதலை என்று கூறலாம். இயற்கைச் சுதந்திரத்தை இயற்கை நிலையில்

வாழ்ந்த மனிதர்கள்தாம் அனுபவித்திருக்க வேண்டும். இயற்கைச் சுதந்திரத்தை ஆதரிப்பவர்கள் மனிதன் சுதந்திரத்துடன்தான் பிறந்தான், ஆனால் நாகரீகம்தான் அவனைக் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தி விட்டது என்கின்றனர். இயற்கை நிலையில் வாழ்ந்த அவன் சீரியல் சமூகத்தை ஏற்படுத்திய பொழுது தான் அனுபவித்து வந்த இயற்கைச் சுதந்திரத்தை இழந்து விடுவதாக அவர்கள் கூறுகின்றனர்.

இயற்கைச் சுதந்திரம் பற்றிய கருத்து எல்லோராலும் ஒப்புக் கொள்ளப் படவில்லை. ஏனென்றால் இயற்கை நிலையில் கூட சுதந்திரம் எல்லோராலும் அனுபவிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. பலம் படைத்தவர் மட்டுமே இயற்கை சுதந்திரத்தை அனுபவித்திருக்க வேண்டும். ஒரு சீரியல் சமூகத்தில் மட்டுமே எல்லோரும் சுதந்திரம் அனுபவிக்க முடிகிறது.

(ii) சீரியல் சுதந்திரம் (Civil Liberty)

தனி மனிதன் மற்றவர்களுடன் தன்னுடைய வாழ்க்கையைச் சரி செய்து கொள்வதற்கு அளிக்கப்படும் வாய்ப்பே சீரியல் சுதந்திரமாகும். இயற்கைச் சுதந்திரம் போலல்லாமல் சீரியல் சமூகத்தில் மட்டுமே சீரியல் சுதந்திரத்தைக் காணமுடியும். சீரியல் சமூகம் அளித்துள்ள உயிர் வாழும் உரிமை, சமத்துவ உரிமை, பேச்சுரிமை, மத வழிபாட்டு உரிமை, சொத்துரிமை முதலிய சீரியல் உரிமைகளின் மூலம் சீரியல் சுதந்திரத்தை அனுபவிக்க முடிகிறது. பொதுவாக சீரியல் சுதந்திரம் அரசின் எல்லைக்குள் வாழ்கின்ற அனைவருக்கும் அளிக்கப்படுகிறது. தற்கால அரசுகள் பிரஜைகள், பிரஜைகள் அல்லாதவர் என்று பாராமல் எல்லோருக்கும் இந்த சுதந்திரத்தை அளித்துள்ளன. சீரியல் சுதந்திரம்தான் மற்ற சுதந்திர உரிமைகளுக்கெல்லாம். அடிப்படையாக உள்ளது.

(iii) அரசியல் சுதந்திரம். (Political Liberty)

அரசியல் சுதந்திரம் மக்களுக்கு அரசியல் செயல்களில் பங்கு வகிக்கும் வாய்ப்பினை அளிக்கிறது. அரசியல் சுதந்திரம், வாக்குரிமை, தேர்தலில் போட்டியிடும் உரிமை, பொது அலுவல் உரிமை, அரசாங்கச் செயல்களைக் குறைகூறும் உரிமை, மனுதரும் உரிமை போன்ற அரசியல் உரிமைகளின் மூலமாக அனுபவிக்கப் படுகிறது. அரசியல் உரிமைகள் மூலமாகத்தான் மக்கள் நாட்டு நிருவாகத்தில் பங்கு பெற முடிகிறது. எனவே, அரசியல் சுதந்திரம் மக்களுக்குத் தங்களுடைய நாட்டு அரசியலிலும், நிருவாகத்திலும் பங்கு வகிப்பதற்கு அளிக்கப்படும் வாய்ப்பினை

குறிப்பதாய் உள்ளது. அரசியல் சுதந்திரம் அரசியல் அமைப்புச் சுதந்திரம் என்றும் அழைக்கப்படுகிறது அரசியல் அமைப்புச் சுதந்திரம் மக்களுக்கு அரசாங்கத்தைத் தெரிந்தெடுக்கும் உரிமையினை அளிப்பதைக் குறிக்கும். பொதுவாக அரசியல் சுதந்திரம் பிரஜைகளல்லாதவர்களுக்கு அளிக்கப்படுவதில்லை. இதற்குக் காரணம் பிரஜைகளல்லாதவர்கள் தங்களுடைய சொந்த நாட்டின் மீதே விசுவாசம் உடையவர்களாக இருக்கிருர்கள். எனவேதான் எந்த அரசும் அரசியல் சுதந்திரத்தை பிரஜைகளுக்கு மட்டுமே அளிக்கிறது.

பொருளாதாரச் சுதந்திரம் (Economic Liberty)

ஒரு மனிதனுக்கு அளிக்கப்படும் சீரியல் சுதந்திரமும் அரசியல் சுதந்திரமும் அவனுடைய வாழ்க்கைத் தரம் மிகவும் தாழ்ந்திருக்குமானுல் பொருள் இழந்து விடுகின்றன. வாழ்க்கைத் தரம் உயரவேண்டுமானுல் ஏராளமான பொருளாதார வாய்ப்புகளை அரசு குடிமக்களுக்கு அளிக்க வேண்டும். பொருளாதார வாய்ப்புகள் பெருக்க வேலை வாய்ப்பு உரிமை, குறைந்தபட்ச ஊதிய உரிமை, நோய் நொடிகால உதவித்தொகை போன்ற உரிமைகளைச் சட்டப்படி அளிக்க வேண்டும். பட்டினியாலும், பசியாலும், வாடுகின்ற மக்களுக்கு வாக்குரிமை எதற்கு? வருங்கால வாழ்க்கையே இருண்டு கிடக்கின்ற வேளையில் வழிபாட்டு உரிமையால் என்ன பயன்? பணக்காரர்களைப் பாதுகாத்து ஏழைகளை ஏழ்மைக் கோலத்திலே வைத்து வேடிக்கை பார்க்கும் சொத்துரிமை சொத்து சுகம் அறியா பாமரர்களுக்கு எதற்கு? பொருளாதார சுதந்திரம் எல்லோருக்கும் சமத்துவமாக அளிக்கப்பட வேண்டும். பொருளாதார சுதந்திரத்தை சிறுபான்மையினர் மட்டுமே அனுபவித்து வரும் நாடுகளில் சீரியல் சுதந்திரமும் அதிகநாள் நிலைக்காது. இந்தியாவில் பொருளாதாரச் சுதந்திரம் ஒரு சிலரின் பரம்பரைச் சொத்தாகி விட்டது. அந்தச் சொத்துக்குச் சொந்தக்காரர்களில் ஒரு சிலர் தொடர்ந்து ஆட்சியில் இருந்து வருவதால் இந்த நிலை இன்னும் சிலகாலம் நீடிக்கலாம். ஆனுல் இந்திய மக்களின் எதிர்காலம் ஒளிமயமாக அமைய வேண்டுமானுல் எல்லா மக்களுக்கும் சமமான நிலையில் பொருளாதார உரிமைகள் வழங்கப்பட வேண்டும்.

(v) தேசிய சுதந்திரம் (National Liberty)

தேசீய சுதந்திரம் தேசீய விடுதலையைக் குறிக்கும். அதாவது ஒவ்வொரு குடிமகனும் அன்னிய நாட்டின் ஆதிக்கத்

திலிருந்து விடுபட்டு சுயேச்சையாக வாழ உரிமை பெற்றிருக்கிறான் என்பதாகும். தேசீய சுதந்திரம் கிடைத்த பிறகு தான் மற்ற சுதந்திர உரிமைகளை அனுபவிக்க முடியும். உதாரணமாகக் கூறினால், 1947ம் ஆண்டிற்கு முன்பு வரை இந்திய மக்கள் ஆங்கில அரசாங்கத்தின் ஆதிக்கத்திற்குக் கீழ் இருந்தனர். அதனால் அவர்களுக்குச் சீரியல் சுதந்திரமும், அரசியல் சுதந்திரமும் அனுபவிக்க முடியவில்லை. ஆனால் 1947ம் ஆண்டில் நமது நாடு விடுதலை பெற்றது. விடுதலையானதும் இந்தியாவிற்குத் தேசீய சுதந்திரம் கிடைத்தது. தேசீய சுதந்திரம் கிடைத்திருப்பதனால்தான் இன்று நாம் சீரியல் அல்லது அரசியல் உரிமைகளைத் தடையின்றி அனுபவிக்க முடிகிறது.

## சுதந்திரத்தைப் பாதுகாக்க வழிமுறைகள் (Safeguards of Liberty)

முதலாவதாக, சுதந்திரத்தைப் பாதுகாக்க அரசியல் அமைப்பின் மூலமாக அடிப்படை உரிமைகளை மக்களுக்கு அளிக்க வேண்டும். அரசியல் அமைப்பின் மூலமாக அளிக்கப்படும் உரிமைகள் அரசாங்கம் அத்து மீறிச் செயல்படாமல் பார்த்துக் கொள்கின்றன. மேலும், தனி மனிதன் தன்னுடைய ஆளுமையை நன்கு வளர்த்துக்கொள்ள அரசியல் அமைப்பின் மூலமாக உறுதியளிக்கப்படும். அடிப்படை உரிமைகள் பெரிதும் உதவுகின்றன.

இரண்டாவதாக, நீதித்துறை, ஆட்சித்துறையின் ஆதிக்கத்தினின்று விடுபட்டு சுயேச்சையாக இயங்க வேண்டும். சுயேச்சையாகவும், பாரபட்சமின்றியும் நீதி மன்றங்கள் செயல்பட முடியாத நாட்டில் மக்கள் சுதந்திரத்தை அனுபவிக்க முடியாது. நீதி மன்ற முடிவுகளில் அரசியல் செல்வாக்கிற்கு இடமளித்தால் நீதியும் நியாயமும் கொலை செய்யப்பட்டு விடும். மக்களுக்கு நீதி கிடைக்கா விட்டால் சுதந்திரம் அழிந்து விடும். எனவே, நீதித்துறை ஆட்சித் துறையின் செல்வாக்கிற்கு இணங்காமல் அல்லது பணியாமல் சுயேச்சையாகச் செயல்படுவது மிகவும் முக்கியமான காரியமாகும்.

மூன்றாவதாக, சுதந்திரத்தைப் பேணிப் பாதுகாப்பதற்குச் சட்டத்தின் ஆட்சி மலர வேண்டும். சட்டத்தின் ஆட்சி சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்னும் உயரிய கருத்தினை நிலை நாட்டுகிறது. சாதி, மதம், பால், செல்வம் என்பவைகளின்

அடிப்படையில் வேறுபாடுகள் காட்டாது சட்டம் எல்லோரையும் சமமாக நடத்துகிறது. ஆளுகின்றவரும் ஆளப்படுகின்றவரும் ஒரே சட்டத்தின் கீழ் உள்ளனர். அரசின் கொள்கைகளும் செயல்களும் பாரபட்சமற்றவைகளாக இருக்கவேண்டும் என்பதே சட்டத்தின் ஆட்சி வலியுறுத்தும் கருத்து. எனவே, சட்டத்தின் ஆட்சி அமலில் இருந்தால் மக்கள் சுதந்திரத்தைத் தடையின்றி அனுபவிக்க முடிகிறது.

நான்காவதாக, பொருளாதார நீதி சுதந்திரத்தைப் பேணுவதற்குப் பயன்படும் ஒரு வழிமுறையாக உள்ளது. வேலையில்லாத் திண்டாட்டம், பசி, பட்டினி ஆகியவற்றால் ஏற்படுகின்ற அச்சம் சுதந்திரத்தைப் பொருள் இழக்கச் செய்து விடும். ஒவ்வொரு மனிதனுக்கும் அத்தியாவசியப் பொருளாதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்குத் தேவையான வசதிகளையும் வாய்ப்புகளையும் உறுதி அளிப்பதன் மூலம் அவன் தன்னுடைய அறிவு நுட்பங்களைச் சுதந்திரமான முறையில் வளர்த்துக் கொள்ள முடிகிறது.

இறுதியாக, பொது மக்களின் விழிப்புணர்வு சுதந்திரத்தை பாதுகாக்கும் கருவியாக உள்ளது. எனவேதான் அயராத விழிப்புணர்வு சுதந்திரத்திற்குத் தரப்படும் பரிசு என்று சரியாகச் சொல்லப்படுகிறது. மக்கள் எப்பொழுதும் ஜாக்கிரதையாகவும் சுதந்திரத்தைக் காக்க உயிரைக் கொடுக்கவும் தயாராக இருக்க வேண்டும். அரசாங்கம் அதிகாரத்தை தவறாகப் பிரயோகித்தால் மக்கள் அந்த அரசாங்கத்தை எதிர்க்க வேண்டும். தேவையானால் அப்படிப்பட்ட அரசாங்கத்தை நீக்கி விட்டு நேர்மையான அரசாங்கத்தை ஏற்படுத்தவும் தயாராக இருக்க வேண்டும். அப்படியானால்தான் மக்கள் தங்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியும்.

## சட்டத்திற்கும் சுதந்திரத்திற்கும் உள்ள தொடர்பு (Relation Between Law and Liberty)

சுதந்திரம் என்பது நாம் விரும்பியதைக் கட்டுப்பாடற்ற முறையில் செய்வதற்கான உரிமையைக் குறிக்காது. கட்டுப்பாடுகள் எதுவுமின்றி சுதந்திரம் அளிக்கப்பட்டால் எல்லோரும் அந்த சுதந்திரத்தை அனுபவிக்க முடியாது. எனவேதான் ஒரு சில கட்டுப் பாடுகளை ஏற்படுத்தி அவைகளின் அடிப்படையில் சுதந்திரம் அளிக்கப்படுகிறது. சுதந்திரத்தை அனுபவிப்பதற்குத் தேவையான கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவதற்கு என ஒரு அதிகாரமும் அந்த அதிகாரத்தைச் செயல்படுத்து

வதற்கு என ஒரு அமைப்பும் தேவைப்படுகிறது. அத்தகைய தோர் அமைப்பே அரசு ஆகும். அரசு தனது அதிகாரத்தைச் சட்டங்களின் மூலமாகப் பிரயோகிக்கிறது. சுதந்திரத்தை அனுபவிக்கத் தேவையான கட்டுப்பாடுகளை அரசு சட்டங்களின் மூலமாகவேதான் ஏற்படுத்துகிறது. அரசின் சட்டம் ஒவ்வொரு குடிமகனையும் அவனுடைய சங்கங்களின் செயல்களையும் கட்டுப்படுத்தி சுதந்திரத்தை எல்லோரும் அனுபவிக்கச் செய்கிறது.

சிலர் சட்டம் சுதந்திரத்தை அழித்து விடுகிறது என்று நினைக்கின்றனர். அவர்கள் கட்டுப்பாடுகளே இல்லாவிட்டால் தான் சுதந்திரத்தை முழுமையாக அனுபவிக்க முடியும் என்று எண்ணுகின்றனர். ஆனால் கட்டுப்பாடுகள் இருப்பதால்தான் சுதந்திரத்தை அனுபவிக்க முடிகிறது என்பதை அனுபவம் விளக்கும். ஒவ்வொரு தனி மனிதனும் தான் விரும்பியதைச் செய்ய அனுமதிக்கப்பட்டால் அரசியல் குழப்பம் ஏற்பட்டு அமைதி குலையும். அரசினுடைய சட்டங்கள் பாதுகாப்பையும் அமைதியையும் ஏற்படுத்தி மக்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாக்கின்றன. ஆகவே சுதந்திரம் அரசியல் அதிகாரத்தைச் சார்ந்துள்ளது. மேலும், சட்டங்கள் எல்லோருக்கும் தங்கள் ஆளுமையை வளர்த்துக் கொள்வதற்கு சமவாய்ப்பினை அளிக்கின்றன. இவ்வாறு சட்டமும் சுதந்திரமும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையவைகளாக உள்ளன.

சட்டமும் சுதந்திரமும் நெருங்கிய தொடர்புடையவைகளாக உள்ளன என்பதற்காக அரசு இயற்றும் ஒவ்வொரு சட்டமும் தனிமனிதனின் சுதந்திரத்தை நிலைநிறுத்தும் என்று கூறிவிட முடியாது. சட்டம் ஏற்படுத்தும் கட்டுப்பாடுகள் யாவும் நியாயமானவைகளாகவும் பாரபட்சமற்றவைகளாகவும் இருத்தல் வேண்டும். அரசு ஏற்படுத்தும் சட்டங்கள் நாட்டு மக்கள் எல்லோருடைய நலனை முன்னேற்றும் நோக்கமுடையவைகளாக இருத்தல் வேண்டும். மக்களாட்சி மலர்ந்துள்ள நாடுகளில் அரசினுடைய அதிகாரத்திற்கு சில வறையறைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அந்த வரையறைகளைக் கீழ்க்கண்டவாறு ஆராயலாம்.

(i) குற்றங்களை குறைக்கவல்ல சமூக நிறுவனங்கள் (Social Institutions to reduce crimes)

குடும்பம் மற்றும் சமய நிறுவனங்கள் கல்விச்சாலைகள் போன்ற சமூக நிறுவனங்கள் சமூகத்தில் வாழுகின்ற மக்களின்

உள்ளத்தை ஓரளவு பண்படுத்தி விடுவதால் சிறு குற்றங்கள், பெருவாரியாக நிகழவில்லை என்றே கூறவேண்டும். பெரிய குற்றங்களைச் செய்கிறபொழுது மட்டும்தான் அரசு தலையிட வேண்டியதாயுள்ளது. குற்றத்திற்கும் பாவத்திற்கும் இடையே வித்தியாசம் உள்ளது. குற்றம் என்பது குற்றவியல் சட்டத்தை மீறுகின்ற செயலைக் குறிக்கும். பாவம் என்பது அறநெறிக் கோட்பாட்டை மீறுகின்ற செயலைக்குறிக்கும். அரசினுடைய சட்டம், தவருன ஒரு செயல் எப்பொழுது சமூகத்தின் நலனை பாதிக்கிறதோ அப்பொழுதுதான் அந்தத் தவருன செயலைக் குற்றமாகக்கருதி அந்தக் குற்றத்தைச் செய்தவனைத் தண்டிக்கிறது. எனவே, தனிநபர் தனக்குத் தானே தீங்கு விளைவித்துக் கொண்டால் அரசு அவனைத் தண்டிக்க முடியாது. எப்போது அவனுடைய செயல் சமூகத்தின் பொது நலனுக்கு தீங்கு விளைவிக்கிறதோ அப்போதுதான் அரசு தலையிடமுடியும்.

இந்தக் கருத்தினை ஜான் ஸ்டுவர்ட் மில் தன்னுடைய "On Liberty" என்னும் நூலில் ஆதரித்து எழுதியுள்ளார். இவருடைய கருத்துப்படி ஒருவன் தன்னுடைய வீட்டில்வைத்து மது அருந்தினுல், அவன் மற்றவர்களுக்கு இடையூறு விளைவிக்காத வரையில் அரசு தலையிட அவசியமில்லை. அதுபோலவே தான் போதை தரும் மருந்து அருந்துவதும் தற்கொலை செய்து கொள்வதும் அரசால் தடை செய்யப்பட வேண்டியதில்லை என்று அவர் கருதுகிருர்.

அநேகர் மில் கூறும் இக்கருத்தினை ஏற்றுக் கொள்ள வில்லை. அவர்கள் கருதுவதாவது, மனிதனுடைய ஒவ்வொரு செயலும் சமூகத்தில் ஏதாவது ஒரு விளைவை ஏற்படுத்தாமலிருக்காது. எனவே, குடிகாரனின் செயலும் குடும்பத்தின் மற்ற அங்கத்தினர்களின் விருப்பங்களைச் சீர்குலைத்து முடிவில் சமூகத்துக்கே இடையூறு விளைவிக்கும் என்பதாகும். மேலும் அரசு கூட மனிதனின் அற ஒழுக்கத்தை முன்னேற்ற நோக்கத்தின் அடிப்படையில் தான் சட்டங்களை ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. எனவே, அரசின் சட்டங்கள் நிச்சயமாக மனிதனின் சொந்த வாழ்க்கையையும் கட்டுப்படுத்தத்தான் செய்கிறது. ஆதலால் மில்லினுடைய கருத்து தவறு என்று இவர்கள் எண்ணுகின்றனர்.

(ii) சீரியல் தகராறுகளுக்கு தனிப்பட்ட முறையில் முடிவு காணல் (Special Methods to settle Civil Disputes)

சீரியல் சட்டம் தனி மனிதர்களுக்கு இடையே தோன்றும் சச்சரவுகளையும் அவர்களுடைய சங்கங்களுக்கு இடையே

ஏற்படும் தகராறுகளையும் கவனிக்கிறது. இந்தச் சச்சரவுகளில் யார் சரி யார் தவறு என்று அரசு முடிவு செய்கிறது. ஆனால் எல்லாச் சச்சரவுகளிலும் அரசு தலையிடுவதில்லை. ஒரு சில சச்சரவுகளைத் தனியார் நிறுவனங்கள் பல தீர்த்து வைத்து விடுகின்றன. உதாரணமாக, ஒரு தொழிற்சாலையில் வேலைபார்க்கும் பணியாளர்கள் வேலை நிறுத்தம் செய்யும் பொழுது தொழிற்சாலையின் மேலாண்மையும், பணியாளர்களின் சங்கமும் கலந்து ஒரு சுமுகமான முடிவுக்கு வரலாம். அதனால் அரசின் தலையீடு குறைக்கப்படலாம். ஆனால் அரசு தலையிடாவிட்டால் வேலை நிறுத்தம் வாபஸ் செய்யப்படாமல் இருந்து விடும். அதனால் பொருள் உற்பத்தி பாதிக்கபடுகிறது. அரசு தலையிட்டால் பணியாளர்களின் சுதந்திரம் பாதிக்கப்படுகிறது. எனவே அரசின் அதிகாரம் எந்த அளவிற்கு வரையறை செய்யப்படல் வேண்டும் என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. பெரும்பாலும் சீரியல் தகராறுகளில் பல தனிப்பட்ட முறைகளால் தீர்த்துவைக்கப்பட்டு விடுகின்றன. அவைகளால் முடியாத போது மட்டும்தான் அரசு தனது கட்டாய வலிமையைப் பிரயோகித்து பிரச்சனைக்கு முடிவு காணுகிறது.

(iii) பயனீட்டுக் கொள்கையினரின் கருத்து (Idea of Utilitarians)

பொதுவுடமை நாடுகளில் வேலைக்கான கூலி அரசால் நிர்ணயம் செய்யப் படுகிறது. கூலிக்குப் பேரம் பேச வேண்டிய அவசியம் இல்லை என்பதால் அங்கு வேலை நிறுத்தம் ஏற்படுவதற்கு வாய்ப்பில்லை. ஆனால் கூலிக்குப் பேரம் பேச அனுமதிக்கப்படும் நாடுகளிலெல்லாம் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே வருமானத்தைக் கூலியாகவும் லாபமாகவும் எவ்வாறு பங்கிடுவது என்பதில் பல கருத்து வேறு பாடுகள் தோன்ற வாய்ப்பிருந்தால் வேலை நிறுத்தம் தவிர்க்க முடியாத ஒரு தீமையாகி விடுகிறது. வேலை நிறுத்தம் பொருளாதார உற்பத்தியைப் பாதிப்பதால் அது சமூகத்திற்கு எதிரான ஒரு செயலாகும். எனவே, அரசு தலையிட வேண்டியிருக்கிறது.

ஆனால் 19 ம் நூற்றுண்டின் பயன்பாட்டு கொள்கையினர் ஒரு நாட்டின் பொருளாதார வாழ்க்கையில் அரசு குறுக்கிடக் கூடாது என்று கூறுகின்றனர். உற்பத்தியாளருக்கும் விநியோகஸ்தர்களுக்கும் முழுமையான சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்துகின்றனர். ஆனால் நாட்டின் பொருளாதாரத்தின் ஒரு பகுதியாவது அரசின் கட்டுப்பாட்டிற்குக் கீழ் இருக்க வேண்டும் என்பது யாவரும் ஒப்புகொள்ளக் கூடியதே. உதாரணமாக, அணுசக்தி தனியார்

நிறுவனத்திடம் ஒப்படைக்கப்பட்டால் நாட்டின் பாதுகாப்பே அழிந்துவிடும். எனவே, அரசின் கட்டுப்பாடு பொருளாதாரத் துறையில் முழுவதுமாகத் தவிர்க்கப்பட முடியாது போய் விடுகிறது.

தனி மனிதனின் தனித் தன்மையின் மீதுள்ள அக்கறை (Concern for the Individual's Individuality)

அநேக தற்கால அரசுகளில் வேலையில்லாத் திண்டாட்டம் முதிர் வயது, சுகவீனம் ஆகியவைகளின் காரணமாக மக்களின் அத்தியாவசியத் தேவைகள் கூட பூர்த்தி செய்யப்படாத நிலை ஏற்பட்டுள்ளது. அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்ய அரசு ஏராளமான நன்னலச் செயல்களைச் செய்திட வேண்டும். வேலை வாய்ப்பு அளிப்பது முதல் வயதான காலத்திலும் நோய் வாய்பட்ட போதும் உதவிப்பணம் அளிப்பது வரை உள்ள நன்னலச் செயல்களைச் செய்வது அரசினுடைய பொறுப்பாக அமைகிறது. இந்தச் செயல்களை எல்லாம் நல்ல முறையில் நடத்துவதற்கு அரசுக்கு பணம் தேவைப்படுகிறது. தேவைப் படும் பணத்தை அரசு வரிமூலம் சேகரிக்கிறது. வரிவசூலித்தல் தனி மனிதனின் வருமானத்தைப் பாதிக்கிறது. எனவேதான் அரசினுடைய நன்னலம் கருதும் செயல்கள் தனி மனிதனின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதாக எண்ணப்படுகிறது.

ஆனால் நன்னலச் செயல்கள் பொது நன்மைக்காகவும், நீதியை நிலை நாட்டுவதற்காகவும்தான் தனிமனிதனின் சுதந் திரத்தைக் கட்டுப்படுத்துவதாகக் கருத வேண்டும். கல்விப் பணியும் மருத்துவப் பணியும் பொது நன்மைக்காகவே ஏற் படுத்தப்பட்டுள்ளன. கற்றவன் கல்லாதவனைவிட சமூகத்திற்கு அதிகப்பயனுடையவனாக இருக்கிறான். நோயின்றி திடகாத்திர மாக வாழும் ஒருவன் நோயாளி ஒருவனைவிட சமூகத்திற்கு அதிகப் பயனுடையவனாவான். ஆனால் உதவிப்பணம் பெறு கின்ற நோயாளியும், வயதானவனும் சமூகத்திற்கு எந்த விதத்திலும் பயனில்லாதவர்கள். ஆனால் அரசு அவர்களுக்கு நீதியின் அடிப்படையில் சலுகைகள் அளிக்க வேண்டியிருக் கிறது. சமூகம், ஒருவரும் வயதான காலத்தில் பட்டினியால் சாகாமல் பார்த்துக் கொள்ளும் கடமையைப் பெற்றுள்ளது. எனவேதான் அரசு தர்மத்தின் பேரில் அவர்களுக்கு உதவிப் பணம் அளிக்கிறது. ஆனால் சிலர் என்ன கூறுகிறார்கள் என்றால் அரசின் சமூக நலக்கொள்கைகள் தனி மனிதனின் துவக்கும் தன்மையையும் தனித் தன்மையையும் சாகடித்து அரசின் உதவியை எதிர்பார்த்து வாழத்தூண்டுகின்றனவாம். அதனால்

அரசு தனி மனிதனைச் சுயமாகச் செயல்பட அனுமதிப்பதில்லை. அதனால்தான் அரசின் ஈடுபாடும் தலையீடும் குறைவாக இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர்.

இவ்வாறு அரசின் அதிகாரம் எந்த அளவுக்குத் தனி மனிதனின் வாழ்வில் தலையிடலாம் என்பதுபற்றித் திட்டவட்டமான முடிவு எதுவுமில்லை. ஆனால் ஒன்றுமட்டும் நினைவில் இருப்பது நல்லது. அதாவது சட்டம் ஒரு துறையில் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும்போது அந்தக் கட்டுப்பாடு மற்ற துறைகளில் சுதந்திரத்தை அளிக்கிறது என்பது மறுக்க முடியாத உண்மை. எனவே, சட்டத்தின் மூலமாக மட்டும்தான் எல்லா மக்களுக்கும் நியாயமான அளவிற்கு சுதந்திரத்தை அளிக்க முடியும் என்பது அனுபவம் கண்ட உண்மை.

## அரசின் அதிகாரத்தின் மீதான வரையறை
## (Limitation for States Authority)

சிலர் அரசுக்கு சர்வ அதிகாரம் உள்ளது என்றும், அதனால் அரசு எந்தச் செயலையும் செய்வதற்கு உரிமை பெற்றுள்ளது என்றும் கருதுகின்றனர். சர்வாதிகார நாடுகளிலும் எழுதிய அரசியல் அமைப்பை பெற்றிராத ஜனநாயக நாடுகளிலும் அரசின் அதிகாரத்திற்குக் கட்டுப்பாடு எதுவும் இல்லை என்று கூறி விடலாம். ஆனால் எழுதிய அரசியல் அமைப்பு அமுலில் இருக்கும் அரசுகளிலெல்லாம் அரசின் அதிகாரத்திற்கு வரையறைகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

சட்ட மன்ற மேன்மை நிலை நிறுத்தப்பட்ட நாடுகளில் எந்த ஒரு காரியத்தின் மீது வேண்டுமானாலும் சட்டங்களை எளிதாக இயற்றிவிடலாம் என்றுள்ளது. ஆனால் நடைமுறையில் மக்களுக்கு விருப்பமான சட்டத்தை மட்டும்தான் சட்டமன்றம் இயற்ற முடிகிறது. அரசு மக்களுடைய நன்மைக்காகவேதான் ஏற்படுத்தப்பட்டுள்ளது. நன்மை செய்யாத அரசை மக்கள் எதிர்ப்பது நிச்சயம். அரசு நல்வாழ்க்கையை மக்களுக்கு அமைத்துத் தருவதற்காகவே உள்ளது. அறநெறி நோக்கங்களாகிய நீதியையும், நேர்மையையும் நிலைநாட்டி தர்மத்தைக் காத்துப் பொதுநலனைப் பேணுவதற்காகவே அரசு இன்றும் நிலைத்து நிற்கிறது. ஆனால் இந்த நோக்கங்களை அடைய அரசு வலிமையைப் பிரயோகித்துதான் சட்டங்களை அமல் படுத்த வேண்டியதாயிருக்கிறது. வலிமையைப் பிரயோகித்தல் அறநெறிக் கோட்பாட்டிற்கு முற்றிலும் எதிரான செயல். அறநெறிச் சுதந்திரம் அறநெறி நோக்கத்தை அடையப்

பிரயோகிக்கும் வலிமையால் தடை செய்யப்படுகிறது. எனவே அரசு மனிதனின் அறநெறிச் சுதந்திரத்தையும் சமூகச் சுதந்திரத்தையும் அழித்து விடுகிறது. அதன் காரணமாக மனிதனின் நல்வாழ்விற்கே பங்கம் ஏற்பட்டு விடுகிறது. எனவே, அறநெறிச் சுதந்திரத்திற்கு கொடுக்கப்படும் முக்கியத்துவம் அரசின் அதிகாரத்திற்கு வரையறையை ஏற்படுத்தி விடுகிறது.

தனிமனிதனின் சுதந்திரத்திற்கும் அரசின் அதிகாரத்திற்கும் இடையே முரண்பாடு ஏற்பட்டு ஒன்றையொன்று கட்டுப்படுத்திக் கொள்ள முயல்கின்றன தாமஸ் ஹாப்ஸ், அரசின் அதிகாரத்தால் ஏற்படும் நன்மைகளை அடைவதற்கு சுதந்திரம் கட்டுப்படுத்தப்பட வேண்டும் என்று கருதுகிறார். ஜான் லாக்கு, ஜான் ஸ்டுவர்ட் மில் போன்றவர்கள் தனி மனிதனின் சுதந்திரத்தைக் காக்க அரசின் அதிகாரத்தைக் குறைக்க வேண்டும் என்று நினைக்கின்றனர். தனிமனிதனுக்கு முழுமையான சுதந்திரமும் அதே நேரத்தில் அரசுக்கு வரம்பில்லா அதிகாரமும் அளிப்பது என்பது முடியாத காரியம். இரண்டிற்குமிடையே சமரசம் ஏற்பட்டால்தான் தனி மனிதன் சுதந்திரத்தை அனுபவிக்க முடியும். அரசும் தனது சுயஅதிகாரத்தை விட்டுக் கொடுக்க வேண்டியதில்லை.

பிளேட்டோ, ரூஸோ போன்றவர்கள் உண்மையான சுதந்திரம் ஒருவன் தன்னுடைய கடமையைத் தவறாது செய்வதில்தான் இருக்கிறது என்று கூறுகின்றனர். அவர்கள் அரசின் சர்வ வல்ல அதிகாரம்தான் தனிமனிதனுக்கு முழுமையான சுதந்திரத்தை உறுதியாக அளிக்க முடியும் என்று கருதுகின்றனர். அவர்களுடைய கருத்துப்படி ஒரு மனிதன் தான் விரும்பியதை எல்லாம் செய்ய முயற்சிக்கக் கூடாது. அவன் தன்னுடைய ஆசைகளுக்கு அடிமையாகிவிட்டால் தன்னுடைய சுதந்திரத்தைச் சரிவர அனுபவிக்க முடியாது. உதாரணமாக, குடிப்பழக்கம் தன்னுடைய தேகநலனைக் கெடுத்து விடுவதால் அதற்கு அடிமையாகி விடுகின்றவன் மற்ற சுதந்திர உரிமைகளை அனுபவிக்க முடியாமலாகி விடுகிறான். ஆனால் அரசின் சட்டங்கள் அவனைக் குடிக்கவிடாமல் தடை செய்து விடுமானால் அவன் அவனுடைய ஆசைகளுக்கு அடிமையாகமாட்டான். அதனால் சுதந்திரத்தை அனுபவித்துக் கொள்ள முடிகிறது. இவ்வாறு அரசு வலிமையைப் பிரயோகித்து ஒருவனைக் குறிப்பிட்ட முறையில் செயல்படக் கட்டாயப் படுத்தினாலும் அது அவன் சுதந்திரத்தை அனுபவிக்கக்கூடிய வகையிலான பொது நன்மைக்காகவேதான் அப்படி நடந்துகொள்கிறது என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

# 7. சமத்துவம்

## சமத்துவத்தின் பொருளும் தன்மையும்
## (Meaning and Nature of Equality)

சாதாரணமாக சமத்துவம் என்னும் சொல்லிற்குத் தவறுதலாக மக்கள் பொருள் கொண்டு விடுகின்றனர். எல்லோரையும் சமமாக நடத்துதலையோ அல்லது எல்லோருக்கும் சமமான சன்மானம் வழங்குதலையோ சமத்துவம் குறிக்காது. இயற்கை மனிதர்களைச் சமமாக படைக்கத் தவறி விட்டது. ஒரே மாதிரி சாயலையும் குண இயல்புகளையும் உடைய இரண்டு மனிதர்களைக் காண்பது அரிது. சிலர் பலசாலிகளாக இருக்கின்றார்கள். சிலர் பலம்குறைந்தவர்களாக இருக்கின்றனர். சிலர் பார்ப்பதற்கு அழகான தோற்றத்தைப் பெற்றுள்ளனர். சிலரைப்பார்க்கவே சகிக்கவில்லை. இவ்வாறு இயற்கை மனிதனுக்கு மனிதன் வித்தியாசத்தை ஏற்படுத்தியுள்ளது ஆனால் இயற்கையாக அமைந்துள்ள வித்தியாசங்கள் தவிர்க்க முடியாதவை. எனவே, சமத்துவம் என்பது மனிதர்களால் செயற்கையாக ஏற்படுத்தப் படுகின்ற வேறுபாடுகள் இல்லாத ஒரு நிலையைக் குறிக்கும்.

சமத்துவத்திற்கு எதிர் மறைத்தன்மையும் நேர்மறைத் தன்மையும் உண்டு. அதன் எதிர்மறைத் தன்மை யாதெனில் பால், செல்வம், சாதி, மதம், பிறப்பு இவைகளின் அடிப்படையில் ஏற்படுத்தப்படும் வேறுபாடுகளை நீக்குதலாகும். அதாவது எந்த ஒரு தனி நபருக்கும் தனிப்பட்ட சலுகைகள் எதுவும் அளித்தல் கூடாது. ஆளுமையை நன்கு வளர்ப்பதற்குச் சாதகமாக எல்லோருக்கும் வேறுபாடுகளற்ற நிலையில் உரிமைகள் அளிக்கப்படல் வேண்டும் என்பதே சமத்துவத்தின் பொருள்.

சமத்துவத்தின் நேர்மறைத் தன்மை எல்லோருக்கும் தேவையான அளவிற்கு வாய்புகள் அளிக்கப்படுதலைக் குறிக்கும். தேவையான அளவிற்கு வாய்புகள் அளிக்கப்பட வேண்டும் என்றால் சம அளவில் வாய்ப்புகள் அளிக்கப்பட வேண்டும் என்று பொருள்படாது. மனிதர்கள் பெற்றுள்ள இயல்புகளின் தன்மையில் வேறுபாடுகள் இருப்பதால் ஒவ்வொரு மனிதனுக்கும் தன் தன் இயல்புகளின் தன்மைக்கேற்ப வெவ்வேறுபட்ட வாய்ப்பு

கள் தேவைப்படும். இவ்வாறு தான் ஒவ்வொரு தனிமனிதன் ஒவ்வோர் அடுத்த மனிதனுக்கும் சமமானவனுகத் தன்னைக் கருதமுடியும். எல்லாவற்றிற்கும் மேலாக சமத்துவம் என்பது நாட்டின் செல்வம் எல்லோருக்கும் நியாயமான முறையில் பகிரப்பட வேண்டும். என்னும் உயரிய கருத்தை உணர்த்துவதாய் உள்ளது. அதாவது நாட்டின் செல்வம் ஒரு சிலருடைய கையில் மட்டும் போய்த் தங்கி விடாமல் அது எல்லோருக்கும் அவனவன் தேவைக்கேற்பப் பங்கிடப் படவேண்டும் என்பதாகும்.

## சமத்துவத்தின் வகைகள்
## (Kinds of Equality)

சமத்துவத்தை சீரியல், அரசியல், பொருளாதார, சமூக சமத்துவம் என நான்கு வகைகளாகக் கூறலாம். ஒவ்வொரு வகை சமத்துவமும் மனிதனின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத் திற்கும் மிக அவசியமானதாகவே உள்ளது.

(i) சீரியல் சமத்துவம்: (Civil Equality)

சீரியல் சமத்துவம் எல்லா மக்களுக்கும் சம அளவில் சீரியல் உரிமைகளை அளிப்பதைக் குறிக்கும். சீரியல் உரிமைகளை வழங்கும் பொழுது மனிதனுக்கு மனிதன் வேறுபாடு செய்தல் கூடாது. சட்டத்தின் முன் அனைவரும் சமமாக நடத்தப்படல் வேண்டும். சட்டம் ஒருவனுக்கு அளிக்கின்ற சலுகைகளை எல் லோருக்கும் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும். சட்டம், சாதி, மதம், மொழி, போன்றவைகளின் அடிப்படையில் மனிதனுக்கு மனிதன் வேறுபாடு செய்தல் கூடாது. அப்படியானுல் தான் சீரியல் சமத்துவம் நிலைக்கும்.

(ii) அரசியல் சமத்துவம் (Political Equality)

அரசியல் அதிகாரத்தில் மக்கள் பெற்றிருக்கும் பங்கும் உரிமையும் அரசியல் சமத்துவம் எனப்படும். எல்லா மக்க ளுக்கும் அரசாங்க நிருவாகத்தில் சம உரிமை அளிக்க வேண்டும் சாதி, மதம், மொழி, இனம் போன்றவைகளின் பேரில் வேறுபாடு காணுது நிர்ணயிக்கப்பட்ட தகுதி பெற்ற அனைவருக்கும் அரசியல் உரிமைகள் அளிக்கப்படுதலே அரசியல் சமத்துவத்தின் சாராம்சமாகும். அரசியல் சமத்துவம் மக்களாட்சியையும் வயது வந்தோர் வாக்குரிமையும் குறிக்கும்.

(iii) பொருளாதாரச் சமத்துவம் (Economic Equality)

பொருளாதாரச் சமத்துவம் இரு காரியங்களைக் குறிப்பிடு வதாய் உள்ளது. முதலாவதாக, சமூகத்தின் செல்வம் நியாயமான

முறையில் யாவருக்கும் சரிசமமாகப் பங்கிடப்படல் வேண்டும். நாட்டின் செல்வம் முழுவதும் ஒரு சிலரின் கைகளில்மட்டும் போய்க் குவிந்துவிட்டால் அவர்கள் செல்வந்தர்களாகவும் பெரும் பாலானோர் தரித்திரர்களாகவும் ஆகிவிடுவார்கள். எனவே தான் ஒருவனுக்கு ஆடம்பரவாழ்க்கை அமைவதற்கு முன் எல்லோருடைய அடிப்படைத் தேவைகளும் பூர்த்தி செய்யப் பட்டிருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. இரண்டாவ தாக, அரசியல் ஜனநாயகம் இருந்தால் மட்டும் போதாது. வாணிபம், தொழிற்சாலை, விவசாயம், ஆகியவைகளிலும் ஜன நாயகம் தழைக்க வேண்டும் என்பதைப் பொருளாதாரச் சமத்துவக் கருத்தாகக் கூறலாம்.

(iv) சமூகச் சமத்துவம் (Social Equality)

சமூகச் சமத்துவம் சமூகத்தில் வாழுகின்ற அனைவருக்கும் சம அந்தஸ்து தருவதைக் குறிப்பிடும். செல்வம், பிறப்பு, சாதி, மதம், இனம், பால் ஆகியவைகளின் அடிப்படையில் சமூகத்தில் வேறுபாடுகள் ஏற்படக் கூடாது. தீண்டாமை, பெண்களின் தாழ்த்தப்பட்ட நிலை, விதவை மறுமணம் என்பது போன்ற காரியங்கள் சமூகத்தில் உள்ள சமத்துவமின்மையைக் குறிப் பிடும். எந்த ஒரு மனிதனும் வேறு ஒரு மனிதனுக்கு எந்தவிதத் திலும் தாழ்ந்தவனல்லன். சம அந்தஸ்து சமூகச்சமத்துவத்தை உருவாக்குகிறது என்பதால் சாதிமதபேத மின்றி யாரையும் அரசு சமநிலையில் நடத்த வேண்டும். பொருளாதாரத்துறையில் ஏற்படும் வளர்ச்சியும் கல்வித்துறையில் ஏற்படும் முன்னேற் றமும்தான் ஒரு நாட்டில் சமூக சமத்துவத்தை உண்டு பண்ணு கின்றன.

## சுதந்திரத்திற்கும் சமத்துவத்திற்கும் உள்ள தொடர்பு (The Relation between Liberty and Equality)

சுதந்திர பிரியர்களாகக் கருதப்படும் டோக்கிவல்லியும் ஆக்டன் பிரபுவும் சுதந்திரமும் சமத்துவமும் ஒன்றுக்கொன்று முரணான கருத்துக்கள் என்று கூறியுள்ளனர். ஆனால் உண்மை யில் இவர்களுடைய கருத்து தவறானதாகவே தோன்றுகின்றது. சுதந்திரமும் சமத்துவமும் ஒருபோதும் ஒன்றுக்கொன்று முரண் படுபவைகளல்ல. இரண்டும் நெருங்கிய தொடர்புடையவை களாகவே காட்சியளிக்கின்றன. உரிமையும் கடமையும் எந்த அளவிற்கு நெருங்கிய தொடர்புடையவைகளாக இருக்கின் றனவோ அந்த அளவிற்குச் சுதந்திரமும் சமத்துவமும் ஒன்றுக் கொன்று தொடர்பு கொண்டுள்ளன என்றே கூறவேண்டும்.

மனிதனின் நல்வாழ்க்கைக்குத் தேவையான இருமுக்கிய நிலைகளாக சுதந்திரமும் சமத்துவமும் உள்ளன. சமத்துவம் சுதந்திரத்தை நிலைபெறச் செய்கிறது. சமத்துவம் இல்லா விட்டால் ஒருவனுக்குக் கொடுக்கப்படும் அதே சுதந்திரம் இன்னொருவனுக்கும் கிடைக்கும் என்று உறுதியாகக் கூறமுடியாது. அதனால்தான் உரிமைக்காகப் போராடும் பொழுது சுதந்திரத்திற்கும் சமத்துவத்திற்கும் சமஅளவில் முக்கியத்துவம் அளிக்கப் படுகிறது. அரசின் அடிப்படை நோக்கம் சுதந்திரம் எல்லோருக்கும் கிடைக்க வேண்டும் என்பதாகும். இந்த அடிப்படை நோக்கத்தை நிறை வேற்றுவதற்கான வழிமுறையாக சமத்துவ உரிமை உள்ளது. முடிவு அல்லது நோக்கம் அதை அடையப் பின்பற்றப்படும் வழிமுறையினின்று பிரிக்க முடியாதது. எனவே, முடிவாகிய சுதந்திரமும் அதை அடைவதற்குப் பயன்படும் சாதனமாக விளங்கும் சமத்துவமும் ஒன்றை விட்டு ஒன்று பிரிக்க முடியாதவைகளாகி விடுகின்றன.

அரசுசமத்துவமின்மையைக் குறைப்பதற்கு முயற்சி செய்யும் பொழுது சில தனி நபரின் சுதந்திரத்தில் ஒருவேளை தலையிட நேரிடலாம். ஒரு சில தனி நபரின் சுதந்திரத்தைக் குறைத்தாலோ அல்லது தடை செய்தாலோ அது எல்லோருக்கும் சமவாய்ப்புகளைக் கிடைக்கச் செய்வதற்காகவேதான் அவ்வாறு செய்யப் படுகிறது. பெரும்பாலோரின் நன்மைக்காகவேதான் ஒரு சிலரின் சுதந்திர உரிமையைக் கட்டுப்படுத்த வேண்டியதிருக் கிறது. அதற்காக சுதந்திரமும் சமத்துவமும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை என்று கூறிவிடமுடியாது. உதாரணமாக, செல்வம் ஒரு சிலரின் கைகளில் சென்று குவிவதை அரசு தடுப்பதால் அந்த ஒரு சிலர் ஒரு வேளை தங்கள் சுதந்திரத்தை முழுப்படியாக அனுபவித்துக் கொள்ளமுடியாமலிருக்கலாம். ஆனால்அதே நேரத்தில் அரசு அவர்களின் சுதந்திரத்தில் தலையிடுவதால் மற்ற எத்தனையோபேர் அந்த செல்வத்தைச் சமத்துவத்தின் அடிப்படையில் அனுபவிக்க சுதந்திரம் பெற்று விடுகின்றனர். எனவே, சுதந்திரமும் சமத்துவமும் ஒருபோதும் ஒன்றுக்கொன்று முரண்படாது. இரண்டும் ஒன்றையொன்று தழுவி நின்று செயல்படுபவை. இருப்பவன் இல்லாதவன், ஏழை பணக்காரன் என்ற ஏற்றத் தாழ்வுகள் இருக்கும்வரை சமூகத்தில் சுதந்திரத்தை அனுபவிக்க முடியாது. பொருளாதார சமத்துவம் இணைந்து செல்லாத அரசியல் சுதந்திரம் உண்மையான சுதந்திரமாகாது என்று பேராசிரியர் லாஸ்கி கருதுகிறார். இவருடைய கருத்து சுதந்திரமும் சமத்துவமும் எந்த அளவிற்கு, நெருங்கிய தொடர்பு கொண்டு உள்ளன என்பதை விளக்கும்.

இந்தியாவில் அரசியல் சுதந்திரம் அளிக்கப்பட்டாலும் சமத்துவமின்மை முற்றிலுமாக நீக்கப்படவில்லை என்றே கூற வேண்டும். முக்கியமாகப் பொருளாதாரக்களத்திலும் சமூக நிலைகளிலும் சமத்துவமின்மை வெறுக்கும் விகிதத்தில் உள்ளது. டாக்டர் அம்பேத்கார் குறிப்பிட்டுள்ளதுபோல நமக்கு அளிக்கப் பட்டிருக்கும் அரசியல் சுதந்திரத்தைப் பாதுகாக்க நாம் செய்ய வேண்டியது பொருளாதார, சமூகச் சமத்துவத்தை ஏற்படுத்து வதற்கான உடனடி நடவடிக்கை எடுக்க வேண்டும். நமது பொருளாதார, சமூகத்துறைகளில் காணப்படும் ஏற்றத்தாழ்வு களை உடனடியாக அகற்ற வேண்டும். பணக்காரன் ஏழையை மோசடி செய்வதைச் சட்டத்தின் மூலம் தடைசெய்ய வேண்டும். சாதி, மதம், மொழி, இனம், முதலியவைகளின் பேரில் ஏற்படும் வேறுபாடுகளைத் தீவிரமாக சட்டங்களை அமல் படுத்துவதின் மூலம் நீக்கவேண்டும். அப்படியானல்தான் நம்முடைய சமூகத்தில் சமத்துவம் ஏற்படும். அதன் மூலமாகத்தான் நாம் சுதந்திரத்தை முழுப்படியாக அனுபவிக்க முடியும்.

# 8. குடிமகனும் குடிமையும்

## குடிமையின் தன்மை
## (Nature of Citizenship)

ஓர் அரசின் சட்ட திட்டங்களுக்குப் பணிந்து, அந்த அரசுக்கு விசுவாசமுடையவனாய் அந்த அரசின் எல்லைக்குள் வாழ்கின்ற ஒருவன் அந்த அரசின் பிரஜை அல்லது குடிமகன் ஆவான். ஒரு குடிமகன் அரசு அளிக்கும் உரிமைகளை அனுபவிப்பது மட்டுமல்லாமல் அரசு விதிக்கும் கடமைகளையும் தவறாமல் நிறைவேற்ற வேண்டும். அரசின் சட்டங்களுக்குப் பணிவதும் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதும் ஒரு குடிமகன் ஆற்ற வேண்டிய முக்கிய கடமையாகும். இக்கடமைகளைத் தவறாது செய்வதே அரசிற்கு விசுவாச முடையவனாயிருத்தலாகும். எனவே அரசுக்கு விசுவாசமுடையவனாக நடந்து கொள்ளும் ஒரு பிரஜைக்கு அரசின் எல்லாச் சலுகைகளையும் அனுபவிப்பதற்கு அளிக்கப்படும் உரிமையே குடிமை அல்லது குடியுரிமை எனப் படும்.

ஓர் அரசில் வாழ்கின்ற அனைவரும் அந்த அரசின் பிரஜைகளாக ஆகிவிடமாட்டார்கள். வெளி நாட்டைச் சேர்ந்த தூதுவர்கள், வியாபாரிகள், மாணவர்கள், உல்லாசப்பயணிகள் போன்றவர்களும் ஓர் அரசில் வசிப்பவர்கள்தாம். ஆனால் இவர்கள் அன்னியர் என்று தான் அழைக்கப்படுவார்கள். இவர்களுக்கும் பிரஜைகளுக்கும் உள்ள வேறுபாடு யாதெனில் பிரஜைகளுக்கு அளிக்கப்படும் அரசியல் உரிமைகள் அன்னியர்களுக்கு அளிக்கப்படுவதில்லை என்பதே.

பேராசிரியர் லாஸ்கியின் கருத்துப்படி குடிமை என்பது ஒரு குடிமகன் தன்னுடைய நாட்டு மக்களுக்குச் செய்ய வேண்டிய பொதுநலக் கடமையைக் குறிக்கும். அதாவது குடிமகன் செய்ய வேண்டிய கடமைகளில் பொது நலனும் ஒன்று என்பதாகும். குடியுரிமை மூன்று முக்கிய காரியங்களை உணர்த்துவதாய் உள்ளது. முதலாவதாக, குடிமக்கள் அரசின் பாதுகாப்பிற்குக் கீழ் அனுபவிக்கும் சீரியல் உரிமைகளையும் அரசியல் உரிமைகளையும் குறிக்கும். இரண்டாவதாக, குடிமக்கள், அரசிற்கு ஆற்றுகின்ற பொதுநலக் கடமையுடன்

சேர்ந்த மற்ற கடமைகளையும் குறிக்கும். மூன்றாவதாக, குடிமக்களுடைய தேசப்பற்றையும் அரசின் மீது அவர்களுக்கு இருக்கும் விசுவாசத்தையும் குறிக்கும்.

குடிமக்களை இயற்கையான பிரஜைகள் என்றும் இயற்கை மயமாக்கப்பட்ட பிரஜைகள் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். ஒரு குடிமகனுக்குப் பிறக்கும் குழந்தை அவனுடைய அரசின் குடிமையைப் பெற்றுவிடுகிறது. இவ்வாறு இந்த குழந்தை பெறுகின்ற குடிமையை இயற்கையான குடிமை எனலாம். இக்குடிமையைப் புறக்கணித்துவிட்டு வேறு ஒரு அரசின் குடிமையைப் பெற்றுக் கொண்டால் அவனுடைய புதுக் குடிமைக்கு இயற்கைமயமாக்கப்பட்ட குடிமை என்று பெயர். உதாரணமாக, ருஷ்ய நாட்டில் வாழ விரும்பும் இந்தியக் குடிமகன் ஒருவன் தன்னுடைய இந்தியாவின் இயற்கையான குடிமையை விட்டுவிட்டு ருஷ்ய நாட்டின் இயற்கை மயமாக்கப்பட்ட குடிமையைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

## குடிமையைப் பெறுவதற்கான வழிகள்
## (Ways to acquire Citizenship)

ஓர் அரசின் குடிமையைப் பிறப்பின் மூலமாகவும் பெறலாம், இயற்கை மயமாக்குதலின் மூலமாகவும் பெறலாம். இந்த இரு முறைகளையும் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

### (i) பிறப்பின் மூலம் குடியுரிமை பெறுதல் (Citizenship by Birth)

குடிமையைப் பிறப்பின் மூலம் பெறுவதில் இரண்டு கோட்பாடுகள் உள்ளன. முதலாவது கோட்பாடு இரத்த உறவின் அடிப்படையில் குடிமை நிர்ணயம் செய்யப்படுதலாகும். இந்த விதிப்படி ஒரு குழந்தையின் குடிமை அது எங்கு பிறந்தாலும் சரி தன்னுடைய தகப்பனுடைய குடிமையை வைத்தே நிர்ணயம் செய்யப்படுகிறது. ஓர் ஆங்கிலேய நாட்டைச் சேர்ந்த பிரஜையின் மகன் சுவிட்ஸர்லாந்து நாட்டில் பிறந்திருந்தாலும் ஆங்கிலேய நாட்டு பிரஜையாகிவிடுகிறான்.

இரண்டாவது கோட்பாடு ஒருவனின் குடிமை அவன் பிறந்த இடத்தை வைத்து நிர்ணயம் செய்யப்படவேண்டும் என்பதாகும். இந்த விதிப்படி ஆங்கிலேய நாட்டிலோ அல்லது ஆங்கிலேய தேசியக்கொடி பறக்கும் கப்பலிலோ பிறந்த அமெரிக்க பிரஜையின் குழந்தை ஆங்கிலேய நாட்டுப் பிரஜையாகி விடுகிறது.

முதலாவது கோட்பாடாகிய இரத்த உறவின் அடிப் படையில் குடிமை நிர்ணயம் செய்யப்படுதல் ஆதிகாலத்தவர் பின்பற்றிய ஒரு விதியாகும். இந்த விதிமுறை ரோம நாட்டுச் சட்டத்திலும் இடம் பெற்று விட்டது. படை மானியக்கருத்தின் வளர்ச்சியால் பிறப்பு தனி மனிதனுக்கும் நிலத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்தி விட்டது. எனவே, இரண்டாவது கோட்பாடாகிய பிறப்பிடத்தின் அடிப்படையில் குடிமை நிர்ணயம் செய்யும்முறை பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளில் பின்பற்றப்பட்டது.

தற்காலத்தில் அரசுகள் வெவ்வேறு அடிப்படையில் குடிமையை நிர்ணயம் செய்கின்றன. அமெரிக்க நாட்டிலும் ஆங்கிலேய நாட்டிலும் மேற்கூறிய இரு முறைகளுமே பின் பற்றப்படுகின்றன. உள்நாட்டில் பிறந்த பிரஜைகளின் குழந்தைகளைப் பொறுத்த வரையில் பிறப்பிடம் அடிப்படை யாகவும் வெளி நாட்டில் பிறந்த பிரஜைகளின் குழந்தை களுக்கு இரத்த உறவு அடிப்படையாகவும் பின்பற்றப்பட்டன. அர்ஜன்டீனு தன் எல்லேக்குள் பிறந்த அன்னியர்களின் குழந்தைகளையும் தன்னுடைய பிரஜைகளாக ஆக்கிக் கொள்கிறது. சுவிட்ஸர்லாந்து, இத்தாலி, ஸ்வீடன் முதலிய நாடுகள் இரத்த உறவை அடிப்படையாகக் கொண்டு வெளி நாட்டில் பிறந்த பிரஜைகளுடைய குழந்தைகளுக்கும் அந்தந்த நாட்டுக் குடிமையை அளிக்கின்றன.

குடியுரிமை பெறுவதில் ஒரே விதமான நடைமுறை பின் பற்றப்படாததால் இரட்டைக்குடிமையும் ஆதிக்கத் தகராறுகளும் ஏற்படுகின்றன. பிரஞ்சு நாட்டில் அமெரிக்கப் பெற்ருேருக்குப் பிறந்த ஒரு குழந்தையை உதாரணமாக வைத்து இதை விளக்கலாம். பிறப்பிடம் அடிப்படையில் பிரஞ்சு நாடு அங்கு பிறந்த அமெரிக்க பெற்ருேரின் பிரஞ்சுக் குழந்தையை குடிமகனுகப் பாவிக்கும். ஆனல் இரத்த உறவுக் கோட்பாட்டின் மூலம் அமெரிக்கா அந்தக் குழந்தையைத் தன்னுடைய குடிமகனுகப் பாவிக்கும். இவ்வாறு அந்தக் குழந்தை இரண்டு குடியுரிமையைப் பெற்றுவிடக்கூடும். இந்த இரட்டைக் குடியுரிமை பெரும் குழப்பத்தை ஏற்படுத்திவிடும். இரட்டைக் குடிமைத் தகராறு ஏற்படும்பொழுது அந்த குழந்தை வளர்ந்ததும் அதற்குத் தன்னுடைய பெற்ருேர் பெற்றிருக்கும் குடிமையையோ அல்லது பிறந்த நாட்டின் குடிமையையோ தெரிந்து கொள்வதற்கு வாய்ப்பளிக்கப்படுகிறது.

(ii) இயற்கை மயமாக்கல் (Naturalisation)

இயற்கை மயமாக்கலின் மூலமாகவும் குடிமை பெறப் படுகிறது. இயற்கை மயமாக்கல் என்னும் சொல் ஏதாவதுஒரு முறையில் அன்னியன் ஒருவனுக்குக் குடியுரிமையை அளித்தலைக் குறிக்கும். திருமணம், ராணுவப்பணி, சொத்துரிமை, அரசுப் பணி போன்றவைகளின் மூலமாக ஓர் அன்னியனின் குடிமை இயற்கை மயமாக்கப்படுகிறது. சுருங்கக் கூறின் இயற்கை மயமாக்கல் குடியுரிமைகோரி மனு செய்தவிடத்துக் குடியுரிமை அளித்தலைக் குறிக்கும். தற்சமயம் வசிக்கும் அரசினுடைய குடிமையைப்பெற விரும்பும் ஓர் அயலான் குடிமை கேட்டு மனுச்செய்ய வேண்டும். இயற்கை மயமாக்கப்படுதலுக்கு ஒரு சில நியதிகள் உள்ளன. இந்த நியதிகள் நாட்டுக்கு நாடு வித்தியாசமாக உள்ளன. இருப்பினும் பொதுவாகக் கீழ் காணும் நியதிகளின் அடிப்படையில் தான் எல்லா நாடுகளிலும் இயற்கை மயமாக்கல் நடைபெறுகிறது.

1) ஒரு குறிப்பிட்ட காலம் வரை அந்த நாட்டில் வசித்திருக்க வேண்டும் என்னும் நியதி. ஆங்கிலேய நாட்டிலும் அமெரிக்க நாட்டிலும் இயற்கை மயமாக்கப்படும் அயலான் குறைந்தது ஐந்து ஆண்டுகளாவது வசித்திருக்க வேண்டும் என்று உள்ளது. ஜப்பான் நாட்டில் ஜப்பானியப் பெண்மணியை மணம் முடித்து விட்டால் குறிப்பிட்ட காலம் வரை வசித்திருக்க வேண்டும் என்னும் நியதி இல்லை.

2) எந்த நாட்டின் குடிமைக்காக மனுசெய்யப் படுகிறதோ அந்த நாட்டின் பிரஜையாக ஆவதற்கான விருப்பத்திற்கு உறுதி அளிக்க வேண்டும்.

3) விசுவாச உறுதி மொழி எடுக்க வேண்டும்.

4) நல்ல நடத்தை உடையவராக இருக்க வேண்டும்.

5) எந்த நாட்டுக் குடிமை வேண்டுமோ அந்த நாட்டின் தேசீய மொழி தெரிந்திருக்க வேண்டும்.

## குடிமையைக் கீழ்கண்ட வழிகளிலும் பெறலாம்

1) நிலம் வாங்குதல் (Acquisition of Property)

ஒரு சில நாடுகளில் ஓர் அயலான் நிலம் வாங்கினால் அந்த நாட்டின் குடியுரிமை அளிக்கப் படுகிறது.

2) அரசாங்கப் பணி (Public Service)

வேறொரு நாட்டின் அரசாங்கப்பணியில் நிரந்தரமாக

நியமிக்கப்படும் ஓர் அயலானுக்கு அந்த நாட்டின் குடியுரிமை அளிக்கப்படுகிறது.

**3) திருமணம் (Marriage)**

ஒரு பெண்மணி ஓர் அயலானைத் திருமணம் செய்து கொண்டால் அவளுடைய கணவனுடைய நாட்டின் குடியுரிமை அவளுக்கு அளிக்கப்படுகிறது.

**4) தத்தெடுத்தல் (Adoption)**

ஒரு குழந்தையை வேறு ஒரு நாட்டுக் குடியானவன் தத்தெடுத்துக் கொண்டால் அந்தக் குழந்தை தான் பிறந்த நாட்டின் குடியுரிமையை இழந்து விட்டு தத்தெடுத்தவரின் நாட்டுக் குடிமையைப் பெற்றுக் கொள்கிறது.

**5) நாட்டின் ஒரு பகுதி கைப்பற்றப்படல் (capture of territory)**

ஒரு நாட்டின் ஒரு பகுதியோ அல்லது நாடு முழுவதுமோ அயல் நாட்டால் கைப்பற்றப்பட்டு விட்டால் கைப்பற்றப்பட்ட நாட்டின் மக்கள் கைப்பற்றிய நாட்டின் குடிமக்களாகி விடுகின்றனர்.

(iii) குடிமையை இழப்பதற்கான காரணங்கள் (The Reasons for the loss of citizenship)

குடிமை இழப்பு பற்றிய விதிகள் நாட்டுக்கு நாடு வித்தியாசமாக உள்ளன. ஆனால் குடிமையை இழப்பதற்கான ஒரு சில பொதுவான காரணங்களை இங்கு ஆராயலாம்.

**a) திருமணம்**

அயலானைத் திருமணம் செய்து கொள்ளும் ஒரு பெண்மணி தன்னுடைய கணவனுடைய நாட்டின் குடியுரிமையைப் பெற்றுக் கொள்ளுவதால் தனது சொந்த நாட்டுக் குடியுரிமையை இழக்க நேரிடும்.

b) நீண்ட காலம் இல்லாமை

குறிப்பிட்ட காலத்திற்கு மேல் நீண்ட காலமாக ஒரு நாட்டை விட்டு வெளியே இருந்தாலும் தன்னுடைய குடிமையை இழக்க நேரிடும்.

c) அயல் நாட்டு அரசாங்கப்பணி

சில நாடுகளில் சட்டப்படி ஒருவன் அயல் நாடு சென்று

அரசாங்கப்பணி புரிந்தால் தன்னுடைய குடிமையை இழந்து விடுகிறான்.

d) நாட்டுத் துரோகம்

சில நாடுகளில் நாட்டுத் துரோகச் செயல்களில் ஈடுபட்டவருடைய குடியுரிமை நிராகரிக்கப் படுகிறது.

e) இயற்கை மயமாக்கல்

ஒருவன் அயல் நாட்டுக் குடிமையை விரும்பி இயற்கை மயமாக்கலின் மூலமாகப் பெற்றுக் கொள்வதால் தன்னுடைய சொந்தக் குடியுரிமையை இழந்து விடுகிறான்.

(iv) நல்ல குடிமை (Good citizenship)

நல்ல குடிமை என்பது தான் வாழுகின்ற சமுதாயத்திற்கு நன்மை செய்ய வேண்டும் என்னும் உயரிய நோக்கத்தைக் குறிக்கும். ஒரு நல்ல குடியானவன் அரசு இயற்றும் சட்டங்களுக்கு ஒழுங்காகப் பணிவதோடு பொது நன்மை செய்யவும் ஆர்வமுடையவனுயிருப்பான்.

ஒருவன் ஒரு நல்ல குடிமகனாக ஆவதற்கு ஒரு சில சிறப்பியல்புகளைப் பெற்றிருக்க வேண்டும். பிரைஸ் என்பவர், ஒரு நல்ல குடியானவன் ''புத்திகூர்மை, கட்டுப்பாடு, மனச்சாட்சி என்னும் மூன்று சிறப்பியல்புகளையும் பெற்றவனுவான்'' என்று குறிப்பிட்டுள்ளார். பொதுவாக நல்ல குடியானவன் பெற்றிருக்க வேண்டிய இயல்புகளைக் கீழ்கண்டவாறு விளக்கலாம்.

(i) அறிவுத்திறன்: (Intelligence)

நல்ல குடியானவன் அறிவுடையவனாக இருக்கிறான். அவனுடைய புத்திக்கூர்மையாலும் பொது அறிவாலும் சமூக வாழ்வின் பல விதமான பிரச்னைகளையும் அவைகளைத் தீர்க்கும் வழிகளையும் நன்கு தெரிந்து கொள்கிறான். அவன் பெற்றிருக்கும் அறிவு வளர்ச்சியின் காரணமாகப் பொது விஷயங்களில் ஆர்வம் காட்ட முடிகிறது. இந்த சிறப்பியலைப் பெற்ற குடியானவன் நாட்டின் செல்வமாகக் கருதப்படுகிறான்.

(ii) நற்குணங்கள்: (Good Conduct)

நல்ல குடியானவனிடம் சில நற்குணங்கள் காணப்படுகின்றன. அவைகள் ஒற்றுமை உணர்வு, அன்பு, இரக்கம், பொறுமை, ஒத்துழைத்தல் போன்ற நல்ல பண்புகளாகும். மேலும் தன்னம்பிக்கை, கடமை உணர்வு, கட்டுப்பாடு,

கண்ணியம் என்னும் சிறப்பியல்புகளும் நல்ல குடியானவனிடம் காணப்படுகின்றன. இத்தகைய பண்பியல்புகள் தோன்றுவதற்கு அவன் புனிதமான உள்ளத்தைப் பெற்றிருக்க வேண்டும். உள்ளத்தைப் பொறுத்துத்தான் இந்தக் குணவியல்புகள் யாவும் வளர முடியும். தன்னம்பிக்கை, கடமை உணர்வு, கட்டுப்பாடு, கண்ணியம் ஆகிய சிறப்பியல்புகளைப் பெற்ற பிரஜைகள் ஒரு நாட்டின் அந்தஸ்தை உயர்த்தி விடுகின்றனர். அன்பு, இரக்கம், பொறுமை, ஒத்துழைப்பு போன்ற நல்ல பண்புகளைப் பெற்ற பிரஜைகளால் ஒரு நாடு எல்லாத் துறைகளிலும் முன்னேற முடிகிறது.

(iii) அரசிற்கு நேர் விசுவாசமாயிருத்தல். (Loyalty to the State)

நல்ல குடியானவன் யாருக்கு நாணய முடையவனுயிருக்க வேண்டுமென சரியான முறையில் தீர்மானித்துக் கொள்கிருன். ஓர் அரசில் உள்ள குடும்பத்தில் அங்கத்தினராக இருக்கலாம். ஒரு சங்கத்தில் அங்கத்தினராக இருக்கலாம். ஆனுல் எல்லாவற்றிற்கும் மேலாக அரசிலும் அவன் அங்கத்தினராக இருக்கிருன் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அதாவது குடும்பம் அல்லது சங்கம் அரசு ஆகிய மூன்றில் எதற்கு விசுவாசமுடையவனுக இருக்க வேண்டும் என்னும் ஒரு கேள்வி எழுமானுல் நல்ல குடியானவனுனுல் அவன் அரசிற்கே நாணயமுடையவனுக நடந்து கொள்கிருன். பொது நன்மைக்காக அல்லது அரசின் நன்மைக்காக குடும்பத்தின் விருப்பையோ அல்லது தன்னுடைய சொந்த விருப்பையோ அல்லது தான் அங்கத்தினராக இருக்கும் அரசின் விருப்பையோ விட்டுக் கொடுப்பது தான் நல்ல குடிமகனுக்கு அழகு.

(v) நல்ல குடிமையின் வளர்ச்சிக்கு எதிரான இடையூறுகள் (Hindrances to Good Citizenship)

எல்லாப் பிரஜைகளும் நல்ல பிரஜைகளாகக் கருதப்படாததற்குக் காரணம் உண்டு. நல்ல குடிமை ஏற்படத் தடையாக சிலகாரியங்களும் உள்ளன. பிரைஸ் என்பவர் சோம்பேறித்தனம், சுய நலம், கட்சி உணர்வு ஆகியவை நல்ல குடிமை ஏற்பட இடையூறுகளாக உள்ளன என்று கூறியுள்ளார். இந்தியாவில் இந்த இடையூறுகள் நிச்சயமாக உள்ளன. இவைகளுடன் அறியாமை, ஏழ்மை, தீய சமூக பழக்க வழக்கங்கள் என்பனவற்றையும்நல்ல குடிமை ஏற்படுவதைத் தடை செய்யும் காரியங்களாகக்குறிப்பிடலாம். பொதுவான இடையூறுகளாவன:

(i) அறியாமை (Ignorance)

மக்களாட்சியின் வெற்றிக்கு அறிவுடைய பிரஜைகள்

தேவை. கற்றவனும் அறிவுடையவனும் தான் பொது நன்மைக்கு நல்ல முறையில் பாடுபடமுடியும். அறிவில்லாமல் தன்னுடைய ஆளுமையையும் வளர்த்துக் கொள்ள முடியாது, சமூகத்தின் நலனையும் முன்னேற்ற முடியாது. அறியாமையால் மக்கள் தங்களுடைய உரிமைகளையும் கடமைகளையும் உணர்ந்து கொள்ள முடிவதில்லை. அறியாமையால் சில வேளை எது அரசாங்கத்தின் நியாயமான செயல் எது நியாயமற்ற செயல் என்பதைக் கூட தெரிந்து கொள்ள முடியாமலிருக்கிறார்கள். இந்தியாவில் அறிவுடையவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு; கல்லாதவர்களின் எண்ணிக்கை தான் அதிகம். கிராமப்புறத்திலுள்ள அநேகமக்களுக்கு இன்னமும் தங்களுடைய உரிமைகளையும் கடமைகளையும் பற்றி எதுவுமே தெரியாது. என்றைக்கு அறியாமை முற்றிலுமாக நீக்கப்படுகிறதோ அன்று தான் இந்தியாவில் மக்களாட்சி வெற்றி பெறும்.

(ii) சுறுசுறுப்பின்மை (Indolence)

ஒரு நல்ல குடிமகன் என்பவன், சுறுசுறுப்புடையவனாயிருக்கிறான். பொது நலனை முன்னேற்றுவதில் அதிக ஆர்வமுடையவனாயிருக்கிறான். சோம்பேறி பொறுப்புகளைக் கண்டால் விலகிக் கொள்வான். சுறுசுறுப்பின்மையும் சோம்பேறித்தனமும் ஒருவன் தன்னுடைய கடமைகளைச் சரிவரச் செய்ய விடுவதில்லை. அநேக இந்திய வாக்காளர்கள் தேர்தலில் வாக்களிக்காமலிருப்பதற்குக் காரணம் அவர்களுடைய சோம்பேறித்தனமாகும். பொது நன்மையைப்பற்றி அநேகர் கவலைப்படுவதே இல்லை. பஞ்சம், வெள்ளப் பெருக்கு போன்றவைகளால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்வதற்குக் கூட அநேகர் முன்வருவதில்லை. இதற்குக் காரணம் இவர்களுடைய சுறுசுறுப் பின்மையும், ஆர்வமின்மையுமாகும். எனவே நல்ல குடிமை ஏற்பட இதுவும் ஒரு தடையாக உள்ளது.

(iii) ஏழ்மை (Poverty)

நல்ல குடிமை தோன்றுவதற்கு இன்னொரு இடையூறாக மக்களின் ஏழ்மை உள்ளது. எப்பொழுதும் ஏழ்மையால் வாடும் ஒரு குடியானவன் தன்னுடைய கடமைகளைப் பற்றிக் கவலைப்பட முடியாது. வயிற்றுக்குக் கஞ்சி கிடைக்காத போது வாக்குரிமை எதற்கு என்று அவன் கேட்டால் அதில் நியாயம் இல்லாமலில்லை. பொதுவாக நம் நாட்டில் ஏழை மக்களில் அநேகர் தங்களுடைய வாக்குகளை விலைக்கு விற்று விடுகின்றனர். அதாவது பணத்துக்காக தன்னுடைய வாக்கினை யாருக்காவது அளித்து விடுகின்ற ஏழை மனிதன் சிறந்த அரசாங்கத்தைத் தேர்ந்தெடுக்கும்

உரிமையையிழந்து விடுகிருன். இவ்வாறு அவனது ஏழ்மை அவனை நல்லகுடியானவனுக வாழ அனுமதிப்பதில்லை.

(iv) கட்சி ஆர்வம்:– (Party Interest)

மக்களாட்சி நடை பெறக் கட்சி முறை இன்றியமையாதது. அரசியல் கட்சிமுறைகள் நல்ல நோக்கங்களின் அடிப்படையில் அமைக்கப்பட்டு ஒழுங்கான முறையில் செயல்படுமானுல் அவைகள் மக்களுக்கு அரசியல் அறிவு போதிக்கப் பயன் படுகின்றன. ஆனுல் அரசியல் கட்சிகள் தீய நோக்கங்களுக்கு இடம் கொடுத்தால் மக்களுடைய மனத்தைக் கெடுத்து அவர் களிடையே பிரிவினைகளை ஏற்படுத்தி விடுகின்றன. ஓர் அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களும் அதை ஆதரிப்பவர்களும், அரசின் மீது வைத்துள்ள விசுவாசத்தை விடத் தங்களுடைய கட்சியின் மீது அதிக விசுவாச முடையவர்களாக ஆகிவிடுகின்றனர். இதனுல் பொது நலத்தை விடக் கட்சியின் நலனுக்கே முக்கியத் துவம் கொடுக்க ஆரம்பித்து விடுகின்றனர். மேலும் பொதுவாக அரசியல் கட்சிகள் தேர்தல் காலத்தில் சாதி, மதம் ஆகியவற்றின் அடிப்படையில் வேட்பாளரை நிறுத்துவதால் மக்களிடையே சாதி, மத பேதங்களுக்கு இடமளிக்கிறது. இதனுல் மனிதன் நல்ல குடிமகனுக வாழ முடியாமல் போய்விடுகிறது.

(v). தீய பழக்க வழக்கங்கள் (Bad Habits)

சாதி, மதம் ஏற்படுத்திய அநேக தீய பழக்க வழக்கங் களும் நல்ல குடிமை ஏற்படத் தடையாக உள்ள தீய சக்தி களாகும். அறிவில்லாத அநேக மக்கள் விக்கிரக ஆராதனை, அவசியமில்லாத வழிபாட்டு முறைகள் மற்றும் பூசைகள், பல கடவுளை வணங்குதல், பெண் இனத்தை அடிமையாக நடத்தல், தீண்டாமை போன்ற தீய பழக்க வழக்கங்களை இன்னமும் கை விட மனமில்லாமல் இருக்கின்றனர். மக்களிடையே மூட நம்பிக் கைகளை வளர்க்கும் மதமும், சமூகத்தில் ஏற்றத் தாழ்வுகளை உருவாக்கும் சாதியும் தீய பழக்க வழக்கங்கள் சமூகத்தில் தோன்றக் காரணமாக இருப்பதுடன் மக்களிடையே குறுகிய மனப்பான்மையை ஏற்படுத்தி சமூகத்தில் வகுப்புப் பூசல்களை ஏற்படுத்திவிடுகின்றன.

மேற்கூறிய இடையூறுகளை நீக்கி நல்ல குடிமையை வளர்ப் பதற்கான நடவடிக்கைகளை ஒவ்வோர் அரசும் உடனடியாகக் கவனிக்க வேண்டும். முதலாவதாக, அரசியல் நிறுவனங்களும் சமூக ஸ்தாபனங்களும் சமூகத்தில் சமத்துவத்தை ஏற்படுத்தி நீதியை நிலை நாட்டப் பாடுபட வேண்டும். அரசு இந்த

நோக்கத்தின் அடிப்படையில் கொள்கைகளை உருவாக்குமானல் நிச்சயமாகத் தீண்டாமை, சாதி மத பேதங்கள். லஞ்ச ஊழல் போன்ற தீமைகள் ஏற்படாமலிருக்கும். மேலும், நேரடி ஜன நாயக முறையில் பின்பற்றப்படும் மக்கள் துவக்கம், மக்கள் தீர்ப்பு போன்ற முறைகளைப் பின்பற்றினல் மக்களுக்கு நிர்வாகச் செயல்களில் அதிக ஆர்வமும் அக்கறையும் ஏற்படலாம். மக்களுக்கு அரசியல் அறிவைப் போதிக்க வல்ல கல்வித் திட்டங்கள் உருவாக்கப்படல் வேண்டும். எல்லாக் கல்வியையும்விட முதலாவது ஒரு குடிமகன் தெரிந்து கொள்ள வேண்டியது அரசியல் கல்வியேயாகும். அரசியல் கல்வியின் மூலமாகத்தான் குடியானவன் தன்னுடைய நாட்டு அரசியல் அமைப்பு செயல் படும் முறையைத் தெரிந்து கொள்ள முடிகிறது. அரசியல் கல்வியின் மூலம் அரசாங்கத்தில் தன்னுடைய பங்கு என்ன என்பதை உணர்ந்து அதன் மூலமாக ஒரு பயனுடைய குடி மகனக வாழ முடிகிறது. மேலும் அவனுடைய உள்ளம் பண்பட அரசியல் கல்வி பயனளிக்கிறது. எனவே, ஒவ்வோர் அரசும் மேற்கூறிய பரிகாரங்களைச் செய்து நல்ல குடிமையை ஏற்படுத்தப் பொறுப்பேற்றுள்ளது.

## பாகம் II — அரசியல் நிறுவனங்கள்

# 1. அரசாங்கத்தின் வகைகள்

### அரிஸ்டாட்டிலின் அரசாங்க வகைப்படுத்தல்

### (Aristotle's Classification of Governments)

தற்கால அரசாங்க வகைகளை முறைப்படி ஆராய்வதற்கு அரிஸ்டாட்டில் ஏற்படுத்திய அரசாங்க வகைப்படுத்தல் பெரிதும் அனுகூலமாக உள்ளது. அரிஸ்டாட்டில் அளவு, தரம் என்னும் இரு அம்சங்களின் அடிப்படையில் அரசாங்கங்களை வகைப் படுத்தியுள்ளார். அளவு அடிப்படையில் அரசின் இறைமை யைப் பிரயோகிக்கும் நபர்களின் எண்ணிக்கையைப் பொறுத்து அரசாங்கங்களை மூன்று வகைகளாகப் பிரித்தார். அரசின் இறை மையை ஒருவர் பிரயோகித்தால் அந்த அரசாங்கத்தை முடி யாட்சி என்றும், சிலர் அந்த இறைமையைப் பிரயோகிக்க நேர்ந்தால் அந்த அரசாங்க முறையை உயர்குடி ஆட்சி என்றும், பலர் அல்லது குடிமக்கள் யாவரும் அந்த இறைமையைப் பிரயோகித்தால் அந்த அரசாங்கத்தை பாலிட்டி என்றும் அழைத்தார்.

அரிஸ்டாட்டிலின் தரம் அடிப்படை அரசாங்கங்களை முறைப் படி அரசாங்கங்களாகவும் நெறி தவறிய அரசாங்கங்களாகவும் வகைப்படுத்தியுள்ளது. ஆளுபவர் (ஒருவராலுைம் சரி, சிலராலுைம் சரி, பலராலுைம் சரி) இறைமையை எல்லோருடைய நன்மைக்காகவும் பிரயோகித்தால் அந்த அரசாங்க முறையை தரமான அல்லது நேர்மையான அரசாங்கம் என்று அரிஸ்டாட்டில் அழைத்தார். அதே நேரத்தில் ஆளுபவர் அரசின் அதிகாரத்தைப் பொதுநலத்திற்காகப் பிரயோகிக்காமல் சுயநலனிற்காகப் பிரயோகித்தால் அந்த அரசாங்க முறையை நெறிதவறிய அரசாங்க முறையெனக் குறிப்பிட்டார். முடியாட்சி, உயர்குடி ஆட்சி, பாலிட்டி ஆகிய மூன்றும் அரிஸ்டாட்டில் கூறிய தரமான அரசாங்கங்களாகும். ஆனல் முடியாட்சி நெறி தவறிய போது கொடுங்கோலாட்சியாகவும், உயர்குடியாட்சி நெறிதவறிய போது குழு ஆட்சியாகவும், பாலிட்டி நெறிதவறிய போது ஜனநாயகமாகவும் அழைக்கப்பட்டது. பாலிட்டி நெறி

தவறி ஜனநாயகமாகத் திகழ்வது கும்பல் ஆட்சியை (mob rule) குறிப்பிடுகிறதே தவிர ஜனநாயகத்திற்கு இன்றுள்ள பொருள் காணுதல் கூடாது.

அரிஸ்டாட்டிலின் அரசாங்க வகைப்படுத்தலைக் கீழ்கண்ட வாறு குறிப்பிடலாம்:—

| இறைமையை பிரயோகிப்பவர்களின் எண்ணிக்கை | தரமான அரசாங்கம் | நெறி தவறிய அரசாங்கம் |
|---|---|---|
| ஒருவர் ஆட்சி | முடியாட்சி (Monarchy) | கொடுங்கோல் ஆட்சி (Tyranny) |
| சிலர் ஆட்சி | உயர்குடி ஆட்சி (Aristocracy) | குழு ஆட்சி (Oligarchy) |
| பலர் ஆட்சி | பாலிட்டி (Polity) | கும்பல் ஆட்சி (அல்லது) ஜனநாயகம் (Democracy) |

அரிஸ்டாட்டில் கூறிய இந்த அரசாங்க வகைப்படுத்தல் தற்காலத்திய நிலைகளுக்கு ஒத்துவராது. மான்டஸ்கியு, பிளன்ட்சலி போன்றவர்களும் அரிஸ்டாட்டிலைப் போலவே தற்காலத்திய அரசியல் நிலைகளுக்கு ஒத்துவராத அரசாங்க வகைப்படுத்துதலைச் செய்துள்ளனர். தற்கால அரசாங்கங்களை முழுப்படியாக முடியாட்சி என்றோ, உயர்குடி ஆட்சி என்றோ அல்லது ஜனநாயகம் என்றோ கூறமுடியாத நிலை ஏற்பட்டுள்ளது. எல்லா வகையான அரசாங்க முறைகளிலும் மேற் கூறிய அரசாங்க வகைகளில் ஒரு சிலவற்றைத் தழுவிய புதிய கலப்பு அரசாங்க முறைகளையே இன்று நாம் காண்கிறோம். எனவே தற்கால அரசாங்கங்களை அதற்கேற்ப வகைப் படுத்த வேண்டிய தாய் உள்ளது.

## முடியாட்சி
## (Monarchy)

(i) பொருளும் தன்மையும் (Meaning and Nature)

பரம்பரையின் அடிப்படையில் பதவியை அடைந்து இறைமையைப் பிரயோகிக்கின்ற ஒருவனின் ஆட்சி, முடியாட்சி என்று அழைக்கப்படுறது. அதே நேரத்தில் தேர்தல் மூலமாக

பதவிக்கு வந்து பெயரளவில் மட்டுமே அரசின் அதிகாரத்தை நாட்டுத் தலைவர் பெற்றிருந்தால் அந்த அரசாங்கமுறை குடியரசு எனப்படுகிறது. முடியாட்சியின் தலைவரை அரசன் என்றும், குடியரசின் தலைவரை ஜனாதிபதி என்றும் அழைப்பது வழக்கமாக உள்ளது. முடியாட்சியில் அரசன் சட்டப்படி முழு அதிகாரத்தையும் பிரயோகிக்கும் உரிமையைப் பெற்றுள்ளான். பண்டைய காலத்தில் முடியாட்சியே ஏறக்குறைய எல்லா நாடுகளிலும் அமுலில் இருந்திருக்கிறது. அந்தக் காலத்தில் முடியாட்சியில் அதிகாரம் செலுத்திவந்த மன்னர்கள் வரம்பிலா அதிகாரம் பெற்றிருந்தனர் என்று வரலாறு கூறுகிறது. ஆனால் தற்காலத்தில் வரம்பிலா முடியாட்சி முக்கியத்துவம் இழந்து விட்ட நிலையைக் காணலாம்.

பொதுவாக முடியாட்சியின் அரசர்கள் பரம்பரையாக பதவிக்கு வருபவர்கள் தாம். அதாவது அரசாட்சி அரசனுடைய வாரிசுக்கு உரிமையாக அளிக்கப்படுகிறது. சில முடியாட்சி நாடுகளில் அரசர்கள் மக்களாலோ அல்லது ஒரு குழுவாலோ தேர்ந்தெடுக்கப்பட்டனர். உதாரணமாக ரோம், போலந்து ஆகிய நாடுகளில் ஆரம்ப காலத்தில் அரசர்களை மக்களே தேர்ந்தெடுத்திருக்கின்றனர்.

(ii) முடியாட்சியின் வகைகள் (kinds of Monarchies)

முடியாட்சியை வரம்பிலா முடியாட்சி என்றும் வரம்பிற்குட்பட்ட முடியாட்சி என்றும் இருவகைப் படுத்தலாம்.

a) வரம்பிலா முடியாட்சி (Absolute Monarchy)

வரம்பிலா முடியாட்சியில் அரசரிடமே சகல அதிகாரமும் உள்ளது. அவர் இயற்றுவது தான் சட்டம். தவறாக இருந்தாலும் சரி முறையானதாக இருந்தாலும் சரி அவருடைய சட்டங்களுக்கு மக்கள் பணிந்தே ஆக வேண்டும். அரசரின் சட்டங்களுக்குப் பணியாதவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவர். வரம்பில்லா முடியாட்சியில் அரசரின் அதிகாரத்திற்குக் கட்டுப்பாடு எதுவுமே கிடையாது. அவருடைய சுய விருப்பப்படியே ஆட்சி செய்கிறார். மக்களுக்கு அரசாங்கத்தில் பங்கு எதுவும் கிடையாது. பிரஞ்சு நாட்டில் பதினான்காம் லூயி புரிந்த ஆட்சியையும் ருஷ்யா நாட்டை ஆண்ட சார் மன்னர்களின் ஆட்சியையும் வரம்பிலா முடியாட்சிக்கு உதாரணமாகக் கூறலாம்.

(b) வரம்பிற்குட்பட்ட முடியாட்சி (Limited or conditional Monarchy)

வரம்பிற்குட்பட்ட முடியாட்சியில் அரசர் தன் விருப்பப்படி செயல்பட முடியாது. அரசியல் அமைப்பு, வழக்காறுகள்,

மரபுகள், மக்களுடைய பிரதிநிதிகளைக் கொண்ட சட்டமன்றம், போன்றவைகள் அரசரின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துகின்றன. இன்றைக்கு ஐரோப்பாவில் நிலைத்திருக்கும் முடியாட்சிகள் எல்லாம் வரம்பிற்குட்பட்ட முடியாட்சிகளாகவே காட்சி அளிக்கின்றன. இன்றைய ஆங்கிலேய அரசு வரம்பிற்குட்பட்ட முடியாட்சிக்கு நல்லதொரு சான்றாக விளங்குகிறது. ஆங்கிலேய நாட்டு அரசர் அல்லது அரசியார் பெயரளவில்தான் அதிகாரம் பெற்றுள்ளார். பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சர் குழுவின் ஆலோசனையின்படிதான் அவர் செயல் படமுடியும்.

(iii) முடியாட்சியால் ஏற்படும் நிறை குறைகள்

(a) நிறைகள்

(i) முடியாட்சியின் கீழ் தீர்மானங்களை விரைவாக இயற்ற முடிகிறது. அவசரகாலங்களிலும் போர் நேரங்களிலும் முக்கிய மான காரியங்களை இரகசியமாக வைத்துக் கொள்ள முடிகிறது. திறமைசாலிகளை மாத்திரம் பதவியில் இருத்திவிட்டுத் திறமை யற்றவர்களை அரசுப் பணியிலிருந்து நீக்கிவிட முடியாட்சி உதவுகிறது.

(ii) திறமையான அரசர்களைக் கொண்ட முடியாட்சியானால் மக்கள் ஏராளமான நன்மைகளை அடைவர். அரசன் கட்சி அரசியலில் ஈடுபட வேண்டியதில்லை என்பதால் மக்களுக்கு நீதி, நியாயம், தர்மம் ஆகியவைகளின் அடிப்படையில் பல வசதிகளை அளித்திட முடிகிறது. மேலும், அரசர்கள் எந்த ஒரு அச்சமும் இன்றி மக்களுக்குத் தொண்டாற்ற முடியாட்சி உதவுகிறது.

(b) குறைகள்

(i) திறமையற்ற அரசனைக் கொண்ட முடியாட்சியானால் மக்கள் அல்லல் பட வேண்டியதாகிவிடும். எல்லா அரசர்களும் நல்லவர்களாகவும் ஆற்றலுடையவர்களாகவும் இருப்பார்கள் என்று கூறமுடியாது. ஒரு சில அரசர்கள் நல்லவர்களாகவும் ஆற்றலுடையவர்களாகவும் இருக்கலாம். ஆற்றலில்லாத அரசர்களால் மக்களுக்கு நன்மை எதுவும் ஏற்படுவதில்லை. மேலும், அரசன் சுயநலமியாகவும் முரட்டு சுபாவமுடைய வனாகவும் இருந்தால் மக்களுடைய உரிமைகள் பொருள் இழந்து விடும்.

(ii) ஒரு நல்ல அரசனுக்குப் பின்னால் அரசாட்சிக்கு வரும் அவனுடைய வாரிசும் நல்ல அரசனாகவே திகழ்வான் என்று

கூறமுடியாது. எனவே முடியாட்சியில் எப்பொழுதும் நல்ல அரசாங்கம் தான் அமையும் என்று உறுதியாகக் கூறமுடியாது.

## உயர் குடி ஆட்சி

## (Aristocracy)

(i) பொருளும் தன்மையும் (Meaning and Nature)

நிர்வாக அனுபவம், செல்வம், பிறப்பு ஆகியவைகளின் சிறப்பால் சமூகத்தில் உயர் நிலையில் வாழும் ஒரு சிலரால் அரசின் அதிகாரத்தைப் பிரயோகிக்கும் அரசாங்க முறை உயர் குடி ஆட்சி எனப்படும். உயர்குடி மக்கள் அரசின் மக்கள் தொகையில் ஒரு சிறுபகுதியே ஆவார்கள். இவர்கள் அறிவிலும் செல்வத்திலும் சமூகத்தில் வாழும் மற்றவர்களைவிடக் கூடுதல் அந்தஸ்த்து பெற்றவர்கள். இவர்கள் அரசாங்கப் பொறுப்பினை ஏற்று நடத்தினால் அந்த அரசாங்கத்தை உயர்குடி ஆட்சி எனலாம். உலகின் பல பாகங்களிலும் உயர்குடி ஆட்சி தோன்றியிருந்த தென்றாலும் முடியாட்சியைப் போல் அதிக அளவில் இந்த அரசாங்க முறை பெரும்பாலான நாடுகளிலும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. உயர்குடியாட்சி அரசாங்க முறையில் ஒரு சிலரே ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தாலும் அவர்கள் அனுபவமும் ஆற்றலும் பெற்றவர்கள் என்பதால் அரசாங்கம் சிறந்த அரசாங்கமாகக் காணப்படுகிறது.

(ii) உயர்குடி ஆட்சியால் ஏற்படும் நிறைகுறைகள்

நிறைகள்

(i) உயர்குடி ஆட்சியில் தரமிகுந்த அரசாங்கம் செயல்பட வாய்ப்புள்ளது.

(ii) உயர்குடி மக்கள் பழமையில் பற்றுடையவர்களாயிருப்பதால் அவர்களிடம் சகிப்புத் தன்மையும் பொறுமையும் காணப்படுகிறது. அதனால் அரசாங்கம் உணர்ச்சி வசப்பட்டு செயல்படாமலிருக்கிறது.

(iii) உயர்குடி மக்கள் அனுபவமும் ஆற்றலும் பெற்றிருப்பதால், பாரம்பரியம், மரபு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றிற் கெல்லாம் வேண்டிய மதிப்பளித்து நிலையான அரசாங்கத்தை ஏற்படுத்தி விடுகின்றனர்.

குறைகள் :-

(i) உயர்குடி ஆட்சியின் பெருங்குறை யாதெனில் திறமை யான ஆற்றல் மிகுந்த நிருவாகிகளைத் தெரிந்தெடுக்கப் பொருத்த மான ஒரு வழிமுறை எதுவும் கிடையாது.

(ii) உயர்குடி ஆட்சியில் எப்பொழுதுமே அரசாங்கம் செல்வந்தர்களின் கைகளில் இருந்து விடுகிறது.

(iii) உர்யகுடி ஆட்சியில் பொதுமக்களுக்கு நிருவாகத்தில் எந்த வித பங்கும் அளிக்கப்படுவதில்லை. அதனுல் மக்களு டைய அரசியல் அறிவு வளர வாய்ப்பு குறைவாக உள்ளது.

## மக்களாட்சி

## Democracy

(i) பொருளும் தன்மையும் (Meaning and Nature)

அரசின் இறைமையை மக்களே பிரயோகிக்கும் அரசாங்க முறைக்கு மக்களாட்சி அல்லது ஜனநாயகம் என்று பெயர். ஆபிரகாம்லிங்கன் ஜனநாயக அரசாங்க முறைக்கு மிகவும் எளிய நடையில் இலக்கணம் கூறியுள்ளார். அவர் மக்களாட்சி என்பது, மக்களுடைய, மக்களாலான, மக்களுக்காக செயல் படும் அரசாங்கம் என மிகத்தெளிவாகக் கூறியுள்ளார். ஆனுல் எல்லா அரசாங்கங்களுமே மக்களுடைய அரசாங்கம்தான். நேர்மையான சர்வாதிகாரிகள் கூட மக்களுடைய நன்மைக் காகவே ஆட்சி புரிந்துள்ளனர். எனவே, மக்களாட்சியின் முக்கிய தன்மை மக்களால் ஆன அரசாங்கம் (Government by the people) என்பதே ஆகும்.

மக்களாட்சி அரசாங்க முறையின் இரு முக்கிய அம்சங் களாக சுதந்திரம், சமத்துவம் என்னும் இரு கோட்பாடுகளும் விளங்குகின்றன. அரசாங்கத்தின் சட்டங்கள் நம்முடைய சுதந் திரத்தைக் கட்டுப்படுத்தினுலும், அந்தச்சட்டங்கள் யாவும் மக்களுடைய இணக்கத்தைப் பெற்றுதான் அமுல்படுத்தப் படுகின்றன. ஒவ்வொரு வயது வந்த மனிதனும் தனக்குத் தானே வழிகாட்ட ஆற்றல் பெற்றிருக்கின்ருன் என்றும் அந்த ஆற்றலைச் செயல்படுத்தும் வாய்ப்பினை அரசு அளிக்க வேண்டும் என்றும் கருதும் கருத்தின் அடிப்படையில் வளர்ந்தது மக்களாட்சியாகும். சுதந்திரமும் சமத்துவமும் இத்தகைய வாய்ப்பினை ஒவ்வொரு மனிதனுக்கும் அளிக்கிறது. ஜனநாயகம் வலியுறுத்தும் சுதந்திரமும் சமத்துவமும் அரசியல் கருத்துக்

களாக மட்டுமல்லாமல் சமூகக் கருத்துகளாகவும் உள்ளன என்றே கூறவேண்டும். ஏனெனில் சமூகத்தில் சமத்துவத்தின் அடிப்படையில் எல்லோருக்கும் வாழ்க்கை வசதிகள் ஏற்பட்டால் தான் நேர்மையான சமதர்ம சமுதாயத்தை அடைய முடியும்.

வாக்குரிமை அளிப்பதில் சமவாய்ப்பினை ஏற்படுத்தி விட்டால் மட்டும் போதாது. வேலை வாய்ப்பு, அடிப்படையான பொருளாதார தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கான வாய்ப்பு போன்றவைகளை ஏற்படுத்துவதிலும் அரசு சமத்துவ கோட்பாட்டினைப் பின்பற்ற வேண்டும். சுதந்திரம், சமத்துவம் போன்ற கருத்துக்களைப் போலவேதான் சகோதரத்துவம் என்னும் கருத்தும் மக்களாட்சியில் இடம் பெற்றுள்ளது. சகோதரத்துவம் நாட்டில் உள்ளவர் அனைவரையும் சகோதர சகோதரிகளாகப் பாவிக்கும் உயரிய நோக்குடைய ஒரு கருத்தாகும். இவ்வாறு ஜனநாயக அரசாங்கத்தின் முக்கிய கருத்துக்களாக சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் மூன்று கருத்துக்களும் காணப்படுகின்றன.

## (ii) மக்களாட்சியின் வகைகள் (Kinds of Democracy)

மக்களாட்சியை நேரடி மக்களாட்சி என்றும் பிரதிநிதித்துவ மக்களாட்சி என்றும் இருவகைகளாகக் கூறலாம். இவ்விரு வகை மக்களாட்சியையும் இங்கு ஆராயலாம்.

### (a) நேரடி மக்களாட்சி (Direct Democracy)

நேரடிமக்களாட்சியில் மக்கள் பிரதிநிதிகளின் உதவியின்றி தாங்களாகவே அரசாங்கத்தை நடத்துகின்றனர். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றம் என்று ஒன்று கிடையாது. எல்லா மக்களும் ஒன்றுகக் கூடி சட்டங்கள் இயற்றவோ அல்லது தீர்மானங்கள் போடவோ அல்லது பொது அலுவலர்களை நியமிக்கவோ அல்லது நிதித்திட்டத்தை இயற்றவோ செய்கின்றனர். இத்தகைய நேரடி ஜனநாயக முறை பண்டைய கிரேக்க நகர அரசுகளில் அமலில் இருந்தது. அங்கு நிலப்பரப்பும் மக்கள் தொகையும் சிறிய அளவில் இருந்ததால் நேரடி மக்களாட்சி முறையைக் கையாள முடிந்ததாக அறியமுடிகிறது.

### (b) பிரதிநிதித்துவ மக்களாட்சி (Representative Democracy)

தற்கால அரசுகள் பெரும்பாலும் அளவிலும் மக்கள் தொகையிலும் பெரிதாக இருப்பதால் நேரடி மக்களாட்சி இன்றைய

உலகில் சாத்தியமாகாத ஓர் அரசாங்க முறையாக ஆகிவிட்டது. எனவே மக்கள் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அவர்கள் மூலமாக அரசாங்கத்தை நடத்த வேண்டியதாக உள்ளது. மக்களுக்குப் பதிலாக அவர்களுடைய பிரதிநிதிகளைக் கொண்ட சட்டமன்றம் சட்டங்களை இயற்றுகின்றது. இத் தகைய அரசாங்க முறைதான் தற்கால ஜனநாயக நாடுகளில் செயல்பட்டு வருகின்றது. சட்டமன்றம் மக்கள் பேரில் சட்டங் களை இயற்றி நிருவாகத்தின் மீதும் கட்டுப்பாடு மேற்கொள்கிறது.

பிரதிநிதித்துவ அரசாங்க முறையின் முக்கிய குறைபாடு யாதெனில் மக்கள் தேர்தல் காலத்தில் மட்டும்தான் அரசாங் கத்தின் மீது கட்டுப்பாடு பிரயோகிக்க முடிகிறது. இக்குறை பாட்டினை நீக்கும் முகமாக சிலநாடுகளில் சில வழி முறைகள் பயன் படுத்தப் படுகின்றன. இவ் வழிமுறைகள் ''மக்கள் துவக்கம்'' (initiative), ''மக்கள் தீர்ப்பு'' (Referen-dum) ''திரும்ப அழைத்தல்'' (Recall) என்று அழைக்கப்படு கின்றன. மக்கள் துவக்கம் என்பது மக்கள் ஒரு சட்டத்தை இயற்றுமாறு சட்டமன்றத்தைக் கேட்டுக் கொள்வதற்கு அவர்கள் பெற்றிருக்கும் உரிமையாகும். மக்கள் தீர்ப்பு என்பது அரசியல் அமைப்புத் திருத்தசட்ட போன்ற முக்கியமான சட்டங்கள் இயற்றுவதற்கு முன்னதாக மக்களுடைய தீர்ப்பைப் பெற்றாக வேண்டும் என்பதைக் குறிக்கும். திரும்ப அழைத்தல் என்பது மக்களுடைய விருப்பைக் கருத்தில் கொள்ளத் தவறிய பிரதிநிதி களைப் பதவியிலிருந்து நீக்க மக்கள் பெற்றிருக்கும் உரிமையை விளக்குவதாய் உள்ளது. இவ்வாறு இந்த வழிமுறைகள் யாவும் உண்மையான ஜனநாயக உணர்வை மக்களிடம் ஏற்படுத்து வதற்குப் பயன்படுகின்றன.

(iii) மக்களாட்சியின் நிறைகுறைகள்:-

நிறைகள்

(i) மக்களாட்சி முறை அரசாங்கம் சமத்துவக் கோட் பாட்டை பின்பற்றுவது அதனுடைய சிறப்பான அம்சமாக உள்ளது. ஜனநாயகம் எல்லோருக்கும் சமத்துவ அடிப்படை யில் அரசியல் உரிமைகளை அளிக்கிறது. மனிதனுக்கு மனிதன் வேறுபாடு செய்யாமல் எல்லோருக்கும் அரசாங்கத்தைத் தேர்ந் தெடுக்கும் உரிமையை அளிக்கிறது.

(ii) ஜனநாயக அரசாங்கம் மட்டுமே பொதுக்கருத்தின் அடிப்படையில் மக்களுடைய சம்மதத்தைப் பெற்று செயல்படும் ஒரே அரசாங்க முறையாக உள்ளது.

(iii) ஜனநாயகம் சுதந்திரத்தை அளித்து மக்களிடையே சகோதரத்துவ உணர்வை ஏற்படுத்துகிறது. ஜனநாயகத்தில் மக்களுக்குப் பேச்சுரிமை, கூடும் உரிமை; அரசாங்க கொள்கைகளையும் செயல்களையும் திறனாய்வு செய்யும் உரிமை போன்ற உரிமைகள் அளிக்கப்படுகின்றன.

(iv) பொதுவாக ஜனநாயக முறை மட்டுமே புரட்சிக்கு இடமளிக்காத ஓர் அரசாங்க முறையாக உள்ளது.

(v) ஜனநாயகத்தில் எல்லாவகையான மக்களுக்கும் பங்கு அளிக்கப்படுகிறது. ஜனநாயகம் பெரும்பான்மையினரின் அரசாங்கம் என்றாலும் சிறுபான்மையினரின் விருப்பங்களையும் பாதுகாக்கிறது.

(vi) ஜனநாயகம் மனிதனுடைய அறிவை வளர்க்கும் ஓர் அரசாங்கமாகவும் உள்ளது. நிருவாகத்தில் மக்கள் அதிக பங்கு வகிக்க முடிவதால் அரசாங்கத்தையும் அதன் நிருவாகத்தையும் பற்றி அவர்கள் நன்கு தெரிந்து கொள்கின்றனர். அதனால் அவர்கள் அதிக பொறுப்புள்ளவர்களாக நடந்துகொள்கின்றனர். மேலும் தியாக மனப்பான்மை, சுயநலமின்மை, பொதுநல விருப்பம் போன்ற நற்குணங்களையும் மக்களிடையே வளர்க்கும் ஓர் அரசாங்கமுறையாக ஜனநாயகம் காணப்படுகிறது.

குறைகள்:

(i) ஜனநாயகம் குரு ஆட்சியை (Oligarchy) ஏற்படுத்தி விடுவதாக சிலர் கருதுகின்றனர். பொதுவாக ஜனநாயகத்தில் திறமையானவர்களைத் தேர்ந்தெடுப்பதை விட பிரசித்தி பெற்றவர்களைப் பிரதிநிதிகளாகத் தேர்ந்துதெடுத்து விடுகின்ற நிலை ஏற்படுகிறது. அதனால் பிரதிநிதிகள் முடிவில் தங்களுடைய விருப்பப்படி செயலாற்றத் துவங்கி விடுகின்றனர்.

(ii) ஜனநாயகத்தில் கட்சிமுறையில் உள்ள தீமைகள் யாவும் காணப்படுகின்றன. அதாவது குறுகிய மனப்பான்மை, அழிவுமுறை, அதிகாரப்பசி ஆகிய தீமைகள் தோன்ற ஏராளமான வாய்ப்புகள் உள்ளன. தேர்தல் காலங்களில் அரசியல் கட்சிகள் மக்களுக்குப் பொய்யான வாக்குறுதிகளை அளித்து அரசாங்கத்தைக் கைப்பற்றிவிட்டு, ஆட்சிக்கு வந்தபிறகு அந்த வாக்குறுதிகளை நிறைவேற்றத் தவறிவிடுகின்றன. அதனால் மக்கள் ஏமாந்துவிட நேரிடுகிறது.

(iii) ஜனநாயக தேர்தல்களில் ஏராளமான பணம் செலவு செய்யப்படுகிறது. ஆளும்கட்சி தொழிலதிபர்களிடமிருந்தும் செல்வந்தர்களிடமிருந்தும் ஏராளமான அளவில் நிதி வசூலித்து அதன்மூலம் தேர்தலில் வெற்றிபெற்று விடுகிறது. எனவே, மக்களுடைய விருப்பப்படி அரசாங்கம் அமைவதைவிட ஒரு கட்சியின் நிதிநிலையைப் பொறுத்தே அரசாங்கம் அமைகிறது என்றே கூறவேண்டும்.

(iv) எல்லா சட்டங்களும் சட்டமன்றத்தால் இயற்றப்பட வேண்டியதிருப்பதால் விறுவிறுப்பாக அரசாங்கச் செயல்கள் நடைபெற முடிவதில்லை. நெருக்கடி காலங்களில்கூட அரசாங்கச் செயல்களில் காலதாமதம் ஏற்படலாம் என்பது ஜனநாயக அரசாங்க முறையின் ஒரு பெரும் குறையாக உள்ளது.

(v) இறைமையைப் பிரயோகிப்பவர்கள் நிர்வாக நுணுக்கங்களைப் பெற்றிருந்தால்தான் நிர்வாகம் சிறப்பாக அமைய முடியும். ஆனால் மக்களாட்சி முறையில் இறைமையைப் பிரயோகிக்க உரிமை பெற்றிருக்கும் மக்கள் யாவரும் நிர்வாக நுணுக்கங்களைத் தெரிந்து வைத்திருக்கிறார்களா என்றால் இல்லை என்றே கூறவேண்டும். எனவே, அரசாங்கம் நிர்வாக நுணுக்கம் அறியாதவர்களால் நிறுவப்படவும் வாய்ப்புள்ளது. இது அரசாங்கத்தின் திறமையைப் பெரிதும் பாதிப்பதாய் உள்ளது.

(vi) ஜனநாயகத்தில் லஞ்ச ஊழலுக்கும் சுரண்டலுக்கும் அதிக வாய்ப்பும் வசதியும் உள்ளது. ஜனநாயக அரசாங்கம் ஏராளமான விதிமுறைகளையும் சட்டங்களையும் பின்பற்ற வேண்டியதாய் உள்ளது. லஞ்சம் வாங்கியும் அரசாங்கப் பணத்தை சுரண்டியும் பிழைக்கும் அரசாங்க அலுவலர்கள் முடிவில் தப்பித்துக் கொள்வதற்கு இந்த விதிமுறைகள் சாதகமாக உள்ளன. காலதாமதத்தை ஏற்படுத்துவதற்குக் காரணமாக உள்ள இந்த விதிமுறைகளும் நடைமுறைகளும் ஜனநாயக முறையில் பலவிதமான நிருவாக ஊழல்கள் ஏற்படவும் இடமளிக்கின்றன.

## சர்வாதிகார ஆட்சி
## (Dictatorship)

(i) பொருளும் தன்மையும் (Meaning & Nature)

சகல அதிகாரத்தையும் தானே பிரயோகிக்கும் ஒருவனுடைய ஆட்சி சர்வாதிகாரம் என்றழைக்கப்படுகிறது. சர்வாதி

காரக் கருத்து மக்களாட்சிக்கருத்துக்கு நேர் எதிரான ஒரு கருத்தாக உள்ளது. சர்வாதிகார ஆட்சி முறையை ஒரு புதிய அரசாங்க முறையாக எண்ணுவதற்கில்லை. வரம்பிலா அதிகாரத்துடன் மக்களை ஆண்ட எத்தனையோ எதேச்சாதி காரிகளைப்பற்றி வரலாறு கூறுகிறது. ஆனால் அந்தக்காலத்தில் மன்னர்கள் நடத்திய எதேச்சாதிகார ஆட்சிக்கும் இந்தக் காலத்தில் தோன்றுகின்ற சர்வாதிகார ஆட்சிக்கும் வித்தி யாசம் உள்ளது. அந்தக்காலத்திய எதேச்சாதிகாரிகள் படை பலம் கொண்டு ஆட்சி புரிந்தனர்களே தவிர பொதுமக்களின் ஆதரவைப் பெறமுயன்றதும் கிடையாது, தங்களுடைய அதிகாரத்திற்கு பொதுமக்களின் ஆதரவு உள்ளது என்று வெளியில் சொன்னதும் கிடையாது. இதற்குச் சான்றாக பிரஞ்சு நாட்டை ஆண்ட நெப்போலியனின் ஆட்சியையும் ருஷ்யாவை ஆண்ட சார் மன்னர்களின் ஆட்சியையும் கூறலாம். ஆனால் தற்கால சர்வாதிகாரிகளாகிய ஹிட்லர், முசோலனி போன்ற வர்கள் நன்கு நிறுவப்பட்ட அரசியல் கட்சிகளின் தலைவர் களாக இருந்து அந்தக் கட்சிகளின் மூலமாக ஏராளமான தொண்டர்களின் ஆதரவைப் பெற்று அதன் வாயிலாகச் சர்வாதி காரிகளாயினர்.

ஒரு சர்வாதிகாரி தன்னுடைய செல்வாக்கை நிலைநாட்டி அதிகாரத்தைப் பிரயோகித்துத் தனது ஆதிக்கத்தை பிரஸ்தாபப் படுத்த கட்சியைத்தான் சாதனமாக பயன்படுத்துகிறான். பொது வாக ஒரு சர்வாதிகாரி சக்தி வாய்ந்த அல்லது ஆற்றல் மிகுந்த தலைவனாகவே இருக்கின்றான். எல்லா காரியங்களிலும் அவனே இறுதி அதிகாரம் பெற்றிருக்கிறான். அவன் இயற்று வதுதான் சட்டம். ஒரே தேசம், ஒரே கட்சி, ஒரே தலைவன் என்பதுதான் சர்வாதிகாரிகளுடைய நோக்கமாகும்.

தற்கால சர்வாதிகார ஆட்சியின் ஒரு முக்கிய இயல்பு யாதெனில் எதேச்சாதிகார அரசை நிறுவுதலாகும். அதாவது சகல அதிகாரமும் படைத்த அரசை நிறுவுதலாகும். 'தேசீய அரசு' (Nation State) கருத்தை தற்கால சர்வாதிகாரம் நிலை நிறுத்துகிறது. தனிமனிதன் அரசுக்குத் தன்னை முற்றிலுமாகப் பணியவைக்க வேண்டும் என்பதே சர்வாதிகார ஆட்சியின் கொள்கையாகும். எதேச்சாதிகார அரசுகளில் அரசாங்கம் தனி மனிதனுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஆதிக்கம் செலுத்துகிறது. அதாவது அரசுக்கு விரோதமாக எந்தச் செயலிலும் ஈடுபடக் கூடாது. எல்லாச் செயல்களும் அரசின்

நலனுக்காகவே நடைபெறவேண்டும். அரசின் அதிகாரத்திற்கு விலக்காய் எந்த ஒரு மனிதனும் செயல் படமுடியாது என்னும் அம்சங்களைச் சர்வாதிகார ஆட்சிமுறை பெற்றுள்ளது.

சர்வாதிகாரிகள் தங்களுடைய தேசத்தின் பெயரையும் புகழையும் மற்ற நாடுகளுக்கும் மேலாக நிலை நாட்டப் பாடு படுகின்றனர். தங்களுடைய நாட்டுமக்களிடம் உயர்ந்த இன உணர்வை ஏற்படுத்தி விடுகின்றனர். அதாவது தாங்கள் உயர் குலத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் அதனால் தாழ்ந்த குலமக்களை ஆளுவதற்கு உரிமை பெற்றியிருப்பதாகவும் எண்ணிக் கொள் கின்றனர். சர்வாதிகாரிகள் தங்களுடைய கொள்கையை நிறை வேற்ற முரட்டுப்பலத்தை பயன்படுத்துகின்றனர்.

சர்வாதிகார நாடுகளில் தனிமனிதனின் சுதந்திரம் பொருள் இழந்து காணப்படுகிறது. தற்கால சர்வாதிகாரத்தில் ஒரு கட்சியின் எதேச்சாதிகாரமே நடைபெறுகிறது. சர்வாதிகாரியின் கட்சி மட்டுமே அனுமதிக்கப்படுகிறது. அந்தக்கட்சிக்கு நேரான எதிர்ப்புக்கள் எதுவானாலும் ஈவு இரக்கமின்றி நசுக்கப்படு கின்றன. மக்களுடைய பேச்சு சுதந்திரமும் கட்டுப்படுத்தப் பட்டுவிடுகிறது. பிரச்சார சாதனங்களான பத்திரிகைபிரசுரம், பள்ளிகள், வானொலி, திரைப்படங்கள் போன்றவைகளும் கட்டுப் படுத்தப்படுகின்றன. சர்வாதிகாரியின் கொள்கைகளையோ அல்லது செயல்களையோ குறைகூறுதல் மன்னிக்க முடியாத குற்றம். குடிமக்களுடைய முதல்கடமை யாதெனில் சர்வாதி காரியாக ஆட்சிபுரிகின்றவர்களை நம்பி அவர்களுடைய கட்டளை களுக்குப் பணிய வேண்டியதாகும்.

### சர்வாதிகார ஆட்சியின் நிறை குறைகள்

#### நிறைகள்

(i) சில வேளைகளில் மக்களாட்சியில் தோன்றும் குறைகளைப் போக்க சர்வாதிகாரத்தை நாடுவதற்குக் காரணம் அதனுடைய நிறைகளேயாகும். முதலாவதாக சர்வாதிகாரி எதிர்ப்புகளைக் கண்டு அஞ்சாதிருப்பதால் எத்தகைய நெருக்கடி நிலையையும் சமாளிக்கின்ற சக்தி அவனுக்கு இருப்பதாக நம்பப்படுகிறது.

(ii) பல்வேறு சாதி, மதம், மொழி, ஆகிய வேறுபாடு களைக் கொண்ட மக்கள் கூட்டத்தை ஒன்று சேர்த்துத் தேசீய உணர்வை அவர்களிடம் ஏற்படுத்தச் சிறந்த ஆட்சியாக சர்வாதிகாரம் விளங்குகிறது.

**குறைகள்**

(i) சர்வாதிகாரம் தனிமனிதனின் தன்முயற்சித்திறனையும் தனித்தன்மையையும் அழித்துவிடுவதாய் உள்ளது.

(ii) சர்வாதிகார ஆட்சியின் கீழ் தனிமனிதன் தனது சுய மரியாதையையும் தன்னம்பிக்கையையும் இழந்துவிடுகிருன்.

(iii) சர்வாதிகாரம் வலிமையை அடிப்படையாகக் கொண்டு செயல்படுகிறது.

(iv) சர்வாதிகார ஆட்சியில் நிலைப்புத் தன்மை இல்லை. ஆளுமையின் பலத்தால் ஆட்சி நிறுவப்படுவதால் சர்வாதிகாரி இறந்தவிடத்து அவனுடைய சர்வாதிகார ஆட்சியும் அவனோடு முடிவடைந்துவிடுகிறது.

## பாராளுமன்ற முறை அரசாங்கம்
## (Parliamentary Type of Government)

(i) பொருளும் தன்மையும் (Meaning and Nature)

பாராளுமன்ற முறை அரசாங்கத்தை காபினட் அரசாங்கம் (Cabinet Government) என்றும் பொறுப்பான அரசாங்கம் (Responsible Government) என்றும் அழைக்கலாம். சட்ட மன்றத்திற்குப் பொறுப்பான ஆட்சித்துறையை உடைய அரசாங்க முறைக்குப் பாராளுமன்ற முறை அரசாங்கம் என்று பெயர். இங்கிலாந்து, பிரான்சு, இந்தியா போன்ற நாடுகளின் ஆட்சித்துறை சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாக அமைந்துள்ளது என்ற நிலையில் இந்த நாடுகளிலெல்லாம் பாராளுமன்ற முறை அரசாங்கம் அமுலில் இருப்பதாக அறியலாம்.

பாராளுமன்ற முறையில் இருவகையான செயற்குழுத் தலைமைகளைக் காணலாம். ஒன்று பெயரளவிலான தலைமையாகவும் மற்றொன்று உண்மையான செயற்குழுத் தலைமையாகவும் அமைந்து செயல்படுகின்றன. இந்தியாவில் குடியரசுத் தலைவரும் இங்கிலாந்தில் அரசன் அல்லது அரசியும் பெயரளவிலான செயற்குழுத் தலைவர்களாவர். காபினட் அல்லது தலைமை அமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சர் குழு உண்மையான செயற்குழுத் தலைவராகச் செயல்படுகின்றது. காபினட் பெயரளவிலான தலைவரின் பெயரிலேயே எல்லாச் செயல்களையும் கவனிக்கின்றது.

சட்டமன்றத்தில் பெரும்பான்மை பெற்று விளங்கும் கட்சியைச் சேர்ந்த முக்கிய அங்கத்தினர்கள் காபினட்டில் இடம் பெறுகின்றனர். காபினட் அங்கத்தினர்கள் தனித்தனியாகவும் கூட்டாகவும் சட்டமன்றத்திற்குப் பொறுப்புடையவர்களாவர். அதாவது சட்டமன்றம் அவர்கள் மீது கட்டுப்பாடு செலுத்துகிறது என்று கூறலாம். அரசாங்கத்திற்கு எதிராக நம்பிக்கை இல்லாத் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றுவதின் மூலமாகவும், நிதிச்சட்டவரைவுகளுக்கு அனுமதி தர மறுத்து விடுவதின் மூலமாகவும் சட்டமன்றம் செயற்குழுவாகிய காபினட்டை பதவியிலிருந்து நீக்கிவிட முடியும். மேலும் பாராளுமன்ற முறையில் அதிகாரப் பிரிவினைக் கொள்கைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. சட்ட மன்றத்திலுள்ள அங்கத்தினர்களே காபினட்டிலும் இடம் பெறுவதால் சட்டமன்றத்திற்கும் ஆட்சித்துறைக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது.

**(ii)** பாராளுமன்ற முறையின் நிறை குறைகள் :

நிறைகள்

(i) சட்டத்தை இயற்றுகிறவர்களுக்கும் சட்டத்தை அமல்படுத்துகிறவர்களுக்கும் இடையே ஒத்துழைப்பு உணர்வும் ஒருங்கிணைவும் ஏற்பட வாய்ப்புள்ளது.

(ii) சட்டமன்றக் கட்டுப்பாடு இருப்பதால் காபினட் எதேச்சாதிகாரம் செய்ய வாய்ப்பில்லை.

(iii) காபினட்டின் கொள்கைகளையும் செய்கைகளையும் மக்களுடைய பிரதிநிதிகள் குறைகூற உரிமை பெற்றுள்ளமையால் பாராளுமன்றமுறை கூடுதலாக ஜனநாயக அடிப்படையில் செயல்படுகிறது எனலாம்.

குறைகள்

(i) அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டால் ஏற்படும் நன்மைகள் புறக்கணிக்கப்பட்டுவிடுகின்றன.

ii) காபினட்டில் உள்ளவர்கள் பெரும்பான்மை பெற்ற கட்சியின் முக்கியஸ்தர்கள் என்பதால் காபினட்டை சட்டமன்றம் கட்டுப்படுத்துவதற்குப் பதிலாக காபினட் சட்டமன்றத்தைக் கட்டுப்படுத்திவிடுகிறது.

(iii) அமைச்சர்கள் அமைச்சர்களாகவும் அதே நேரத்தில் சட்டமன்ற உறுப்பினர்களாகவும் செயல்பட வேண்டியதிருப்ப

தால் அவர்களால் நிர்வாகத்தில் திறமையாகச் செயல்பட முடியாது.

(iv) பல வேறுபாடுகளைக் கொண்ட மக்களை ஒன்று சேர்த்து நாட்டுமக்களாகச் செயல்படத் தூண்டுவதற்கு பாராளுமன்ற முறை சிறந்த ஒரு முறை ஆகாது.

## தலைவர் முறை அரசாங்கம்

## (Presidential type of government)

(i) பொருளும் தன்மையும் (Meaning and Nature)

சட்ட மன்றக் கட்டுப்பாட்டினின்று விடுபட்டு சுயேச்சை யாகச் செயல்படும் செயற்குழுவைப் பெற்ற அரசாங்க முறைக்குத் தலைவர் முறை அரசாங்கம் என்று பெயர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசில் குடியரசுத் தலைவர் செயற்குழுவின் பொறுப்பேற்று ஆனால் சட்ட மன்றத்திற்குப் பொறுப்பில்லாமல் செயல்படுவதால் அங்குள்ள அரசாங்க முறை தலைவர் முறை அரசாங்கமாகும்.

தலைவர் முறை அரசாங்கத்தில் குடியரசுத்தலைவர் குறிப் பிட்ட காலத்திற்கு என மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் படுகிறார். அவருடைய பதவிக்காலம் முடிவடைவதற்கு முன் குற்ற விசாரணை தவிர மற்றப்படி அவரைப் பதவியிருந்து நீக்க சட்ட மன்றத்திற்கு உரிமை கிடையாது. ஆட்சித்துறைக்கும் சட்டமன்றத்திற்கும் இடையே பெரும் இடைவெளி உள்ளது. தலைவரோ அல்லது அவருடைய செயலாளர்களோ அல்லது அமைச்சர்களோ சட்டமன்றத்தின் அங்கத்தினர்களல்லர். மேலும், தலைவர் தன்னுடைய செயலாளர்களை நியமிக்கவும் நீக்கவும் முழு அதிகாரமும் பெற்றுள்ளார்.

(ii) தலைவர் முறை அரசாங்கத்தின் நிறைகுறைகள்

நிறைகள்

(i) பாராளுமன்ற அரசாங்கத்தைவிட தலைவர்முறை அரசாங்கம் அதிக பலமுடையதாக உள்ளது. தலைவர் சட்ட மன்றத்தின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டு தனிபட்டமுறையில் செயல்பட முடிவதால் எந்த நெருக்கடி நிலையையும் எளிதில் சமாளித்துக் கொள்ள முடிகிறது.

(ii) தலைவரை சட்டமன்றம் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றுவதின் மூலமாகப் பதவியிலிருந்து நீக்கிவிட முடியாது என்பதால் தலைவர்முறை அரசாங்கத்திற்கு நிலையான தன்மை உள்ளது என்று கூறலாம்.

(iii) செயற்குழுவிற்கு சட்டமியற்றும் கடமை இல்லாதிருப்பதால் தலைவர் நிர்வாகத்தில் அதிக கவனம் செலுத்த முடிகிறது. அதனுல் நிர்வாகம் விரைவாகவும் திறமையாகவும் நடைபெற முடிகிறது.

குறைகள்

(i) தலைவர்முறை அரசாங்கம் பொறுப்பில்லாத அல்லது எதேச்சாதிகாரம் புரியும் அரசாங்கமாகச் செயல்படுவதே அதன் பெரும் குறையாகும். தலைவர் சட்டமன்றத்திற்குப் பொறுப்பு உள்ளவர் அல்லர் என்பதால் அவர் சர்வாதிகாரம் புரிய சகல வாய்ப்பும் உள்ளது.

(ii) சட்டமன்றமும் ஆட்சித்துறையும் சுயேச்சையான முறையில் செயல்படுவதால் இரண்டும் ஒற்றுமையாக செயல்பட வாய்ப்பில்லை. அதனுல் அடிக்கடி சட்டமியற்றுவதில் முடக்கங்களும் குழப்பங்களும் ஏற்படுகின்றன.

## ஒற்றையாட்சிமுறை அரசாங்கம்
## (Unitary Type of Government)

பொருளும் தன்மையும் (Meaning and Nature)

ஒற்றையாட்சி அரசாங்கம் என்பது உயர் அதிகாரம் கொண்ட ஒரு சட்டமன்றம், ஒரு ஆட்சித்துறை, ஒரு நீதித்துறை ஆகியவைகளைக் கொண்ட ஒரு வலிமையான மத்திய அரசாங்கத்தின் மூலமாக நாடு முழுவதையும் ஆட்சி செய்யும் அரசாங்க முறையாகும். மத்திய அரசாங்கத்திடமே நாட்டின் சகல அதிகாரமும் உறைந்திருக்கிறது. நாட்டிலுள்ள ஏனைய பிரதேசங்களுக்குச் சுயேச்சையாகச் செயல்பட உரிமை எதுவும் கிடையாது. பிரிட்டன், பிரான்சு, இத்தாலி, ஸ்வீடன் போன்ற நாடுகளில் ஒற்றையாட்சிமுறை அரசாங்கம்தான் நடைமுறையில் உள்ளது.

ஒற்றையாட்சி முறையில் தலசுய ஆட்சி ஸ்தாபனங்கள், நகராண்மைக் கழகங்கள் போன்ற ஆட்சி நிறுவனங்கள்

உள்ளன. ஆனால் இவைகளெல்லாம் மத்திய அரசாங்கத்திட மிருந்து அதிகாரம் பெற்று அதனுடைய கட்டளைகளுக்கிணங்க செயல்படுகின்றன. பூகோள அடிப்படையில் பிரிக்கப்பட்ட நாட்டின் பல பிரதேசங்களில் காணப்படும் ஆட்சி நிறுவனங்கள் நிருவாக வசதிக்காக ஏற்படுத்தப்பட்டு மத்திய அரசாங்கத்தின் முழுகட்டுப்பாட்டிற்கும் கீழ் செயல்படும் நிருவாக அமைப்பின் பல கூறுகளாகமட்டுமே பாவிக்கப்படுகின்றன. தனிப்பட்ட முறையில் அந்த பிரதேசங்கள் செயல்பட எந்தவித உரிமையோ அதிகாரமோ கிடையாது.

மத்திய அரசாங்கமே பிரதேச நிருவாகக்கூறுகளை உருவாக்குகின்றது. எனவே, அவைகளைத் தேவையற்றபோது மாற்றி அமைக்கவும், அல்லது அழிக்கவும் மத்திய அரசாங்கத்திற்குச் சகல அதிகாரமும் உள்ளது. மத்திய அரசாங்கத்தின் சட்ட மன்றமே இறைமை அதிகாரம் பெற்று விளங்குகிறது. பிரதேசங்களில் காணப்படும் சட்டமியற்றும் அதிகாரம் கொண்ட நிறுவனங்கள் யாவும் மத்திய சட்டமன்றத்தின் அதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டே செயல்படுகின்றன.

(ii) ஒற்றையாட்சி முறையின் நிறை குறைகள் :

**நிறைகள்**

(i) சகல அதிகாரமும் படைத்த மத்திய அரசாங்கத்தால் உள்நாட்டு விவகாரங்களிலானாலும் சரி வெளிநாட்டு விவகாரங்களிலானாலும் சரி திறமையாகச் செயல்பட முடிகிறது.

(ii) ஒரே விதமான அரசாங்கமுறை நாடு முழுவதும் செயல்படுவதால் கொள்கையிலும் நிருவாகத்திலும் ஒரே சீரான தன்மையை ஏற்படுத்த முடிகிறது.

(iii) சட்டங்களை நல்லமுறையில் அமல்படுத்த சகல அதிகாரமும் பெற்றுள்ள மத்திய அரசாங்கத்தால் முடிகிறது.

**குறைகள்**

(i) மத்திய அரசாங்கத்திடம் எல்லா அதிகாரமும் குவிந்துள்ளமையால் அது எதேச்சாதிகாரமாகச் செயல்பட வாய்ப்பு உள்ளது.

(ii) நாட்டின் எல்லா பிரதேசங்களையும் மத்திய அரசாங்கமே நிருவகிப்பதால் ஒவ்வோர் இடத்திலும் தோன்றுகின்ற வெவ்வேறு பிரச்சனைகளுக்குத் தீர்வுக்காண முடியாமல் போய்விடுகிறது.

(iii) அதிகாரம் மையமாக்கப்பட்ட அதிகார வர்க்கத்தை ஒற்றையாட்சிமுறை வளர்க்கிறது. அதாவது மத்திய அரசாங்கப் பணியாளர்கள் முழு அதிகாரத்தையும் பிரயோகிக்க உரிமை பெற்றிருப்பதால் தலசுய ஆட்சி அலுவலர்களுடன் சம்பந்தப் பட்ட மக்களின் விருப்பங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில்லை.

## கூட்டாட்சிமுறை அரசாங்கம்

## (Federal Type of Government)

### (i) பொருளும் தன்மையும் (Meaning and Nature)

கூட்டாட்சி என்பது பல நாடுகளைக் கொண்ட ஒரு கூட்டமைவு ஆகும். சில நாடுகள் முன்பு சுதந்திரமாக வாழ்ந்து பிறகு பாதுகாப்பிற்காக ஒரு மத்திய அரசாங்கத்தை ஏற்படுத்தி எல்லாவற்றிற்கும் பொதுவான காரியங்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை அதனிடம் தந்துவிட்டு மற்ற காரியங்கள் மீது முழு அதிகாரத்தையும் தாங்களே வைத்துக் கொள்கின்ற ஆட்சிமுறைக்குக் கூட்டாட்சி என்று பெயர். அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியா, ஸ்விட்சர்லாந்து, ருஷ்யா போன்ற நாடுகளில் கூட்டாட்சி முறை அரசாங்கம் அமலில் உள்ளது.

ஒற்றையாட்சி முறைக்கும் கூட்டாட்சி அரசாங்க முறைக்கும் இடையே இரு முக்கிய வேறுபாடுகள் உள்ளன. முதலாவதாக ஒற்றையாட்சி முறையின் கீழ் அரசின் அதிகாரங்கள் யாவும் மத்திய அரசாங்கத்திடமே உள்ளது. ஆனால் கூட்டாட்சி அரசாங்க முறையின் கீழ் அரசின் அதிகாரங்கள் யாவும் மத்திய அரசாங்கத்திற்கும் பிரதேச அரசாங்களுக்குமிடையே பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. இரண்டாவதாக, ஒற்றையாட்சி முறையின் கீழ் பிரதேச நிருவாகக்கூறுகள் யாவும் மத்திய அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டுச் செயல்படுகின்றன. ஆனால் கூட்டாட்சி அரசாங்கத்திற்குக் கீழ் பிரதேச நிருவாகக்கூறுகள் யாவும் சுயமாகச் செயல்பட உரிமையும் அதிகாரமும் பெற்று உள்ளன.

கூட்டாட்சி அரசாங்கத்தில் ஒற்றையாட்சி முறையில் காண்பதைவிட முக்கியமான சில தன்மைகளைக் காணலாம். அவைகளை ஒவ்வொன்றாக ஆராயலாம். முதலாவதாக, மத்திய அரசாங்கத்திற்கும் பிரதேச அரசாங்கங்களுக்குமிடையே, எழுதப்பட்டதும் நெகிழாததுமான அரசியல் அமைப்பின் மூல

மாக, அதிகாரங்கள் பங்கீடு செய்யப்பட்டுள்ளன. மத்திய அரசாங்கத்திற்கு தேசிய முக்கியத்துவம் வாய்ந்த, உதாரணமாக, நாட்டின் பாதுகாப்பு, நாணயம் அச்சிடல், வெளிநாட்டுக் கொள்கைபோன்ற, காரியங்களை நிருவகிக்க முழு அதிகாரமும் அளிக்கப்படுகிறது. பிரதேச அளவில் முக்கியத்துவம் வாய்ந்த காரியங்களை நிருவகிக்கத் தேவையான அதிகாரங்கள் பிரதேச அரசாங்கங்களுக்கு அளிக்கப்படுகிறது.

இரண்டாவதாக, அரசியல் அமைப்பு நாட்டின் அடிப்படைச் சட்டமாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. அரசியல் அமைப்பிற்கு உட்பட்டுத்தான் மத்திய அரசாங்கமும் பிரதேச அரசாங்கங்களும் செயல்பட வேண்டும். அரசியல் அமைப்பிற்கு விரோதமாக இயற்றப்படும் சட்டங்கள் செல்லாது என்று தீர்ப்பளிக்கத் தலைமை நீதி மன்றத்திற்கு உரிமை வழங்கப் பட்டுள்ளது.

மூன்றாவதாக, அரசியல் அமைப்பைப் பாதுகாக்கவும் அதற்கு விளக்கம் கூறவும் சுயேச்சையாகச் செயல் படக்கூடிய ஒரு நீதித்துறை தேவை. பிரதேச அரசாங்கங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்குமிடையே தோன்றுகிற தகராறுகளைத் தீர்த்துவைக்கவும், அரசியல் அமைப்பிற்கு எதிராக இயற்றப் படும் சட்டங்களையும் ஆட்சித்துறையின் செய்கைகளையும் நீதிப்புனராய்வு அதிகாரம் மூலமாகச் செல்லாது என்று கூறவும் தலைமை நீதிமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது.

நான்காவதாக, கூட்டாட்சியில் இரட்டைக் குடியுரிமை (double citizenship) வழங்கப்படுகிறது. அதாவது கூட்டாட்சி அரசில் வசிக்கும் ஒருவனுக்கு கூட்டாட்சி அரசின் குடியுரிமை ஒன்றும் அவன் எந்த மாநிலத்தைச் சேர்ந்தவனோ அந்த மாநிலத் திற்கு என ஒரு குடியுரிமையும் இவ்வாறு இரு குடியுரிமைகள் வழங்கப்படுகின்றன. உதாரணமாக, அமெரிக்க ஐக்கிய நாடு களின் குடியரசில் வெர்ஜினியா மாநிலத்தைச் சேர்ந்த ஒருவனுக்கு வெர்ஜினியா குடிமை ஒன்றும் அமெரிக்க குடியரசின் குடிமை ஒன்றும் வழங்கப்படுகிறது. ஆனால் ஒற்றையாட்சி நாடுகளில் மாநிலத்திற்கு என தனிக் குடிமை எதுவும் வழங்கப்படுவதில்லை. அங்கு ஒற்றைக் குடிமை (single citizenship) முறை தான் அமுலில் உள்ளது.

இறுதியாகக் கூட்டாட்சிக்கும் ஒற்றையாட்சிக்கும் உள்ள பெரும் வேறுபாடு யாதெனில், மத்திய அரசாங்கங்களுக்கும்

மாநில அரசாங்கங்களுக்கும் இடையே அதிகாரப் பங்கீடு செய்யுங்கால் பொதுவாகக் கூட்டாட்சியில் எஞ்சிய அதிகாரங்கள் (residuary powers) அதாவது மத்திய மாநில அரசாங்கங்களுக்கு அளித்தது போக மீதி ஏதாவது அதிகாரங்கள் உண்டானல் அவைகள் யாவும் பிரதேச அல்லது மாநில அரசாங்கத்திற்கே அளிக்கப்படுகின்றன. கூட்டாட்சியில் மத்திய அரசாங்கம் பலம் குன்றியதாகவும் மாநில அரசாங்கங்கள் அதிக பலமுடையதாகவும் இருக்க வேண்டும் என்பதால் இந்த நியதி பின்பற்றப்படுகிறது.

(ii) கூட்டாட்சி அரசாங்கத்தின் நிறை குறைகள்

நிறைகள்

(i) பலவிதமான மொழிகளையும், இனங்களையும், வேறுபட்ட பொருளாதார நிலைகளையும் கொண்ட மக்கள் வாழ்கின்ற நாட்டுக்கு கூட்டாட்சி முறை சிறந்தது.

(ii) நெருக்கடி காலங்களில் முழு பலத்துடன் செயல்படவும் அதே நேரத்தில் பிரதேசங்களின் சுய உரிமையையும் பாதுகாக்கவும்வல்ல அரசாங்க முறை கூட்டாட்சி முறையாகும்.

(iii) கூட்டாட்சி முறையில் பிரதேசங்களுக்கே சிறப்பான சில காரியங்களையும் பிரச்னைகளையும் கருத்தில் கொண்டு அவைகளுக்கேற்ப சட்டங்களை இயற்றிக் கொள்ள முடிகிறது.

(iv) மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்கள் அரசியல் அமைப்பின் மூலம் வரையறை செய்யப்பட்டுள்ளமையால் அது எதேச்சதிகாரம் புரிய முடியவில்லை.

(v) கூட்டாட்சி முறை அரசாங்கத்தை ஏற்படுத்துவதால் சிறிய நாடுகள் கூட பலம் பொருந்திய நாடுகளாக மாறிவிடுகின்றன.

குறைகள்

(i) கூட்டாட்சியின் மத்திய அரசாங்கம் ஒற்றையாட்சியின் அரசாங்கத்தை விட பலம் குன்றியது எனப்படுகிறது.

(ii) இரண்டு விதமான அரசாங்கங்கள் காணப்படுவதால் கூட்டாட்சி முறை ஒற்றையாட்சி முறையை விட அதிக செலவுடைய முறையாகக் கருதப்படுகிறது.

(iii) கூட்டாட்சியில் உள்ள பிரதேசங்கள் அல்லது மாநிலங்கள் கூட்டமைவிலிருந்து பிரிந்து போக வாய்ப்புள்ளது. ஒரு சில மாநிலங்கள் ஒன்று சேர்ந்து கொண்டு மத்திய அரசாங்கத்தை எதிர்க்கவும் வாய்ப்புள்ளது.

# 2. அரசியல் அமைப்பின் வகைகள்

## அரசியல் அமைப்பின் பொருளும் தன்மையும்
## (Meaning and Nature of Constitution)

ஓர் அரசின் அரசாங்கம் ஒரு சில சட்டதிட்டங்களின் கீழ் செயல்பட வேண்டும் என்பதும் அந்த அரசின்கண் வாழும் குடிமக்கள் யாவரும் சட்டதிட்டங்களின் அடிப்படையில் உரிமைகள் பெற்று கடமைகளைச் சரிவரச் செய்ய வேண்டும் என்பதெல்லாம் அரசியல் வகுத்துக்காத்த நியதிகளாகும். இத்தகைய சட்டதிட்டங்களின் தொகுப்பே அரசியல் அமைப்பு எனப்படுகிறது. வேறுவிதமாகச் சொன்னால், அரசியல் அமைப்பு என்பது குடிமக்களின் உரிமைகளையும் கடமைகளையும் அரசாங்கத்தின் பிரிவுகளாகிய சட்டமன்றம், ஆட்சித்துறை, நீதித்துறை ஆகியவைகளின் அதிகாரங்களையும் வரம்புகளையும் நிர்ணயிக்கும் நாட்டின் அடிப்படைச் சட்டமாகும். எத்தகைய ஆட்சியை ஒரு நாடு பெற்றிருந்தாலும் சரி அந்த ஆட்சிக்கு ஏற்ற ஒரு அரசியல் அமைப்பு எல்லா நாடுகளிலும் உண்டு.

ஒரு சிறப்பான அரசியல் அமைப்பு பெற்றிருக்க வேண்டிய தகுதிகளாகச் சிலவற்றைக் கூறலாம். முதலாவதாக, தெளிவாகவும் துல்லியமாகவும் அரசியல் அமைப்பில் கூறப்பட்டுள்ள சட்டதிட்டங்கள் வரையப்படல் வேண்டும். இரண்டாவதாக, அரசியல் அமைப்பு இந்திய அரசியல் அமைப்பைப் போல் விரிவாக எழுதப்படாமல் அடிப்படைக் கோட்பாடுகளை மட்டும் கொண்டதாக எழுதப்பட்டு விளக்கங்களை நியாயமான முறையில் காலத்துக்கு ஏற்ப ஏற்படுத்திக் கொள்ளும் உரிமையை நீதிமன்றத்திடமும் சட்டமன்றத்திடமும் அளிக்க வேண்டும். மூன்றாவதாக, அரசியல் அமைப்பை திருத்துவதற்கென ஒரு சிறந்த முறை இருக்க வேண்டும் ஆனால் அரசியல் அமைப்பைத் திருத்துவதற்குக் கையாளப்படும் திருத்த முறை (Amending process) அதிகக் கடினமானதாகவும் இருத்தல் கூடாது. கூடுதல் எளிதானதாகவும் இருத்தல் கூடாது. அப்படியானால்தான் மக்களுக்கு அரசியல் அமைப்பின் மீது நம்பிக்கை ஏற்படும்.

பொதுவாக, அரசியல் அமைப்புக்களை எழுதிய, எழுதாத அரசியல் அமைப்புக்கள் என்றும் நெகிழும், நெகிழா அரசியல் அமைப்புக்கள் என்றும் வகைப்படுத்தலாம். அவை ஒவ்வொன்றையும் இங்கே ஆராயலாம்.

## எழுதிய அரசியல் அமைப்பு
## (Written Constitution)

அரசாங்கத்தின் பிரிவுகளாகிய சட்டமன்றம், ஆட்சித்துறை நீதித்துறை ஆகியவை ஆற்ற வேண்டிய கடமைகளையும் அவைகளின் வரம்புகளையும், குடிமக்களின் உரிமைகளையும் கடமைகளையும் திட்டமிட்டு வேண்டுமென்றே நிர்ணயிக்கும் முறைதான் இன்று உலகின் பல பாகங்களிலும் பரவலாக நடைமுறையில் உள்ளது. இந்த முறையின் அடிப்படையில் வரையப்பட்ட அரசியல் அமைப்பே எழுதிய அரசியல் அமைப்பாகும். அதாவது எழுதிய அரசியல் அமைப்பு காலப்போக்கில் பலவித அரசியல் பொருளாதார சூழ்நிலைகளுக்கு மத்தியில் வளர்ந்தது என்றில்லாமல் திடீரென்று வேண்டுமென்றே ஏற்றுக்கொள்ளப் பட்ட சட்டத்தொகுப்பாகும்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசின் அரசியல் அமைப்பு 1787—ல் பிலடெல்பியாவில் கூடிய சிறப்பு மாநாட்டில் மக்களுடைய பிரதிநிதிகளால் விவாதித்து எழுதப் பட்டதாகும். இந்திய அரசியல் அமைப்பு 1949—ல் இந்திய அரசியல் நிர்ணய சபையால் விவாதித்து விரிவாக எழுதப் பட்டது. பிரான்சின் ஐந்தாம் குடியரசின் அரசியல் அமைப்பு ஒரு சிறு குழுவால் வரையப்பட்டு பிறகு மக்களால் அறுதிப் பெரும் பான்மையுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும். இவ்வாறு அமெரிக்க, இந்திய, பிரான்சு நாடுகளின் அரசியல் அமைப்புகள் எல்லாம் எழுதப்பட்ட அரசியல் அமைப்புக்கு நல்ல எடுத்துக் காட்டுகளாக உள்ளன.

எழுதிய அரசியல் அமைப்பில் மூன்று முக்கிய காரியங்கள் இடம் பெற்றுள்ளன. முதலாவதாக, மக்களுடைய அடிப்படை உரிமைகள் இடம் பெற்றுள்ளன. மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகள் அரசாங்கத்தின் மீது சுமத்தப்பட்ட வரையறைகளாக உள்ளன. இரண்டாவதாக, சட்டமன்றமும் ஆட்சித்துறையும் நீதித்துறையும் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பது பற்றி வரையப்பட்டிருக்கும். மூன்றாவதாக, தேவையான போது அரசியல் அமைப்பைத் திருத்துவதற்கென ஒரு திருத்த முறையும் கூறப்பட்டிருக்கும்.

**எழுதப்பட்ட அரசியல் அமைப்பின் நிறைகுறைகள்**

**நிறைகள்**

(i) எழுதப்பட்ட அரசியல் அமைப்பிற்கு அதிக மதிப்பு அளிக்கப்படுகிறது. அதற்கு விரோதமாக வேறு எந்த ஒரு சட்டமோ அல்லது கட்டளேயோ செயல்பட முடியாது.

(ii) எழுதப்பட்ட அரசியல் அமைப்பைத் திருத்த வேண்டுமாஞல் குறிப்பிட்ட திருத்த முறையைப் பின்பற்றித்தான் திருத்த முடியுமே தவிர ஒரு சிலரின் விருப்பப்படி அரசியல் அமைப்பை மாற்றி அமைத்துக் கொள்ள முடியாது.

(iii) மக்களுடைய அடிப்படை உரிமைகளும் சிறுபான்மையினரின் விருப்பங்களும் பாதுகாக்கப்படுகின்றன.

**குறைகள்**

(i) திருத்தமுறை கடினமானதாக இருப்பதால் மாறுகின்ற சூழ்நிலேகளுக்கு ஏற்றவாறு அரசியல் அமைப்பு இசைந்து கொடுக்க முடிவதில்லே. இதஞல் புரட்சிகள் தோன்ற வாய்ப்புள்ளது.

(ii) அரசியல் அறிவு நிரம்பப் பெற்ற குடிமக்களேக் கொண்ட ஒரு நாட்டிற்கு எழுதிய அரசியல் அமைப்பு பொருத்தமற்றதாகக் காணப்படுகிறது.

## எழுதப்படாத அரசியல் அமைப்பு
## (Unwritten Constitution)

காலப்போக்கில் அரசியல், பொருளாதார சூழ்நிலேக்கேற்ப வளர்ந்த அரசியல் அமைப்பே எழுதப்படாத அரசியல் அமைப்பாகும். சட்டங்கள், நீதிமன்றத்தீர்ப்புகள், வழக்காறுகள், மரபுகள் ஆகியவைகளின் கூட்டுவிளேவே எழுதப்படாத அரசியல் அமைப்பாகும். எழுதப்படாத அரசியல் அமைப்பிற்குச் சிறந்த சான்ருக ஆங்கில அரசியல் அமைப்பைக் கூறலாம்.

ஆங்கில அரசியல் அமைப்பு எந்த ஒரு புத்தகத்திலும் முழுமையாக எழுதி வைக்கப் படவில்லே. எத்தனேயோ நூற்ருண்டுகளாகப் பாராளுமன்றம் இயற்றிய பலசட்டங்கள், நீதிமன்றம் அளித்தப் பல தீர்ப்புக்கள், மக்கள் பின்பற்றிய அநேக பழக்க வழக்கங்கள், வழக்காறுகள் ஆகியவைதான் ஆங்கில அரசின் அமைப்பின் பகுதிகளாகும். இந்திய அல்லது அமெரிக்க நாட்டைப்போல் அரசியல் நிர்ணய சபையின் மூல

மாகவோ அல்லது சிறப்பு மாநாட்டில் வைத்தோ ஆங்கில அரசியல் அமைப்பு திட்டவட்டமாக வேண்டுமென்றே வரையப் படவில்லை. ஆங்கில அரசியல் அமைப்பை வரலாற்றின் விளைவு என்றே கூறவேண்டும்.

எழுதப்படாத அரசியல் அமைப்பின் நிறை குறைகள்

நிறைகள்

(i) எழுதப்படாத அரசியல் அமைப்பைத் திருத்த சிக்கலானமுறை எதுவும் பின்பற்ற வேண்டியதில்லை. அதனால் இந்த அரசியல் அமைப்பு காலத்திற்குத் தக்கவாறு வளர்ந்து புதிய கருத்துக்களை ஏற்றுக் கொள்கிறது.

(ii) நெருக்கடி காலங்களைச் சமாளித்து புரட்சிகளைத் தவிர்க்க எழுதப்படாத அரசியல் அமைப்பு உதவுகிறது.

(iii) மரபு, வழக்காறு ஆகியவைகளின் அடிப்படையில் வளர்ந்த அரசியல் அமைப்பு என்பதால் பழமையில் ஆர்வம் கொண்ட மக்களின் விருப்பங்களை எழுதப்படாத அரசியல் அமைப்பு பூர்த்தி செய்துவிடுகிறது.

குறைகள்

(i) எழுதப்படாத அரசியல் அமைப்பு நிரந்தரமானதல்ல

(ii) வழக்காறுகள் ஏராளமாக இடம் பெற்றிருக்கும் அரசியல் அமைப்பு என்பதால் அவைகளுக்கு விளக்கம் காணுவதில் நீதித்துறைக்கு சிரமம் ஏற்படுகிறது.

(iii) எளிதில் அரசியல் அமைப்பில் மாற்றமோ அல்லது திருத்தமோ ஏற்படுத்தி விடமுடிவதால் பாராளுமன்றம் அதிக அதிகாரம் பெற்றுவிடுகிறது.

எந்த ஓர் அரசியல் அமைப்பையும் முற்றிலுமாக எழுதிய அரசியல் அமைப்பு என்றோ அல்லது முழுவதும் எழுதப்படாத அரசியல் அமைப்பு என்றோ கூறிவிடமுடியாது. ஆங்கில அரசியல் அமைப்பு எழுதப்படாத அரசியல் அமைப்புதான் என்றாலும் அதிலும் எழுதிய பகுதிகளும் பல உள்ளன. அதுபோலவேதான் எழுதிய அரசியல் அமைப்பு இடம்பெறும் நாடுகளில் கூட சில வழக்காறுகள் தோன்றி அவைகளும் அரசியல் அமைப்பின் ஒரு பகுதியாக மாறிவிடுகின்றன. உதாரணமாக, அமெரிக்க நாட்டில் அமைச்சர் குழு தோன்றிய தற்கு வழக்காறுதான் காரணமாகும்.

## நெகிழும் அரசியல் அமைப்பு
## (Flexible Constitution)

ஓர் எளிதான முறையைக் கையாண்டு அரசியல் அமைப்பின் பகுதிகளை மாற்றக்கூடிய அரசியல் அமைப்பை நெகிழும் அரசியல் அமைப்பு என்று கூறலாம். சாதாரணச் சட்டத்தை இயற்றுவதற்கு சட்டசபையில் சாதாரணப் பெரும் பான்மையே தேவைப் படுகிறது. அதுபோலவே அரசியல் அமைப்பைத் திருத்தும் சட்டத்தையும் இயற்ற சாதாரணப் பெரும்பான்மையே போதும் என்றிருந்தால் அந்த அரசியல் அமைப்பை நெகிழும் அரசியல் அமைப்பு என்று கூறலாம்.

இங்கிலாந்தில் பாராளுமன்றம்தான் சாதாரணச் சட்டங்களை இயற்றுகிறது. அதே மன்றம்தான் அரசியல் அமைப்புச்சட்டங்களையும் இயற்றுகிறது. இரண்டுவித சட்டங்களையும் இயற்ற எளிய முறையே பின்பற்றப்படுகிறது. அதாவது, இரண்டு வகை சட்டங்களையும் இயற்ற சாதாரணப் பெரும்பான்மையே போதுமானது. அரசியல் அமைப்பைத் திருத்துவதற்கான சட்டத்தை இயற்றுவதற்கென தனிப்பட்ட முறையில் சிறப்புப் பெரும்பான்மை எதுவும் தேவையில்லை. எனவே, ஆங்கில அரசியல் அமைப்பை நெகிழும் அரசியல் அமைப்பிற்கு உதாரணமாகக் கூறலாம்.

### நெகிழும் அரசியல் அமைப்பின் நிறைகுறைகள்

#### நிறைகள்

(i) அரசியல் அமைப்பை எளிதாகத் திருத்த முடிவதால் நெகிழும் அரசியல் அமைப்பு மாறுகின்ற சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு காலத்தோடு ஒத்துப்போக முடிகிறது.

(ii) நெகிழும் அரசியல் அமைப்பு ஒற்றை ஆட்சி அரசியல் முறைக்குச் சிறந்தது. தன் இஷ்டப்படி மத்திய அரசாங்கம் எந்த அதிகாரத்தையும் பெற்றுக் கொள்ள நெகிழும் அரசியல் அமைப்பே சிறந்தது.

#### குறைகள்

(i) நெகிழும் அரசியல் அமைப்பு நிலையானதல்ல. எளிதான திருத்த முறைக்கு இடமிருப்பதால் அடிக்கடி மாற்றங்கள் ஏற்பட்டு முடிவில் அரசியல் அமைப்பின் அடிப்படையான தோற்றமே மாறிவிட நேரிடும்.

(ii) அரசியல் வளர்ச்சியுறாத இந்தியா போன்ற நாடுகளுக்கு நெகிழும் அரசியல் அமைப்பு ஏற்றதல்ல. காலத்திற்கு ஏற்ற திருத்தங்களுக்கு மாறாக கட்சிக் கேற்ற திருத்தங்களைக் கொண்டுவர நெகிழும் அரசியல் அமைப்பு வாய்ப்பளிக்கிறது.

## நெகிழா அரசியல் அமைப்பு
## (Regid Constitution)

அரசியல் அமைப்பை மாற்றி அமைக்கும் முறை சிக்கலானதாக இருக்குமானால் அந்த அரசியல் அமைப்பு நெகிழா அரசியல் அமைப்பு எனப்படுகிறது. அரசியல் அமைப்பைத் திருத்த வேண்டுமானால் அதற்கான சட்டம் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையுடன் இயற்றப்பட வேண்டும் என்ற சிறப்பு முறை சில நாடுகளில் அமலில் உள்ளது. சாதாரணச் சட்டத்தை இயற்ற சாதாரணப் பெரும்பான்மை போதுமானது. ஆனால் அரசியல் திருத்தச் சட்டத்தை இயற்றச் சிறப்புப் பெரும்பான்மை, வேண்டுமென நிர்ணயிக்கப்பட்டுள்ளது. சிறப்புப்பெரும்பான்மை கிடைப்பது கடினமான காரியம் என்பதால் அரசியல் அமைப்பில் அடிக்கடி மாற்றங்கள் ஏற்படுத்த முடியாது. அமெரிக்க ஆஸ்திரேலிய, சுவிஸ் அரசியல் அமைப்புக்களெல்லாம் நெகிழா அரசியல் அமைப்புக்களாகும். இந்த அரசியல் அமைப்புக்களைத் திருத்த வேண்டுமானால் தனிப்பட்ட முறைகள் கையாளப்படுகின்றன. இந்திய அரசியல் அமைப்பின் சில பகுதிகளை மாற்றி அமைக்க சாதாரணப் பெரும்பான்மை போதுமானது. சில பகுதிகளைத் திருத்த தனிப்பட்ட பெரும்பான்மை தேவைப் படுகிறது. எனவே, இந்திய அரசியல் அமைப்பை நெகிழும் அரசியல் அமைப்பு என்றோ அல்லது நெகிழா அரசியல் அமைப்பு என்றோ திட்டவட்டமாகக் கூறமுடியாது.

### நெகிழா அரசியல் அமைப்பின் நிறைகுறைகள்

#### நிறைகள்

(i) நெகிழா அரசியல் அமைப்பைத் திருத்த சிறப்புப் பெரும்பான்மை தேவைப்படுவதால் அடிக்கடி திருத்தங்கள் கொண்டு வரமுடியாது. அதனால் அரசியல் அமைப்பிற்கு நிலைப்புத் தன்மையும் உறுதித்தன்மையும் உள்ளது எனலாம்.

(ii) நெகிழா அரசியல் அமைப்பு கூட்டாட்சி நாடுகளுக்கு மிகவும் சிறந்தது. மாநில அரசாங்கங்களின் விருப்பங்களைப் பாதுகாக்க மிகவும் உதவுகிறது.

(iii) சிறுபான்மையினரின் உரிமைகளுக்குத் தக்க பாது காப்பை அளிக்க நெகிழா அரசியல் அமைப்பே உதவுகிறது.

குறைகள்

(i) திருத்த முறை கடினமானதாயிருப்பதால் எளிதில் அரசியல் அமைப்பில் மாற்றம் கொண்டுவர முடியாது. அதனுல் அரசியல் அமைப்பு காலத்திற்கு ஏற்ப செயல்பட முடியாது. சில வேளைகளில் அரசியல் அமைப்பின் நெகிழா தன்மையினுல் புரட்சிகள்கூட தோன்ற வாய்ப்பு உண்டு.

(ii) நெகிழா அரசியல் அமைப்பில் சந்தேகங்களோ அல்லது சிக்கல்களோ தோன்றினுல் அவைகளுக்கு விளக்கம் கூறு பவர்கள் நீதிபதிகளேயாவர். இதன் மூலமாக நீதித்துறை அதிக அதிகாரத்தைப் பெற்றுவிடுகிறது. மேலும் நீதிபதிகள் பழமை யில் பித்துடையவர்களாயிருப்பதால் முற்போக்குக் கருத்துக்களை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

# 3. சட்டமன்றம்

## பொருளும் தன்மையும்
## Meaning and Nature

அரசாங்கத்தின் மிக முக்கியமான பிரிவாக சட்டமன்றம் கருதப்படுகிறது. சட்டமன்றம் சட்டங்கள் இயற்றிய பிறகுதான் ஆட்சித்துறை அவைகளை அமல்படுத்த முடியும். நீதித் துறையும் அதன் பிறகுதான் அவைகளுக்கு விளக்கம் தரமுடியும். சட்டமன்றத்தின் தன்மையை உணர அது ஆற்றும் கடமைகளே உதவுகின்றன.

சட்டமன்றத்தின் முதலாவது கடமை சட்டமியற்றுதலாகும். அவசியமற்ற சட்டங்களையும் மிகவும் பழமைவாய்ந்த முக்கியத் துவம் இழந்த சட்டங்களையும் நீக்கவும், தற்கால தேவைக் கேற்ப புதிய சட்டங்களை இயற்றவும் சட்டமன்றம் பொறுப்பேற்றுள்ளது. சட்டமன்றதில் இடம் பெறுகின்றவர்கள் மக்களுடைய பிரதிநிதி களேயாவார்கள். இவர்கள் ஒவ்வொரு சட்டத்தையும் தேவை யான அளவுக்கு விரிவாக விவாதித்து நன்கு பரிசீலனை செய்து கொண்டபிறகே தான் அதை நீக்கவோ அல்லது அதற்குப்பதி லாகப் புதியதோர் சட்டத்தை இயற்றவோ செய்கின்றனர். சில நாடுகளில் உள்ள சட்டமன்றங்கள் வரம்பிலா அதிகாரம் பெற்றுள்ளன. உதாரணமாக, ஆங்கிலநாட்டுப் பாராளுமன்றம் எந்த ஒரு சட்டத்தையும் தடையின்றி இயற்றக் கூடிய அதி காரம் பெற்றுள்ளது. இதிலிருந்து ஆங்கிலேயப் பாராளு மன்றத்தின் மேன்மை நிலையை அறிந்துகொள்ளலாம். ஆங்கிலப் பாராளுமன்றத்தைப் பொறுத்த மட்டில் சாதாரணச் சட்டத் திற்கும் அரசியல் அமைப்புச் சட்டத்திற்கும் இடையே எந்த ஒரு வேறுபாடும் இல்லை. ஆனால் அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளில் சட்டமன்றங்களின் அதிகாரம் அரசியல் அமைப் பின் மூலம் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. இந்த நாடுகளி லெல்லாம் அரசியல் அமைப்பின் மேன்மை நிலை நிறுத்தப் பட்டுள்ளது.

எல்லா மக்களாட்சி நாடுகளிலும் சட்டமன்றம் தேசிய நீதி மீது கட்டுப்பாடு மேற்கொள்கிறது. மக்கள் மீது சுமத்தப்படும்

வரிகளும் அரசாங்கம் மேற்கொள்ளும் எல்லாவகை செலவினங்களும் சட்டமன்றத்தின் இசைவைப் பெற்ற பிறகுதான் அமல் படுத்தப்பட முடியும். பொது நீதி பொதுமக்களிடமிருந்து சேகரிக்கப் படுவதால் அவர்களுடைய பிரதிநிதிகளிடமே அந்த நீதி மீதுள்ள கட்டுப்பாட்டுப் பொறுப்பு கொடுக்கப்படுவது மிகவும் நியாயமான காரியமாகும்.

பாராளுமன்ற ஜனநாயக முறை அமலில் உள்ள நாடுகளில் சட்டமன்றம் ஆட்சித்துறை மீது கட்டுப்பாடு மேற்கொள்கிறது. அமைச்சர் குழு பாராளுமன்ற உறுப்பினர்கள் மத்தியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு பாராளுமன்றத்திற்கே பொறுப்புடையதாக செயல்படுகிறது. அதாவது சட்டமன்றத்தின் பெரும் பான்மையைப் பெற்றிருக்கும் வரைதான் அமைச்சர் குழு பதவியில் இருக்கலாம் என்பதாகும். கேள்வி நேரம், ஒத்தி வைப்பு பிரேரணை, நம்பிக்கையில்லாத் தீர்மானம் போன்றவைகளின் மூலமாக சட்டமன்றம் ஆட்சித்துறை மீது கட்டுப்பாடு மேற்கொள்கிறது. இந்த வழிமுறைகளைக் கையாளுவதின் மூலம் அரசாங்கத்தின் செயல்களில் உள்ள குறைபாடுகளை மக்களுக்குத்தெரியப்படுத்தவும். மக்களின் விருப்பத்திற்கு எதிராகச் செயல்படும் அமைச்சர் குழுவைப் பதவியிலிருந்து நீக்கவும் முடிகிறது.

சட்ட மன்றம், ஆட்சித்துறைப் பணியையும் நீதித்துறைப் பணியையும் கூட ஓரளவிற்குச் செய்கிறது எனலாம். அமெரிக்க நாட்டில் செனட் (சட்டமன்றத்தின் மேல் சபை) குடியரசுத் தலைவர் செய்யும் கூட்டாட்சிக்கான பதவி நியமனங்களுக்கும், வெளிநாடுகளுடன் ஏற்படுத்தும் உடன்படிக்கைகளுக்கும் ஒப்புதல் அளிக்கும் உரிமை பெற்றுள்ளது. இதைச் சட்டமன்றம் செய்யும் ஆட்சித் துறைப்பணிக்கு உதாரணமாகக் கூறலாம். ஆங்கில பாராளுமன்றத்தின் மேல் சபையாகிய பிரபுக்கள் சபை ஆங்கில நாட்டின் மேலான மேல் முறையீட்டு மன்றமாக உள்ளது. அமெரிக்க செனட் சபையும் இந்திய பாராளுமன்றமும் நாட்டின் உயர் அதிகாரிகளை (குடியரசுத் தலைவர், நீதிபதிகள் போன்றவர்களை) குற்ற விசாரணை செய்து பதவிலிருந்து நீக்க உரிமை பெற்றுள்ளன. இவைகளைச் சட்டமன்றம் செய்யும் நீதி மன்றம் சார்ந்த பணிக்கு உதாரணமாகக் கூறலாம்.

நாட்டின் வெளி நாட்டுக் கொள்கை மீதும் சட்டமன்றம் கட்டுப்பாடு மேற்கொள்கிறது. வெளி நாடுகளுடன் கொண்டுள்ள

தொடர்பில் ஏதாவது தகராறு ஏற்படுமாயின் உடன் தானே சட்டமன்றம் அதற்குக்காரணமாக இருந்த கொள்கையைக் குறை கூறிவிடுகிறது. மேலும் போர் முரசு கொட்டவோ அல்லது அமைதி உடன்படிக்கை ஏற்படுத்தவோ சட்டமன்றத்தின் சம் மதம் பெற்ருக வேண்டும் என்றுள்ளது. இவ்வாறு சட்டமன்றம் வெளி நாட்டுக் கொள்கை மீது திறம்பட்ட கட்டுப்பாட்டினை மேற் கொள்கிறது.

## இரு மன்ற முறையும் ஒரு மன்ற முறையும்
## (Bicameral and Unicameral Systems)

இரு மன்றங்களையும் உடைய சட்டமன்றங்களும் ஒரே ஒரு மன்றத்தை மட்டும் உடைய சட்டமன்றங்களும் உள்ளன. பதி னெட்டாம் நூற்ருண்டில் கொஞ்சகாலம் ஒரு மன்ற முறையே சிறந்த சட்டமன்ற முறையாகக் கருதப்பட்டுவந்தது. ஆனுல் காலப்போக்கில் ஒரு மன்ற முறையைக் காட்டிலும் இருமன்ற முறையே அதிகப்பயனுடையது என்னும் உண்மையை அனுபவம் நிரூபித்துவிட்டது. எனவே, பல நாடுகளிலும் இன்று இருமன்ற முறையையே காணமுடிகிறது. இரண்டு முறைகளிலும் நிறை களும் குறைகளும் உள்ளன. இரு முறைகளிலும் காணப்படும் நிறை குறைகளைச் சீர்தூக்கிப் பார்த்த பிறகுதான் எந்த நாட்டிற்கு எந்த முறை சிறந்தது என்று கூறமுடியும்.

a) இரு மன்ற முறைக்கு ஆதரவான கருத்துக்கள் (Arguments in Support of Bicameral Legislature)

இருமன்ற முறைக்கு ஆதரவாகக் கூறப்படும் அநேகக் கருத்துக்களுள் ஒன்று என்னவெனில், இரண்டாவது மன்றம் ஒரு மன்ற சட்ட மன்றத்தின் வல்லாட்சிப் போக்கை தடுத்து நிறுத்த உதவுகிறது என்பதாகும். பிரைஸ் என்பவருடைய கருத்து என்னவெனில், ஒரே மன்றம் மட்டுமே இருக்குமானுல் அது எதேச்சாதிகாரமாக நடந்து கொள்வது இயற்கையே. அதனுல் இருமன்றங்கள் இருக்குமானுல் ஒன்றையொன்று கட்டுப் படுத்திக் கொள்ளும் என்பதாகும். ஆக்டன் பிரபு மக்களுடைய சுதந்தரத்தைப் பாதுகாக்க இரண்டாவது மன்றம் அத்தியாவசியமானதாகும் என்று கருதுகிருர்.

இரண்டாவதாக, சட்டமன்றம் அவசரப்பட்டு முடிவு செய்து விடும் காரியங்களைத் தவிர்க்கவும், அல்லது மறுபரிசீலனை செய்யவும் இரண்டாவது மன்றம் பெரிதும் உதவுகிறது. மக்கள்

மன்றமாக விளங்கும் கீழ் மன்றத்திற்கு எல்லா சட்ட வரைவு களையும் விளக்கமாக ஆராய்வதற்குத் தேவையான நேரம் கிடையாது என்பதால் நன்கு பரிசீலனை செய்யாமல் கூட சில சட்டங்களை இயற்றிவிடலாம். அவ்வாறு இயற்றி விடுகின்ற சட்டங்கள் நன்கு பரிசீலனை செய்துகொள்வதற்கான சாவகாசம் கிடைக்குமாறு செய்கிறது இரண்டாவது மன்றம். கீழ் மன்றம் இயற்றிய சட்டமறைவு மேல் மன்றத்தாலும் நிறை வேற்றப்பட வேண்டும் என்றுள்ளது. மேல் மன்றம் விரும்பாத ஒரு சட்ட வரைவை கால தாமதப் படுத்த மேல் மன்றத்திற்கு உரிமை உள்ளது. சில மேல் மன்றங்கள் கீழ்மன்றம் நிறைவேற்றிய நீதி சட்ட வரைவைக் கூட முற்றிலுமாக மாற்றி அமைக்க உரிமை பெற்றுள்ளன. (உதாரணமாக, அமெரிக்க செனட்சபை நீதி சட்ட வரைவின் மீது பெற்றுள்ள உரிமையைக் கூறலாம்). இரண்டாவது மன்றம் ஏற்படுத்தும் காலதாமதம் நல்ல சட்டங் கள் தோன்ற வழி வகுக்கிறது என்பதில் ஐயமில்லை.

மூன்ருவதாக, இரு மன்றங்களுடைய சட்டமன்றத்தில் சிறு பான்மையினர்களுக்கு வேண்டிய அளவுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கும் வகையில் ஏதாவது ஒரு மன்றத்தில் வசதி செய்து தரப்பட்டுள்ளது. கீழ் மன்றத்தில் மக்கள் தொகை அடிப் படையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுகிறது. எனவே, கீழ் சபையில் சிறு பான்மையினருக்கும் பொருளாதார, கலாச்சார அடிப்படையில் எழுகின்ற தனிப்பட்ட விருப்பங்களுக்கும் தகுந்த பிரதிநிதித்துவம் அளிக்கமுடியாது. ஆனல் இரண்டா வது மன்றம் என ஒரு மன்றம் தனியாக இருக்குமானல், அப் பேற்பட்ட விருப்பங்களுக்குத் தனிப்பட்ட முறையில் பிரதிநிதித் துவம் அளிக்கமுடியும்.

நான்காவதாக, தேர்தலில் போட்டியிட்டு தோற்றுவிட்டதால் சட்ட மன்றத்திற்கு வரமுடியாதுபோன மிகவும் திறமையான நபர்களின் பணியைப் பெறுவதற்கு இரண்டாம் மன்றம் பெரிதும் உதவுகிறது. தனிப்பட்ட தொகுதிகளை நிறுவி அவைகளின் மூலமாக எளிதாக அவர்களுக்குச் சட்டமன்றத்தில் இடமளிக்க முடிகிறது.

ஐந்தாவதாக, சட்டமியற்றலில் வேலைப்பகுப்பு முறையைக் கையாள இருமன்றமுறை பயனளிக்கிறது. தற்கால அரசாங்கங் களின் செயல்கள் பன்மடங்கு பெருகியுள்ளது. எல்லாச் செயல் களையும் செய்ய ஒரு மன்றத்தால் இயலாது. எனவே, இரண்டாவது மன்றம் ஒன்று இருக்குமானல் கீழ் மன்றத்தின் பளு ஓரளவிற்காயினும் குறைந்துவிடுகிறது, மேலும் கீழ்மன்றம்

அதிக முக்கியத்துவம் வாய்ந்த காரியங்களுக்குக் கூடுதல் நேரம் செலவு செய்து சட்டமியற்ற முடிகிறது.

கடைசியாக, இருமன்றமுறை கூட்டாட்சி நாடுகளுக்கு மிகவும் சிறந்ததாகக் காணப்படுகிறது. கூட்டாட்சி என்பது சுய உரிமைகளை விட்டுக் கொடுக்காத நிலையில் சுயேச்சையான பல நாடுகள் சேர்ந்து ஏற்படுத்திக் கொண்ட கூட்டமைவாகும். கூட்டாட்சியில் உள்ள நாடுகளின் சுய உரிமைகளையும் சுயேச்சைத் தன்மைகளையும் பாதுகாக்க இரண்டாவது மன்றம் அத்தியாவசியமானதாகும். கீழ் மன்றம் மக்களுக்கு மொத்தமாகப் பிரதிநிதித்துவம் அளிக்கையில் மேல்மன்றம் மாநிலங்களுக்குச் சமபிரதிநிதித்துவம் அளிக்கிறது. கீழ்மன்றம் தேசிய அடிப்படையிலும் மேல் மன்றம் மாநில அடிப் படையிலும் செயல்படுவதால் கூட்டாட்சியின் அந்தஸ்தும் அஸ்திவாரமும் பாதுகாக்கப் படுகின்றன.

b) இருமன்ற முறைக்கு எதிரான கருத்துக்கள் (Arguments against Bicameral Legislature)

பலர் இருமன்றமுறையைக் காட்டிலும் ஒரு மன்ற முறையே அதிகப் பயனுடையது எனக்கருதுகின்றனர். ஒரு மன்றம் இன்னொரு மன்றம் இயற்றிய சட்டவரைவினை அப்படியே ஏற்றுக் கொண்டு விட்டால் இரண்டாம் மன்றம் என்று ஒரு தனி மன்றம் அவசியமில்லை. அதே நேரம் இரண்டாம் மன்றம் முதல் மன்றம் இயற்றுகின்ற சட்டவரைவினை நிராகரித்தால் அது வேண்டாத செயலாகவும் கருதப்படுகிறது. எனவே, இரண்டாம் மன்றம் என ஒரு மன்றம் தேவையில்லை என்று கருதப் படுகிறது. பேராசிரியர் லாஸ்கியும் இரண்டாம் மன்றத்திற்கு எதிரான கருத்தினையே தருகிறார். முதல் மன்றத்திலேயே வேண்டிய அளவிற்கு சட்டவரைவுகள் குழுக்கள் மூலமாகப் பரிசீலனை செய்யப்பட்டுத்தான் மேல் மன்றத்திற்கு அனுப்பி வைக்கப் படுகின்றன. எனவே, அவசரப்பட்டு இயற்றி விடுகின்ற சட்டங்களைத் தடுத்து நிறுத்துவதற்கு என இரண்டாவது மன்றம் ஒன்று தேவையில்லை என்று லாஸ்கி கருத்து தெரிவிக்கிறார்.

இரண்டாவதாக, இரு மன்றங்களும் ஒன்றுக்கொன்று எதிராகச் செயல்பட்டால் பலவிதமான சிக்கல்களும் சட்ட மியற்றுவதில் அவசியமற்ற முடக்கங்களும் ஏற்பட்டுவிடுகின்றன. சட்டம் என்பது சட்டாக்கம் பெற்ற மக்களுடைய விருப்பாகும். ஒரே நேரத்தில் ஒரே காரியத்தின் மீது மக்களுக்கு இருவிதமான

விருப்புக்கள் இருக்கமுடியாது. எனவே, மக்களுடைய விருப்பை பிரதிபலிக்கும் சட்டமன்றம் ஒரு மன்றம் மட்டும்தான் பெற்றிருக்க வேண்டும் எனப்படுகிறது.

மூன்றாவதாக, மேல் மன்றத்தில் இடம் பெறுபவர்கள் பெரும்பாலும் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாயிருப்பதில்லை என்பதால் அவர்கள் முறைபோக்கான பொருளாதார, சமூக, அரசியல் கொள்கைகளை எதிர்க்கின்றனர். எனவே, நாட்டின் வளர்ச்சியை இரண்டாம் மன்றம் பெரிதும் பாதிப்பதாக உள்ளது.

நான்காவதாக, சிறுபான்மையினரின் விருப்பங்களைப் பேணவோ அல்லது கூட்டாட்சியில் உள்ள மாநிலங்களின் நலன்களைப் பேணவோ தனிப்பட்ட ஒரு மன்றம் தேவையில்லை எனப்படுகிறது. ஏனெனில் கட்சி முறையின் வளர்ச்சியால் இன்றைய அரசியல் சூழ்நிலையில் கட்சிகள் சிறுபான்மையினரின் விருப்பங்களையும் மாநிலங்களின் நலன்களையும் புறக்கணித்து விட்டு அதற்குப் பதிலாகக் கட்சியின் விருப்புக்களுக்கே முதலிடமும் முக்கியத்துவமும் அளிக்குமாறு உறுப்பினர்களைக் கோருகின்றன. மேலும் சிறுபான்மையினர்களின் விருப்புக்களையும் மாநிலங்களின் நலன்களையும் அரசியல் அமைப்பின் மூலமாகவும் நீதித்துறையின் மூலமாகவும் சிறந்த முறையில் பாதுகாத்திடமுடியும்.

கடைசியாக, நல்ல தரமுடைய ஓர் இரண்டாம் மன்றத்தை ஏற்படுத்துவது மிகவும் கடினமான ஒரு செயலாகும். ஆங்கிலேய பாராளுமன்றத்தின் மேல் சபையாகிய பிரபுக்கள் சபை பரம்பரை அடிப்படையில் அமைக்கப்படுவதால் அது மக்களாட்சிக் கருத்துக்கு எதிரான ஒரு மன்றமாக விளங்குகிறது என்றே சொல்ல வேண்டும். நியமன அடிப்படையில் நிறுவப்படும் கானடிய நாட்டின் மேல் சபையும் ஜனநாயக முறையைத் தழுவியதாக இல்லை. ஆனால் தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் மன்றம் கீழ்மன்றத்திற்குச் சமமான அந்தஸ்தைப் பெற்று விடுகிறது. இரண்டு மன்றங்களும் சம அதிகாரத்தையும் சம அந்தஸ்த்தையும் பெற்றிருந்தால் மக்களால் ஏற்படுத்தப்பட்ட பொதுச்சபையாகிய கீழ்ச்சபை மதிப்பிழந்துவிடும்.

மேற்கூறிய காரியங்களைச் சற்று ஆராய்ந்தால் ஒரு சட்ட மன்றத்தில் இருமன்றங்கள் தேவையில்லை என்றேதோன்றுகிறது.

ஒரு மன்றமுறைக்கு ஆதரவான கருத்துக்கள் (Arguments in favour of Unicameral Legislature)

ஒரே வேலையை இரண்டு மன்றங்கள் செய்வதால் ஏற்படும் காலவிரயமும் சட்டமியற்றுவதில் உண்டாகும் முடக்கங்களும் சிக்கல்களும் ஒருமன்ற முறையில் ஏற்படுவதில்லை.

முற்போக்கான சட்டங்களை இயற்றுவதில் இரு மன்ற முறையில் தோன்றும் தடை எதுவும் ஒரு மன்ற முறையில் ஏற்படுவதில்லை. பழமையில் பித்துடையவர்களும் சுயநலமிகளு மான இரண்டாம் மன்ற உறுப்பினர்கள் ஒரு மன்றமுறையில் தோன்ற மாட்டார்கள். ஏனெனில் மன்ற உறுப்பினர்கள் யாவரும் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களே ஆவார்கள்.

சட்டமியற்றும் பொறுப்பு எந்த மன்றத்தைச் சேர்ந்தது என்று இரு மன்றமுறையில் திட்டவட்டமாகக் கூறமுடியாது. எனவே, ஏதாவது குறைபாடுகள் தோன்றினுல் எந்த மன்றத் தைக் குறை கூறுவது அல்லது அந்தக் குறைபாடு ஏற்படுவதற்கு எந்த மன்றம் பொறுப்பானது என்பதைத் தெரிந்து கொள்வது மிகவும் கடினம். ஆனுல் ஒரு மன்ற முறையில் இந்த பிரச்னைக்கே இடமில்லை. இருப்பது ஒரே மன்றம் என்பதால் நன்மைக்கும் தீமைக்கும் அதுவே பொறுப்பானது.

d) ஒரு மன்ற முறைக்கு எதிரான கருத்துக்கள். (Argument against Unicameral Legislature)

பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்ற ஒரு கட்சி ஆட்சி செய்யும்பொழுது சட்டமன்ற எதேச்சாதிகாரமான முறையில் நடந்து கொள்ள ஒருமன்ற முறை வழிவகுக்கிறது. சட்டமன்ற வல்லாட்சிப் போக்கில் சட்டமியற்றினுல் குடிமக்களின் உரிமைக்கே சில வேளை ஆபத்து ஏற்படலாம்.

முற்போக்கான கொள்கைகளை ஏற்படுத்துகிறேம் என்ற தோரணையில் தீய சட்டங்களையும் எந்த வித முன் ஆலோசனையு மின்றி இயற்றிவிட ஒருமன்ற முறையில் வாய்ப்பு உண்டு.

தவறுதலாக அவசரப்பட்டு ஒரு சட்டத்தை இயற்றிவிட்டால் கூட அந்தச்சட்டம் தவறு என்பதை உணரவோ அல்லது தவறு என்று உணர்ந்த பிறகுகூட அதனை மறுபரிசீலனை செய்வதற்கு ஒரு மன்ற முறையில் வாய்ப்பே இல்லை.

ஒருமன்ற முறையில் அவசரப்பட்டு இயற்றிவிடப்படுகின்ற சட்டங்களால் புரட்சிகூட ஏற்படலாம். இருமன்ற முறையில்

இரண்டாம் மன்றம் தடையாக இருப்பதால் கீழ்மன்றம் அவசரப் பட்டு சட்டங்கள் இயற்றுவது தடை செய்யப்படுகிறது.

இருமன்ற முறையின் நன்மை தீமைகளையும் ஒருமன்ற முறையின் நன்மை தீமைகளையும் ஆராயுமிடத்து இருமன்ற முறையே சிறந்ததாகத் தோன்றுகிறது.

## மன்ற அமைப்பு
## Organisation of the House

(a) மேல் மன்றம் (Upper House)

சட்டமன்றத்தின் மேல் மன்றத்தைப் பொறுத்த வரையில் அதன் அமைப்பு எவ்வாறு இருக்க வேண்டும் என்று திட்ட வட்டமாகக் கூறுவதற்கில்லை. தற்கால அரசுகளில் காணப்படும் மேல்மன்றங்களின் அமைப்பில் பலவித மாறுபாடுகளைக் காணலாம். மேல்மன்றத்தை அமைப்பதில் பொதுவாக மூன்று முறைகள் அமலில் உள்ளன. இந்த முறைகளில் ஏதாவது ஒரு முறையையோ அல்லது இரண்டு முறைகளையோ பின்பற்றி மேல்மன்றத்தை அமைக்கலாம்.

முதலாவது முறை பரம்பரையின் அடிப்படையில் மேல் மன்றத்தை அமைத்தலாகும். ஆங்கிலேய நாட்டில் பிரபுக்கள் சபையில் 90 சதமானம் உறுப்பினர்கள் பரம்பரையாக உறுப்பினர் பதவியைப் பெறும் பிரபுக்களாவார்கள். இந்த முறை வரலாற்றின் விளைவாகும். பாராளுமன்றத்தை அரசர்கள் கூட்டியபோது முன்னால் இருந்த பிரபு உறுப்பினரை வரவழைப் பதும் அல்லது ஒரு வேளை அந்த பிரபு இறந்து விட்டால் அவரின் மூத்த மகனை அழைப்பதும் வழக்கம். காலப்போக்கில் இந்த வழக்கம் ஓர் உரிமையாக மாறி இன்றைக்கு ஏறக்குறைய 90% மேல் மன்ற உறுப்பினர்களும் ஆங்கில நாட்டில் பரம்பரையின் அடிப்படையில் வந்த பிரபுக்களேயாவர். மீதி உறுப்பினர்கள் வாழ்க்கை முழுவதற்கும் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்ட சட்ட பிரபுக்கள், மதபிரபுக்கள், பெண்பிரபுக்கள், அரச வம்சத்தைச் சேர்ந்த இளவரசர்கள் ஆவார்கள். பரம்பரையின் அடிப் படையில் அமைக்கப்பட்ட இந்த மேல் மன்றம் மக்களாட்சிக் கருத்துக்கு எதிரான தொன்றாக உள்ளது.

இரண்டாவது முறை நியமன முறையாகும். இந்த முறைப்படி மேல் மன்ற உறுப்பினர்கள் செயற்குழுவால் (ஆட்சித் துறை) நியமிக்கப்படுகின்றனர். மேல் மன்றத்தின் சிறப்பு யாதெனில் திறமையான தலைவர்களுக்கு சட்டமியற்றுவதில் பங்கு அளிக்க வேண்டும் என்பதே. தேர்தல் மூலம் ஆற்றல்

மிகுந்த அனுபவசாலிகளை மன்றத்தில் இடம்பெறச் செய்வது கடினமானால் நியமனம் மூலம் அவர்களை மன்றத்தில் இடம்பெறச் செய்துவிட முடிகிறது. கானடா நாட்டின் மேல்மன்றமாக விளங்கும் செனட்சபை நியமன முறையில் அமைக்கப்படும் மேல்மன்றத்திற்கு உதாரணமாக விளங்குகிறது.

மூன்ருவது முறையாகத் தேர்தல் முறையைக் கூறலாம். தேர்தல் முறையில் இருமுறைகள் உள்ளன. ஒன்று நேரடித் தேர்தல்; இன்னென்று மறைமுகத் தேர்தல். அமெரிக்க, ஆஸ்திரேலிய நாடுகளில் மேல்மன்ற உறுப்பினர்கள் நேரடியாக மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நேரடித் தேர்தலால் ஏற்படும் தீமை யாதெனில், இருமன்றங்களும் சம அந்தஸ்தைப் பெற்று, அதனுல் ஒன்றுக்கொன்று போட்டியும், இரண்டிற்கும் இடையே வீண் தகராறுகளும் சிக்கல்களும் ஏற்பட்டு முடிவில் சட்டமன்ற முடக்கங்கள் தோன்றிவிடுகின்றன.

இந்தியப் பாரளுமன்றத்தின் மேல்சபை மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறது. பிரான்ஸில் நான்காவது குடியரசில் மேல்சபை மறைமுகமாகவே தேர்ந்தெடுக்கப்பட்டது. நேரடித் தேர்தலைவிட மறைமுகத்தேர்தல் மிகவும் மோசமான முறை எனச் சிலர் கூறுகின்றனர். காரணம் மறைமுகத் தேர்தல் லஞ்ச ஊழல் நடைபெற ஏதுவாகும் என்று எண்ணுகின்றனர். இந்திய மேல்சபையில் நியமனமுறையின் மூலமும் சில அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். திறமை மிகுந்த அனுபவசாலி களுக்கு அரசாங்கப் பொறியை இயக்குவதில் இடமளிக்க வேண்டும் என்பதனுல் இருமுறைகளையும் (மறைமுகத் தேர்தல் + நியமன முறை) பின்பற்றி இந்திய மேல்சபை அமைக்கப்படுகிறது.

மேல்சபையை அமைப்பதில் இந்த முறைதான் சிறந்தது என்று எந்த ஒரு முறையையும் திட்டவட்டமாகக் கூறுவதற் கில்லை. எல்லா முறைகளையும் ஆராய்ந்தால் பரம்பரை அடிப்படையில் ஒரு மன்றத்தை அமைப்பது அநாகரிகமான செயலாகவே தோன்றுகிறது. மற்ற முறைகளில் எந்த முறையைப் பின்பற்றுவது என்பது ஒவ்வொரு நாட்டின் அரசியலையும்பொறுத்தது.

(b) கீழ்மன்றம் (Lower House)

மேல்மன்றத்தைக் காட்டிலும் கீழ்மன்றத்தில் அங்கத்தினர் களின் எண்ணிக்கை அதிகமாகவே உள்ளது. எல்லா நாடு களிலும் கீழ்மன்றம் ஏறக்குறைய ஒரே மாதிரியாகவேதான் காணப்படுகிறது. கீழ்மன்றத்தில் உள்ள அங்கத்தினர்கள் பெரும்பாலும் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படு

கின்றனர். எனவேதான் கீழ்மன்றம் பொதுமக்கள் சபை என அழைக்கப்படுகிறது. இதிலிருந்து மேல்சபையைக் காட்டிலும் கீழ்ச்சபை அதிக முக்கியத்துவம் பெற்றிருப்பது விளங்கும்.

கீழ்மன்றத்தின் அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கை நாட்டுக்கு நாடு வேறுபட்டுக் காணப்படுகிறது. அளவில் ஒரு கீழ்மன்றம் பெரிதாக இருக்க வேண்டுமா அல்லது சிறியதாக இருக்க வேண்டுமா என்பது அந்தந்த நாட்டைப் பொறுத்து அமைகிறது. நாடு பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு தொகுதியும் ஒரு பிரதிநிதியைத் (கீழ்மன்ற உறுப்பினர்) தேர்ந்தெடுக்கிறது. அங்கத்தினர்களுடைய எண்ணிக்கை பெருக வேண்டுமானுல் தொகுதிகளின் எண்ணிக்கையும் பெருக வேண்டும். தொகுதிகளின் எண்ணிக்கை குறைந்தால் மன்றத்தின் அளவும் சிறியதாகிவிடும். மேல்மன்றம் சிறந்த மன்றமாகச் செயற்பட 250-க்கு மேற்படாத எண்ணிக்கை யுடைய அங்கத்தினர்களைக் கொண்ட மன்றமாக இருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. அதேநேரத்தில் கீழ்மன்றம் அதைவிடப் பெரிதாக இருக்க வேண்டும் என்பதால் 500 அங்கத்தினர்கள்வரை அனுமதிக்கப்படுகின்றனர். ஹெர்மன் பைஃனர் தற்கால அரசுகளிலெல்லாம் கீழ்மன்றம் 800 அங்கத்தினர்களைக் கொண்டதாக இருப்பது நல்லது என்னும் கருத்தினை வெளியிட்டுள்ளார்.

எவ்வளவு காலம் ஒரு தடவை தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் பதவியில் நீடிக்கலாம் என்பது அடுத்த பிரச்சினையாக உள்ளது. பிரதிநிதித்துவ அடிப்படையில் ஆராய்ந்தால் அங்கத்தினர்களின் பதவிக்காலம் குறுகிய காலமாக இருத்தல் நல்லது எனத் தோன்றுகிறது. திறமையின் அடிப்படையில் ஆராய்ந்தால் பதவிக்காலம் நீண்ட காலமாக இருத்தல் நல்லது எனத் தோன்றுகிறது. திறமையான அரசாங்கத்தை ஏற்படுத்துவதற்காகச் சுய ஆட்சியை விட்டுக் கொடுக்க முடியாது. எனவே, பிரதிநிதிகளின் பதவிக்காலம் மிகக் குறுகியதாகவும் இல்லாமல் மிகவும் நீண்டதாகவும் இல்லாமல் இருப்பது நல்லது. பதவிக்காலம் மிகவும் நீண்டதாக இருக்குமானுல் சட்டமன்றம் பொதுமக்கள் கருத்தைப் பிரதி பலிக்காமல் தன்னுடைய சுய விருப்பங்களுக்கு இடம் கொடுத்து விடும். அதனுல் மக்களாட்சிக்கே ஆபத்து ஏற்பட்டுவிடலாம். அதே நேரத்தில் அங்கத்தினர்களின் பதவிக்காலம் மிகக் குறுகியதாக இருக்குமானுல் சட்டமியற்றுவதற்கான அனுபவத் தையும் தேவையான நுணுக்கங்களையும் பெற வாய்ப்பில்லாமல்

போய்விடும். பொதுவாகக் கீழ்மன்ற உறுப்பினர்களின் பதவிக்காலம் நான்கு ஆண்டுகள் என்றோ அல்லது ஆறு ஆண்டுகள் என்றோ நிர்ணயம் செய்யப்படுகிறது. பேராசிரியர் லாஸ்கி குறைந்தது நான்கு ஆண்டுகள் எனவும், அதிகபட்சம் ஐந்து ஆண்டுகள் எனவும் ஒரு சட்டமன்றத்தின் காலவரையறை நிர்ணயிக்கப்படவேண்டும் என்கிறார். ஹெர்மன் பைஃனர் சட்டமன்றத்தின் பதவிக்காலம் நான்கு ஆண்டுகளாக இருத்தல் வேண்டும் என்கிறார்.

சட்ட மன்றத்தின் இரு மன்றங்களும் அடிப்படை அமைப்பிலும் அந்தஸ்திலும் மாறுபட்டிருக்க வேண்டும். இரண்டு மன்றங்களும் ஒரே மாதிரியாக இருக்குமானால் இரண்டாம் மன்றத்தின் முக்கியத்துவமும் நிறைகளும் இல்லாமலாகிவிடும். இரண்டு மன்றங்களும் ஒரே வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப் பட்டு ஒரே அளவு பதவிக்காலமும் பெற்றிருந்தால் அவை இரண்டும் இரு மன்றங்களாகச் செயற்படாமல் ஒரே மன்றத் தின் இரு குழுக்கள் போலவேதான் செயற்படும். இருமன்ற முறையின் அந்தஸ்தைப் பெற இருமன்றங்களும் வெவ்வேறு அடிப்படையில் அமைக்கப்படல் வேண்டும். ஒரு மன்றத்தின் அங்கத்தினர்கள் கூடுதல் பதவிக்காலத்தைப் பெற்றிருக்க வேண்டும். அவர்கள் பெரிய தொகுதிகளைப் பிரதிநிதித்துவப் படுத்த வேண்டும். உயர் தகுதிகளின் அடிப்படையில் அவர் களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். மேலும், அவர்கள் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இப்பேர்ப்பட்ட அங்கத்தினர்களைக் கொண்ட மன்றம் கீழ்மன்றமாக அமைய வேண்டும்.

## இரு மன்றங்களின் அதிகாரமும் உரிமையும்
## (Right and Authority of Both Houses)

இருமன்ற முறையில் இரு மன்றங்களும் பொதுவாகச் சம அதிகாரத்தையும் சம அந்தஸ்தையும் அனுபவிக்க வேண்டும் என்றுள்ளது. ஒரு சட்டவரைவு இரண்டு மன்றங்களில் எந்த மன்றத்திலும் துவக்கம் பெறலாம். அப்படி ஒரு சபையில் துவக்கம் பெற்ற சட்டவரைவு இருமன்றங்களிலும் ஒரேவிதமான நடைமுறைகளின் மூலமாகவே நிறைவேற்றப்படுகிறது. இரண்டு மன்றங்களின் இணக்கத்தையும் பெறுமல் எந்த ஒரு சட்டவரைவும் சட்டமாக முடியாது. எந்த ஒரு சபைக்கும் அடுத்த சபை இயற்றிய சட்டவரைவுக்குத் திருத்தம் கூற உரிமை உண்டு. இரண்டு சபைகளும் சம்மதித்த பிறகே எந்த ஒரு சட்டவரைவும் சட்டமாகிறது. நிதிச் சட்டவரைவைப்

பொறுத்தவரையில் இரண்டு சபைகளுக்கும் சம அதிகாரம் கொடுக்கப்படவில்லை. கீழ்ச்சபைக்கு நிதிமீது அதிக அதிகாரமும் கட்டுப்பாடும் கொடுக்கப்பட்டுள்ளது. எல்லா நிதிச் சட்ட வரைவுகளும் கீழ்மன்றத்திலேயே துவக்கம் பெறுகின்றன.

ஆங்கில நாட்டுப் பிரபுக்கள் சபை நிதிச் சட்ட வரைவினைத் துவக்கவும் முடியாது; திருத்தவும் முடியாது. பிரான்ஸில் 1875 ஆம் ஆண்டு அரசியல் அமைப்பின்கீழ் நிதிச் சட்ட வரைவு கீழ்ச் சபையில் துவக்கப்பட வேண்டும் என்பதைத் தவிர மற்றப்படி இரு சபைகளும் சம அதிகாரம் பெற்று விளங்கின. ஆனால் நடைமுறையில் கீழ்ச் சபையைவிட மேல்சபைக்குக் குறைந்த அதிகாரமே பிரயோகிக்க முடிந்தது. நான்காவது குடியரசில் நிதிச் சட்ட வரைவு கீழ்மன்றத்தில் துவக்கம் பெற்று மேல் மன்றத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டது. மேல்மன்றம் அதன் மீது தனக்குள்ள அபிப்பிராயத்தை மட்டும் தெரிவிக்க முடிந்தது. இந்தியாவில் நிதிச் சட்ட வரைவுகள் மக்கள் சபையில் மட்டும் தான் துவக்கம் பெற முடியும். மாநிலச் சபை (மேல் சபை) அந்தச் சட்ட வரைவுமீதுள்ள தன்னுடைய கருத்துகளைப் பதினான்கு நாள்களுக்குள் மக்கள் சபைக்கு அனுப்பி வைக்கவேண்டும். பதினான்கு நாள்களுக்குள் தனது பரிந்துரைகளை மேல்சபை கீழ்ச்சபைக்கு அனுப்பிவைத்தாலும் சரி அனுப்பி வைக்கா விட்டாலும் சரி கீழ்ச்சபையின் தீர்மானமே முடிவானது. ஆங்கில நாட்டில் பிரபுக்கள் சபை நிதிச் சட்ட வரைவை ஒரு மாத காலத்திற்குக் காலதாமதப்படுத்தலாம். அமெரிக்காவில் செனட் (மேல்சபை) சபையில் சட்டவரைவு துவக்கம் பெற முடியாது என்றாலும் பிரதி நிதிகள் சபை (கீழ்ச்சபை) இயற்றிய நிதிச் சட்ட வரைவினைத் தன் விருப்பப்படி திருத்தி அமைக்க செனட் சபை குழு உரிமையும் பெற்றுள்ளது என்பது குறிப் பிடத்தக்கது.

பல நாடுகளிலும் கீழ்மன்றம் மக்களுடைய பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றுச் செயற்படுகிறது. கீழ்மன்றத்தின் அங்கத்தினர்கள் மக்களுடைய பிரதிநிதிகள் என்பதால் பொதுக் கருத்தின் அடிப்படையில் செயற்படுகின்றனர். அவ்வாறு பொதுக் கருத்துக்கு ஏற்றாற்போல் நடந்து கொள்ளாத அங்கத்தினர்களை மக்கள் அடுத்த தேர்தலில் கவனித்துக் கொள்வார்கள். ஆனால், இரண்டு தேர்தல்களுக்கு இடைப்பட்ட காலத்தில் மக்களுக்கு அவர்களுடைய பிரதிநிதிகள்மீது நேரடியான எந்த ஒரு கட்டுப் பாட்டிற்கும் வழியில்லை. ஆனால், சுவிட்சர்லாந்து நாட்டிலும் ஒரு சில வட அமெரிக்க மாநிலங்களிலும் மக்கள் துவக்கம், குடி

ஒப்பம், பிளபிஸைட்டு, திரும்ப அழைத்தல் போன்றவைகளின் மூலம் தேர்தல் இல்லாத காலத்திலும் பிரதிநிதிகள்மீது மக்கள் கட்டுப்பாடு மேற்கொள்கின்றனர்.

## சட்டமியற்றலுக்கான நடைமுறை
## (Procedure for Making Legislation)

எல்லா நாடுகளிலும் சட்டம் இயற்றுவதற்கான திட்ட வட்டமான ஒரு நடைமுறை நடைமுறையில் உள்ளது. அரசியல் அமைப்பின் மூலமாகச் சட்ட மன்றத்தின் அமைப்பு நிர்ணயம் செய்யப்பட்டிருந்தாலும்கூட அநேகமாகச் சட்ட மியற்றுதலுக்கான நடைமுறைகளை நிர்ணயம் செய்து கொள்ளச் சட்டமன்றத்திற்குச் சகல உரிமையும் வழங்குவது தான் வழக்கம். உலகத்திலுள்ள எல்லாக் கீழ்மன்றங்களும் மன்றத் தலைவர்களைத் தங்களுடைய அங்கத்தினர்கள் மத்தியி லிருந்தே தேர்ந்தெடுத்துக் கொள்கின்றன. மேல்மன்றங்களைப் பொறுத்தவரையில் அமெரிக்காவிலும் இந்தியாவிலும் குடியரசின் துணைத்தலைவர் தமது பதவியின் காரணமாக மேல்சபையின் தலைவராக உள்ளார். பொதுவாக, சட்டசபையே அங்கத்தினர் களின் தகுதியைப்பற்றித் தீர்ப்பளிக்கிறது. இங்கிலாந்திலும் இந்தியாவிலும் சட்டமன்ற உறுப்பினர்களின் தகுதிபற்றித் தீர்ப்பு அளிக்கும் உரிமை நீதிமன்றத்திற்கு வழங்கப்பட்டுள்ளது. பொதுவாகச் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு ஊதியமும், மன்றக் கூட்டம் நடைபெறும் காலங்களில் பேச்சுரிமையும், கைது செய்யப் படாமலிருக்கச் சுதந்திரமும் அளிக்கப்படுகின்றன.

மன்றத்தின் அளவு, மன்ற அலுவலின் கடினத்தன்மை, விளக்கமாகச் சட்ட வரைவுகளை ஆராய இயலாமை, பிரத்தியேக அறிவு பெறுவதன் முக்கியத்துவம் ஆகியவைதாம் மன்றம் பல குழுக்களாகப் பிரிந்து செயற்படுவதற்கான காரணங்களாகும். ஒவ்வொரு சட்டமன்றமும் பல குழுக்களைப் பெற்று விளங்கு கிறது. இக் குழுக்கள் சட்டவரைவுகளை விளக்கமாக ஆராய்ந்து வேண்டாதவற்றைக் களைந்து வேண்டியவற்றைச் சேர்க்க முழு ரூபத்தில் சட்ட வரைவினை இயற்றுகின்றன. இவ்விதம் சட்ட மியற்றலில் குழுக்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. குழுக்கள் நிரந்தரக் குழுக்களாகவும் செயல்படலாம்; தாற்காலிகமாகவும் செயல்படலாம். பொதுவாகக் குழுக்கள் உறுப்பினர்கள் மத்தியிலிருந்து சபாநாயகரால் நியமிக்கப்படுகின்றன. குழுக் களில் எல்லாக் கட்சிகளுக்கும் அதனதன் உறுப்பினர்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் இடம் அளிக்கப்படுகின்றன.

திறமையாகச் சட்டமன்றம் செயற்பட வேண்டும் என்பதால் திட்டவட்டமான சட்ட ஒழுங்குகள் வரையப்பட்டுள்ளன. இந்தச் சட்ட ஒழுங்குகள் அரசியல் அமைப்பால் நிர்ணயம் செய்யப்பட்டதாகவோ அல்லது சட்டமன்றத்தால் பெரும்பான்மை ஆதரவோடு இயற்றப்பட்டதாகவோ இருக்கின்றன. இச் சட்ட ஒழுங்குகள் அவசரப்பட்டுச் சட்டமன்றம் வேண்டாத சட்டங்களை நிறைவேற்றுவதைத் தடுக்கவும், சட்டமியற்றுவதில் தேவையற்ற காலதாமதமும் குழப்பமும் ஏற்படுவதைத் தடுக்கவும் பயன்படுகின்றன. சட்டமன்றக் கூட்டத்தொடர்கள், ஒத்திவைப்பு, கலைப்பு, அங்கத்தினர்களின் வருகை, வாக்குப் பதிவு, விவாதம், சட்டவரைவு வாசிப்பு போன்றவைகளைப் பற்றிய பல சட்ட ஒழுங்குகளும் உள்ளன.

சில காரியங்களைப் பொறுத்த வரையில் தற்காலச் சட்ட மன்றங்களில் ஒரே சீரான ஒழுங்கு முறைகள் உள்ளன. நிதிச் சட்ட வரைவுமட்டும் கீழ்மன்றத்தில் துவக்கம் பெறவும் மற்றச் சட்டவரைவுகள் எந்த ஒரு மன்றத்திலாகிலும் துவக்கம் பெறலாம் என்றுமுள்ளது. ஒரு சட்ட வரைவைச் சட்டமாக இயற்ற இரண்டு மன்றங்களின் இசைவும் வேண்டும் என்றுள்ளது. பெரும்பான்மை வாக்குகளைப் பெற்ற சட்ட வரைவே சட்டமாகிறது. அவசரப்பட்டுச் சட்டங்கள் இயற்றப்படுவதைத் தடை செய்வதற்காக ஒரு சட்ட வரைவு சட்டமன்றத்தில் பல கட்டங்களைக் கடந்தாக வேண்டும் என்றுள்ளது. பொதுவாக, மூன்று வாசிப்புகளைக் கடக்க வேண்டும் என்னும் ஒழுங்கு பின்பற்றப்படுகிறது. மூன்று வாசிப்புகளுக்கிடையே அதற்கேற்ற குழுவிற்கு அந்தச் சட்ட வரைவு அனுப்பிவைக்கப்படுகிறது. குழு தனது அறிக்கையைச் சமர்ப்பித்து அதன்மீது வாக்கெடுப்பு நடைபெற்ற பிறகுதான் சட்டம் இயற்றப்பட்டதாகக் கருதப்படுகிறது. இவ்வளவு கட்டங்களையும் கடப்பதற்குள் சட்டமன்றம் பொதுமக்கள் அபிப்பிராயத்தையும் அறிந்துகொள்ள முடிகிறது. அவசியமில்லாமல் நீட்டிக்கொண்டு போகும் பேச்சுகளையும் விவாதங்களையும் நிறுத்துவதற்காக அல்லது குறைப்பதற்காகச் சட்டமன்றங்களில் விதி முறைகள் உள்ளன. சட்டப்படி ஒரு சட்ட வரைவின்மீது ஏற்படும் விவாதத்தை நிறுத்த வாக்கெடுப்பு நடத்த வேண்டும். சட்டமன்றம் அதற்கெனத் தீர்மானம் நிறைவேற்றி விவாதத்தை நிறுத்தவோ அல்லது அதற்கான காலத்தைக் குறைக்கவோ செய்து அதனால் ஏற்படுகின்ற காலதாமதத்தைத் தவிர்க்கிறது.

### மக்களாட்சி வழிமுறைகள் (Democratic Processes)

மக்கள் நேரடியாகவே சட்டமியற்றிய காலம் பண்டைய கிரேக்கர்கள் வாழ்ந்த காலம், கிரேக்க நகர அரசுகளில் மக்கள்

நேரடியாக அரசாங்கச் செயல்களில் பங்கு பெற்றிருந்தனர். பிரதிநிதிகள் இல்லாமல் தாங்களாகவே போர் தொடுப்பது முதல் அமைதி காணுவதுவரை உள்ள சகல விஷயங்களையும் தீர்மானித்தனர். சுவிட்சர்லாந்தில் ஒரு சில கான்டான்களில் பல காலமாகச் சட்டமியற்றுவதற்காக மக்கள் அசெம்பிளி என்னும் சபையைப் பெற்றுள்ளனர். அதாவது வயது வந்த பெரியவர்கள் திறந்த வெளியான ஓர் இடத்தில் கூடிப் பல பிரச்சினைகளுக்கும் தீர்வு காணுவார்கள். ஆனால் தற்கால அரசுகள் எல்லாம் அளவில் மிகப் பெரியதாக விளங்குவதால் இது போன்று மக்கள் சட்டமியற்றலில் நேரடிப்பங்கு வகிக்க முடியாது. அதனால்தான் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அவர்கள் மூலமாகச் சட்டமியற்ற வேண்டியதாய் உள்ளது. ஆனால் இன்றைய பிரதிநிதிகள் சுயநல விருப்பங்களுக்கு அடிமைகளாகிக் கட்சி ஒழுங்குகளுக்குப் பணிய வேண்டிய திருப்பதால் மக்களுடைய உண்மை விருப்பைப் பிரதிபலிக்க முடியாதவர்களாகிவிடுகின்றனர். எனவே, மக்கள் தாங்களே நேரடியாகச் சட்டமியற்றுவதில் பங்கு கொள்ள விரும்புகின்றனர். ஆனால் மக்கள்தொகைப் பெருக்கம் நேரடியாகப் பங்குகொள்ள அனுமதிப்பதில்லை. எனவே, சட்டமியற்றலில் பங்கு கொள்வதற்காக மக்கள் துவக்கம், மக்கள் ஒப்பம் என்னும் இரு முறைகள் உள்ளன.

### (a) மக்கள் துவக்கம் (Initiative)

மக்கள் துவக்கம் என்னும் வழிமுறையின் மூலம் மக்கள் தாங்களாகவே சட்டமியற்றலுக்கு முன்மொழிய முடிகிறது. மக்கள் துவக்க முறைப்படி குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய வாக்காளர்கள் ஒரு குறிப்பிட்ட சட்டத்தை இயற்றுவதற்கு முன்மொழியுமாறு மனுச்செய்து சட்டமன்றத்தைக் கேட்டுக் கொள்ளலாம். பெரும்பான்மையான மக்கள் அதை ஏற்றுக் கொண்டால் சட்டமன்றம் அந்தச் சட்டத்தை இயற்றி, அது ஓர் அரசியல் அமைப்பைத் திருத்தும் சட்டமாயிருக்குமாயின் மக்கள் தீர்ப்புக்கும் விடுகிறது. சுவிட்சர்லாந்தில் பிரதிநிதித்துவ அரசாங்க முறையும் அமலில் இருப்பதால் மக்கள் துவக்கம் பரவலாகப் பின்பற்றப்படுகிறது. இம் முறையில் பல நிறைகளும் உள்ளன; குறைகளும் உள்ளன.

#### நிறைகள்

1. மக்கள் கருத்திற்குச் செவிசாய்க்காத சட்டமன்றத்தை நேர்வழிக்குக் கொண்டுவர மக்கள் துவக்கம் பயன்படுகிறது.

2. சட்டமன்றம் இயற்றத் தவறிய, மக்களுக்குப் பயன் தரும் ஒரு சட்டத்தை இயற்ற மக்கள் துவக்கம் மக்களுக்கு வாய்ப்பளிக்கிறது.

3. மக்கள் துவக்கம் மக்களுக்கு அரசியல் அறிவைப் புகட்டி அரசியல் களத்தில் தேவையான பயிற்சியையும் அளிக்கிறது.

4. மக்கள் துவக்கம் அரசாங்கத்தைக் கவனமாக இருக்கத் தூண்டுகிறது.

5. மக்கள் துவக்கம் புரட்சி ஏற்படுவதற்கான சந்தர்ப் பங்களைக் குறைக்கிறது.

குறைகள்

1. சட்டமன்றத்தின் மதிப்பைக் குறைக்கிறது மக்கள் துவக்கம்.

2. சட்டமியற்றுவதில் அதிக ஆற்றலும் அனுபவமும் இல்லாத மக்களுக்குச் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பிரயோகிக்கும் வாய்ப்பை அளிப்பது தவறு.

3. சட்டமன்றப் பொறுப்புப் பொருள் இழந்துவிடுகிறது.

(b) மக்கள் ஒப்பம் (Referendum)

மக்கள் ஒப்பம் மக்கள் துவக்கத்தைப் போல் மக்கள் நேரடியாகச் சட்டமியற்றலில் பங்கு கொள்வதற்குக் கையாளப் படும் ஒரு வழிமுறையாகும். சட்டமன்றம் இயற்றிய ஒரு சட்டத்தை மக்களுடைய தீர்ப்பிற்குச் சமர்ப்பித்தலுக்கு மக்கள் ஒப்பம் என்று பெயர். மக்கள் ஒப்பம் மூலம் ஒரு சட்டத்தை ஏற்றுக்கொள்ளவோ அல்லது நிராகரிக்கவோ மக்கள் உரிமை பெறுகின்றனர். மக்கள் ஒப்பத்திற்குச் சமர்ப்பிக்கின்ற ஒரு சாதாரணச் சட்டத்தையோ அல்லது அரசியல் அமைப்புத் திருத்தச் சட்டத்தையோ பெரும்பான்மை வாக்குகளின் மூலம் மக்கள் ஏற்றுக்கொள்ளவோ அல்லது நிராகரிக்கவோ செய் கின்றனர். மக்கள் தீர்ப்பு இரண்டு வகைப்படும். ஒன்று, கட்டாய மக்கள் தீர்ப்பு. இன்னொன்று, விருப்ப மக்கள் தீர்ப்பு ஆகும். சுவிட்சர்லாந்தில் தேசிய அரசியல் அமைப்பிற்கோ அல்லது மாநில அரசியல் அமைப்பிற்கோ கொண்டுவரப்படும் எல்லா விதமான திருத்தங்களும் கட்டாயமாக மக்களின் தீர்ப்புக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டும். மக்கள் தீர்ப்பில் பங்கெடுத்துக் கொண்டவர்களில் பெரும்பான்மையான வாக்காளர்களாலும் மாநிலங்களாலும் திருத்தம் நடைமுறைக்கு வருகிறது. இத்தகைய

மக்கள் ஒப்பு, கட்டாய மக்கள் ஒப்பு எனப்படும். சட்டமன்றம் இயற்றிய சட்டத்தை மக்கள் விருப்பத்திற்கு விடுமாறு மக்களே விரும்பிக் கேட்டுக்கொண்டாலும் சட்டம் மக்கள் தீர்ப்புக்கு விடப்படுகிறது. சுவிட்சர்லாந்தில் 30,000 வாக்காளர்களோ அல்லது 8 மாநிலங்களோ விரும்பினுல் அதற்கான மனுவை மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பிவைக்கின்றன. அதன் அடிப் படையில் குறிப்பிட்ட அந்தச் சட்டம் மக்கள் ஒப்புதலுக்கு விடப் படுகிறது. மக்கள் தீர்ப்பில் பங்கெடுத்துக் கொள்பவர்களில் பெரும்பான்மை வாக்காளர்களும் மாநிலங்களும் ஏற்றுக்கொண் டால் அந்தச் சட்டம் அமலுக்கு வரும். மக்கள் தீர்ப்பிலும் பல நிறைகளும் குறைகளும் காணப்படுகின்றன.

நிறைகள்

1. மக்கள் தீர்ப்பு மக்களுடைய விருப்பைத் தெரிந்துகொள் வதற்குச் சரியான ஒரு வழிமுறையாக உள்ளது.
2. மக்களுடைய விருப்பிற்கு எதிராக இயற்றப்படும் சட்டங்களை நீக்குவதற்கு மக்கள் ஒப்பம் ஒரு சிறந்த முறையாக உள்ளது.
3. மக்கள் துவக்கம் போலவே மக்கள் ஒப்பமும் மக்களுக்கு அரசியல் அறிவையும் தேவையான பயிற்சியையும் அளிக்கிறது.
4. மக்கள் துவக்கமும் மக்கள் ஒப்பமும் அரசாங்கத்திற்கு விரோதமாகப் புரட்சிகள் தோன்றுமலிருக்கச் செய் கின்றன.

குறைகள்

1. நுணுக்கம் நிறைந்த சட்டத்தை அதிக அறிவு பெருத மக்களின் தீர்ப்பிற்குச் சமர்ப்பிப்பது சரியான முறையன்று.
2. மக்கள் ஒப்பம் சட்டமன்றத்தின் உரிமையையும், மதிப்பையும் குறைப்பதாய் உள்ளது.
3. மக்கள் ஒப்பம் சட்டமன்றத்தின் பொறுப்பைக் குறைத்து விடுகிறது.

(c) பிளபிசைட்டு (Plebiscite)

மக்கள் ஒப்பும் மக்கள் துவக்கமும் நேரடி ஜனநாயக வழி முறைகளாக இருக்குங்கால் பிளபிசைட்டும் மீட்புரிமையும் ஜன நாயகக் கட்டுப்பாட்டு முறைகளாக உள்ளன. சி. எஃப். ஸ்டிராங் கூறுவது போலப் 'பிளபிசைட்டு' என்னும் சொல் மக்களுடைய

கட்டளை எனப் பொருள்படுகிறது. பிளபிசைட்டு என்பது அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு காரியத்தின்மீது பொது மக்களின் வாக்கை நேரடியாகப் பெறும் ஒரு வழிமுறை ஆகும். ஆனால், முக்கியமாக இது ஏறக்குறைய நிரந்தரமான ஒரு அரசியல் நிலையை ஏற்படுத்துவதற்காகப் பயன்படுத்தப் படுகிறது. 1933–ல் ஜெர்மனி சர்வதேசச் சபையிலிருந்து விலகியதற்குத் தேசத்தின் இசைவைப் பெறவும், பிறகு 1934–ல் சான்சலர் பதவியையும் ஜனாதிபதி பதவியையும் தாமே பெற மக்களுடைய இசைவைப் பெறவும் ஹிட்லர் பிளபிசைட்டு நடத்தியதாக ஸ்டிராங் குறிப்பிட்டுள்ளார். பிளபிசைட்டு முறையில் நிறைகளும் உள்ளன; குறைகளும் உள்ளன.

நிறைகள்

1. முக்கியமான அரசியல் காரியங்களில் மக்கள் தங்களுடைய தீர்ப்பை அளிக்கப் பிளபிசைட்டு வாய்ப்பளிக்கிறது.
2. மக்களிடம் அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்துகிறது.
3. அரசியல் தலைவர்களால் தீர்க்க முடியாத சில பிரச்சினைகளுக்குப் பிளபிசைட்டு மூலம் தீர்வு காணலாம்.

குறைகள்

பிளபிசைட் ஓர் அருமையான மக்களாட்சி முறைதான். ஆனால் அதிகாரப் பசியுடைய தலைவன் பிளபிசைட்டில் தனக்கு வெற்றி கிடைக்குமாறு செய்துவிட முடியும். ஹிட்லர் மக்கள் ஆட்சிக் கருத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்தார். ஆனால் பிளபிசைட்டு மூலம் மக்களுடைய ஆதரவைப் பெற்றுக் கொண்டார். பிளபிசைட்டில் வெற்றி கிடைக்குமாறு செய்து விட்டார் என்றே கூற வேண்டும். எனவேதான் பிளபிசைட்டு முறையைக் குறைகூற வேண்டியுள்ளது.

(d) மீட்புரிமை அல்லது திரும்ப அழைத்தல் (Recall)

மீட்புரிமை என்பது குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய மக்கள் விரும்பினால் தங்களுடைய பிரதிநிதிகளைத் திரும்ப அழைக்கவோ அல்லது பதவியிலிருந்து நீக்கிவிடவோ பெற்றிருக்கும் உரிமையாகும். அமெரிக்காவில் ஓர்கான் என்னும் மாநிலத்தில் சட்டமன்ற உறுப்பினரோ அல்லது ஆட்சித்துறை அதிகாரியோ மக்களால் திரும்ப அழைக்கப்படலாம் என்று உள்ளது. கொலராடோவில் நீதிபதிகளைத் திரும்ப அழைக்கும் உரிமை மக்களுக்கு உள்ளது. மீட்புரிமைப்படி மக்களுடைய

விருப்பிற்குச் செயலாற்றத் தவறிய பிரதிநிதிகளைப் பதவியிலிருந்து திரும்ப அழைத்துவிட்டு வேறு பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ருஷ்யாவிலும் இம் முறை பின்பற்றப்பட்டு வருகிறது. அங்கு ஏற்கெனவே தேர்ந்தெடுத்து வைக்கப்பட்டு இருக்கும் பிரதிநிதிகள் அவ்வாறு திரும்ப அழைக்கப்பட்டதனால் ஏற்படும் காலி இடங்களில் அமர்த்தப்படுகின்றனர்.

நிறைகள்

1. மீட்புரிமையின் மூலம் மக்கள் அரசாங்கப் பொறுப் பேற்றிருப்பவர்கள் மீது திறம்படக் கட்டுப்பாடு மேற் கொள்ள முடிகிறது.
2. அரசாங்க அலுவலர்கள் மக்களுடைய மீட்புரிமைக்குப் பயந்து ஒழுங்கான முறையில் செயலாற்றுகின்றனர்.

குறைகள்

1. அலுவலர்கள் துணிந்து தீர்மானங்கள் போட மீட்புரிமை ஒரு பெரும் தடையாக உள்ளது.
2. மக்களுடைய அகால உணர்ச்சிகளுக்கு அரசாங்க அலுவலர்கள் அல்லது சட்டமன்ற உறுப்பினர்கள் பலியாகிவிடுகின்றனர்.
3. பதவியில் நீடித்து இருக்க விரும்பும் நீதிபதிகள் மக்களைத் திருப்தி செய்யப் பாடுபடுவார்கள். அதனால் அவர்கள் நேர்மையாகவும் பாரபட்சமற்ற முறையிலும் பணியாற்ற முடியாதவர்களாகிவிடுவார்கள்.

# 4. ஆட்சித்துறை
## (Executive)

**1.** பொருளும் தன்மையும் (Meaning and Nature)

ஆட்சித்துறை அரசாங்கத்தின் இரண்டாவது பிரிவாக உள்ளது. நாட்டுக்குத் தேவையான சட்டங்களை இயற்றும் பொறுப்புச் சட்டமன்றத்தைச் சார்ந்ததாய் இருக்கும்பொழுது அந்தச் சட்டங்களை அமல்படுத்தும் பொறுப்பு ஆட்சித்துறையிடம் அளிக்கப்பட்டுள்ளது. ஆட்சித்துறை என்னும் சொல் சட்டமியற்றலிலும் நீதிவழங்கலிலும் ஈடுபட்டிருப்பவர் நீங்கலாக மற்ற எல்லா அரசாங்க அலுவலர்களையும் குறிப்பதாய் உள்ளது. அதாவது அரசாங்கத்தின் தலைமைப் பீடத்திலுள்ள குடியரசு தலைவர் முதல் கீழ்வரிசையிலுள்ள சாதாரணப் பியூன்வரை உள்ள அரசாங்க அலுவலர்கள் அனைவரையும் ஆட்சித்துறை உள்ளடக்கி நிற்கிறது. ஆனால் குறுகிய பார்வையில் நோக்கினால் ஆட்சித்துறை செயற்குழு அதிகாரங்களாகிய அமைச்சர்களையும் செயலர்களையும் குறிப்பதாய் உள்ளது. இந்த முறையில் இங்கிலாந்தில் ஆட்சித்துறை அல்லது செயற்குழு அரசனையும் அமைச்சர் குழுவையும், அமெரிக்காவில் குடியரசு தலைவரையும் அவருடைய செயலர்களையும், இந்தியாவில் குடியரசு தலைவரையும் அவருடைய செயலர்களையும், அமைச்சர் குழுவையும் குறிப்பதாய் உள்ளது.

உண்மையில் ஆட்சித்துறையைச் செயற்குழு என்றும், நிருவாகத்துறை என்றும் இரண்டு பிரிவுகளாகக் கருதவேண்டும். செயற்குழுவில் அரசாங்க அமைச்சர்களும், நிருவாகத்துறையில் செயற்குழுவும் மற்ற அரசாங்கப் பணியாளர்களும் இடம் பெறுவதாகக் கூறினால் ஆட்சித்துறை என்னும் பொதுவான சொல்லுக்குப் பொருத்தமான பொருள் விளங்கும்.

**2.** ஆட்சித்துறையின் கடமைகள் (Functions of the Executive)

தற்கால அரசுகளின் ஆட்சித்துறையின் கடமைகள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டு வருவதைக் காணலாம். நன்னலம் கருதும் அரசுகளிலெல்லாம் ஆட்சித்துறையின் முக்கியத்துவம் அதிக அளவில் உணரப்பட்டுள்ளது. மக்களுடைய தேவைகள்

பெருகப்பெருக அரசாங்கத்தின் பொறுப்பு அதிகரிக்கிறதென்ருல் ஆட்சித்துறை மக்களுக்கு ஆற்றவேண்டிய கடமைகள் பெருகியுள்ளன என்றே பொருள். பொதுவாக ஆட்சித்துறை கீழ்க்கண்ட கடமைகளை ஆற்றுகின்றது:

(i) சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டல் (Maintenance of Law and Order): சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவதே ஆட்சித்துறையின் முதல் கடமையாகும். சட்டத்தை மீறியவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் ஆட்சித்துறையிடம் உள்ளதால் குடிமக்கள் பொதுவாகச் சட்டத்திற்குக் கட்டுப்படுகின்றனர். மக்களுடைய உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டிய பொறுப்பு ஆட்சித்துறையைச் சேர்ந்தது. சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவதற்காகவே ஆட்சித்துறையில் உள்துறை அமைச்சகம் செயல்படுகிறது.

(ii) நியமனம் (Appointment) : ஆட்சித் துறையில் உள்ள முக்கியமான பதவிகளுக்கு நியமனம் செய்யும் அதிகாரம் செயற்குழுவிடம் அளிக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் தலைமை அமைச்சரையும் அவருடைய ஆலோசனையின் பேரில் மற்ற அமைச்சர்களையும் குடியரசு தலைவர் நியமிக்கிருர். மேலும், அமைச்சர் குழுவின் ஆலோசனையின் பேரில் பாதுகாப்புப் பணியிலும் பல முக்கியப் பதவிகளுக்கும் குடியரசு தலைவரே நியமனம் செய்கிருர். அதுபோலவே தலைமை நீதிமன்றத்திலும் உயர்நீதி மன்றங்களிலும் நீதிபதிகளையும் வெளிநாட்டுத் தூதுவர்களையும் குடியரசு தலைவரே நியமனம் செய்கிருர். இன்னும் பல பதவிகளுக்கும் பணியாளர்களைப் பொதுப் பணியாளர் தேர்வு ஆணைக்குழுவின் மூலமாகச் செயற்குழு நியமனம் செய்கிறது. அமெரிக்காவில் குடியரசு தலைவர் செய்யும் பதவி நியமனங்கள் காங்கிரஸால் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றுள்ளது.

(iii) வெளிநாட்டு உறவு (Foreign Relation) : எல்லா அரசுகளும் இறைமை பெற்ற சுதந்திரமான அரசுகளாகும். ஆனால் எந்த ஓர் அரசும் இந்த உலகில் தனித்து வாழ இயலாது. அதாவது ஒவ்வோர் அரசும் உலகில் உள்ள மற்ற அரசுகளுடன் தொடர்புகொண்டே வாழவேண்டியதாயுள்ளது. அரசுகள் தங்களுடைய வேற்றுமைகளை மறந்து ஒன்றையொன்று ஆக்கிரமிக்க முற்படாமல் சமாதானத்தின் அடிப்படையில் வாழ முயன்ருல்தான் நாடுகளிடையே அமைதியும் பாதுகாப்பும் நிலைக்கும். நாட்டிடை உறவு செம்மையுறப் பல உடன்படிக்கைகள் ஏற்படுத்தப்பட்டு வெளிநாடுகளில் தூதுவர்கள் நியமிக்கப்படு

கின்றனர். வெளிநாட்டு உறவை நடத்துவதற்கென ஆட்சித் துறையில் வெளி விவகாரத்துறை ஒன்றும் அமைக்கப்படுகிறது.

(iv) பாதுகாப்பும் போரும் (Defence and War) : நாட்டைப் பகைவரிடமிருந்து பாதுகாப்பதும், அவசியம் ஏற்பட்டால் போர் தொடுப்பதும் ஆட்சித்துறையின் கடமையாகும். போர் மூண்ட பிறகுதான் பாதுகாப்பைப்பற்றி ஆலோசிக்க வேண்டும் என்றில்லாமல் அமைதிக் காலங்களில் கூடப் பாதுகாப்பின் முக்கியத்துவம் உணரப்படுகிறது. இதன் காரணமாகத்தான் ஒவ்வொரு நாடும் தனக்கென ஒரு பாதுகாப்புப் பணியை ஏற்படுத்தி அதைப் பேணுவதற்காக ஏராளமான பணம் செலவு செய்யவும் தயாராகவுள்ளது. நாட்டின் பாதுகாப்புக்காரியங்களைக் கவனிப்பதற்காகவும், இராணுவ நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தவும் பாதுகாப்புத்துறை என்று ஒரு தனித்துறை ஆட்சித் துறையில் உள்ளது. பாதுகாப்புப் பணியிலுள்ள முக்கிய உயர் பதவிகளுக்குச் செயற்குழுவே பணியாளர்களை நியமனம் செய்கிறது.

(v) நிதி சம்பந்தமான கடமைகள் (Financial Functions): தற்கால அரசுகள் எல்லாம் நன்னலம் கருதும் அரசுகள் என்பதால் ஏராளமான பொறுப்புகள் ஆட்சித்துறையின்மீது சுமத்தப்பட்டுள்ளன. எல்லா வகையான திட்டங்களையும் செயற்படுத்த அரசுக்குப் பணம் தேவைப்படுகிறது. பொதுவாக அரசுக்குத் தேவையான பணம் மக்களிடமிருந்து வரிகள் மூலம் சேகரிக்கப்படுகின்றன. எந்தெந்த வரிகள் விதிக்க வேண்டும் அல்லது என்னென்ன வழிகளில் அரசாங்கத்தின் பல செலவுகளுக்கான பணத்தைச் சேகரிக்கலாம் என்பதை நிர்ணயிப்பதற்காக நிதித் துறை ஏற்படுத்தப்படுகிறது. நிதித்துறை ஒவ்வொரு துறையின் செலவுக்கும் பணம் ஒதுக்குகிறது. இதற்கான உரிமையின்மூலம் மற்றத் துறைகள்மீது கட்டுப்பாடு மேற்கொள்ள நிதித்துறைக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்கிறது. சட்டமன்றத்தால் நிறைவேற்றப்படும் வரவுசெலவுத் திட்டம் ஆட்சித்துறையின் மூலமாகவேதான் வரையப்படுகிறது.

(vi) சட்டமியற்றும் கடமை (Legislative Function) : சட்டமியற்றும் செயலையும் ஓரளவுக்கு ஆட்சித்துறை செய்கிறது என்றே கூற வேண்டும். பாராளுமன்ற முறையின்கீழ்ச் செயற்குழு சட்டமன்றத் தொடரைக் கூட்டவும், ஒத்தி வைக்கவும், கலைக்கவும் செய்கிறது. மேலும், சட்டமன்றத்தின் சிறப்புக்கூட்டத் தொடர்களைக் கூட்டவும் செயற்குழுவிற்கு அதிகாரம் உள்ளது. பாரளுமன்ற முறையில் சட்டமன்றமே சட்ட

மியற்ற வேண்டும் என்றாலும் செயற்குழுவே உண்மையில் சட்ட மியற்றலை ஆரம்பிக்கிறது. ஆங்கிலேய, இந்திய அரசுகளில் அமைச்சர்களே சட்ட வரைவுகளை அறிமுகம் செய்கின்றனர். அமெரிக்காவில் குடியரசு தலைவரோ அல்லது அவருடைய செயலர்களோ காங்கிரசின் கூட்டத் தொடரில் பங்குகொண்டு சட்டவரைவுகளை அறிமுகம் செய்ய முடியாது என்றாலும் தலைவர் உரையின் மூலம் தம்முடைய கருத்துகளைச் சட்டங்களில் இடம்பெறச் செய்துவிடுகிறார்.

சட்டமன்றம் இயற்றிய சட்ட வரைவுகளுக்குச் செயற்குழு இசைவு அளிக்க வேண்டும். செயற்குழுவின் இசைவுபெறாத எந்தச் சட்டவரைவும் சட்டமாக முடியாது. இந்தியாவில் பாராளுமன்றம் இயற்றிய சட்டவரைவுகள் யாவும் குடியரசு தலைவரிடம் இசைவுக்காகச் சமர்ப்பிக்கப்படுகின்றன. பொது வாகத் தலைவர் தம்முடைய இசைவை அளிப்பதுதான் வழக்கம். ஆனால் இசைவு அளிக்க விரும்பாவிட்டால் தம்முடைய சிபாரிசுகளுடன் அந்தச் சட்டவரைவினைப் பாராளுமன்றத் திற்குத் திருப்பி அனுப்புகிறார். பாராளுமன்றம் அந்தச் சட்டவரை வினை மாற்றியோ மாற்றாமலோ திரும்பவும் நிறைவேற்றிக் குடியரசு தலைவருக்கு அனுப்பி வைக்கிறது. இப்பொழுது கண்டிப்பாகத் தலைவர் தம்முடைய இசைவை எந்தவித மறுப்புமின்றி அளித்துவிடுகிறார்.

செயற்குழு சட்டமன்றக் கூட்டத் தொடர் நடைபெறாத பொழுது கட்டளைகள் பிறப்பிக்க உரிமை பெற்றுள்ளது. செயற் குழு பிறப்பிக்கும் இக் கட்டளைகள் சட்டத்திற்குரிய வலிமையைப் பெற்று விளங்குகின்றன. இந்தியாவில் சட்டமன்றக் கூட்டத் தொடர் நடைபெறாத காலத்தில் குடியரசு தலைவர் கட்டளைகள் பிறப்பிக்கின்றார். ஆனால் இக் கட்டளைகள் பாராளுமன்றக் கூட்டத் தொடர் ஆரம்பமான ஆறு வாரங்களுக்குள் பாராளு மன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்படவேண்டும். தவறினால் செயற் குழுக் கட்டளைகள் பொருள் இழந்துவிடும்.

ஆட்பேர் உரிமையின் (Delegation) விளைவாக ஆட்சித்துறை உபசட்டங்கள் இயற்றும் அதிகாரம் பெற்று விளங்குகிறது. அதாவது சட்டமன்றம் பொதுவாகச் சட்டங்களைப் பொதுவான ரீதியில் இயற்றி அவைகளின் விளக்கங்களைக் கூறும் அதி காரத்தை ஆட்சித் துறைக்கு அளித்துவிடுகிறது. சட்டமன்றத் திற்கும் விளக்கங்களைக் கூறும் அளவுக்குப் போதுமான சமய கிடையாது என்பதே இதற்குக் காரணமாகும்.

சில அரசுகளில் செயற்குழுவிற்கு அவசரகால அதிகாரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. உதாரணமாக, இந்தியாவில் குடியரசு தலைவர் மூன்று வகையான அவசரகால அதிகாரங்களைப் பெற்றுள்ளார்.

1. நாட்டின் அல்லது ஒரு பகுதியின் பாதுகாப்பிற்கு உள்நாட்டுக் கலவரத்தாலோ அல்லது வெளிநாட்டு ஆக்கிரமிப்பாலோ அல்லது தாக்குதலாலோ ஆபத்து ஏற்படின் அல்லது ஏற்படும் என்று தலைவர் உணர்ந்தால் தேசிய நெருக்கடிப் பிரகடனம் செய்வார்.

2. மாநில அரசு அரசியல் அமைப்பின் பிரகாரம் இயங்க முடியாமலாகிவிட்டால் தலைவர் தாமாகவோ அல்லது ஆளுநரின் அறிக்கையின் பேரிலோ நெருக்கடிப் பிரகடனம் செய்வார்.

3. நாட்டின் நிதிநிலைமைக்கோ நாணயத்திற்கோ ஆபத்து ஏற்படும் என்று தலைவர் உணர்ந்தால் நிதி நெருக்கடிப் பிரகடனம் செய்யப்படும். தேசிய நெருக்கடிப் பிரகடனம் அமலிலிருக்கும் பொழுது அடிப்படை உரிமைகள் ரத்து செய்யப்படுகின்றன. ஆனால், மாநில அரசின் அரசியல் அமைப்புச் செயற்பட முடியாது போனதால் அமல்படுத்தும் நெருக்கடிப் பிரகடனம் அமலில் இருக்கும்போது மத்திய அரசாங்கம், பாராளுமன்றம் ஆகிய இரண்டின் அதிகாரங்களும் அதிகரிக்கின்றன. ஆனால் மாநில அரசுகள் தொடர்ந்து செயற்படும்.

சட்டங்களுக்கு விளக்கம் சொல்லும் அதிகாரம் நீதித்துறையைச் சார்ந்தது என்றாலும் ஆட்சித்துறை அந்த அதிகாரத்தினைப் பகிர்ந்துகொள்கிறது என்றே கூறவேண்டும். நீதிமன்றங்கள் கொடுக்கும் மரணதண்டனைகளை மன்னித்துத் தீர்ப்புக்கூறவும், குறைக்கவும் அல்லது தள்ளுபடி செய்யவும் செயற்குழுத் தலைவருக்கு அதிகாரம் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு மன்னிப்பு வழங்கும் அதிகாரம் செயற்குழுவிற்குக் கொடுக்கப்படுவதற்குக் காரணம் என்னவெனில் நீதிமன்றங்கள் நீதி வழங்குவதில் ஏதாவது தவறுகள் நிகழ்ந்திருந்தால் அவைகளைச் சரிக்கட்டுவதற்கு அரசாங்கத்திற்கு ஒரு சந்தர்ப்பம் இருக்க வேண்டும் என்பதாகும்.

மேலும், செயற்குழுத் தலைவருக்கு ஒரு சில சலுகைகள் வழங்கப்பட்டுள்ளன. சாதாரண நீதிமன்றங்களுக்கு இவர் கட்டுப்பட்டவரல்லர். ஆங்கிலேய நாட்டு அரசர் அல்லது அரசி இந்தியக்

குடியரசுத் தலைவர், அமெரிக்கக் குடியரசுத் தலைவர், பிரெஞ்சு நாட்டுத் தலைவர் ஆகிய செயற்குழுத் தலைவர்களுக்கு இந்த விதமான சலுகை வழங்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

3. செயற்குழுவின் வகைகள் (Kinds of Executives)

பல நாடுகளிலும் உள்ள செயற்குழுக்கள் உண்மையான செயற்குழு என்றும், பெயரளவிலான செயற்குழு என்றும், ஒருவர் செயற்குழு என்றும் கூட்டுச்செயற்குழு என்றும் பலவகைப்படும். ஒவ்வொரு வகை செயற்குழுவின் தன்மையையும் கீழ்கண்டவாறு ஆராயலாம்.

(i) உண்மையான செயற்குழுவும், பெயரளவிலான செயற்குழுவும்: (Real and Titular Executives) பாராளுமன்ற முறையின் கீழ் செயற்குழு உண்மையான செயற்குழு என்றும் பெயரளவிலான செயற்குழு என்றும்இரு வகைப்படுகின்றது. பாராளுமன்ற முறையின்முக்கியதன்மைகளுள் ஒன்றாக பெயரளவிலான செயற்குழு இடம் பெறுகிறது. இங்கிலாந்தின் அரசன் அல்லது அரசியும் இந்தியாவின் குடியரசு தலைவரும் பெயரளவிலான செயற்குழுத் தலைவர்களாவர். இவ்விரு நாடுகளிலுமே தலைமை அமைச்சரைத் தலைவராகக் கொண்ட பாராளுமன்றத்திற்குப் பொறுப்பான அமைச்சர்குழு உண்மையான செயற்குழுவாகச் செயல்படுகிறது. ஆனால் தலைவர் முறை அரசாங்கம் நடைமுறையில் உள்ள நாடுகளில் பெயரளவிலான செயற்குழு என்று ஒரு தனிப்பட்ட செயற்குழுவைக் காண முடியாது. தலைவர்முறை அரசாங்கம் அமலில் உள்ள அமெரிக்க நாட்டில் குடியரசுத் தலைவரே உண்மையான செயற்குழுத் தலைவராவர். பாராளுமன்ற முறையில் அமைச்சர் குழுவின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவர் செயல்படுவது போல அமெரிக்க குடியரசுத் தலைவர் அமைச்சர் குழுவின் ஆலோசனையின் பேரில் செயல் படவில்லை. அவர் உண்மையான செயற்குழுவைப் போலவே செயல்படுகிறார். வரம்பிலாமுடியாட்சியிலும் சர்வாதிகார ஆட்சியிலும் உண்மையான செயற்குழு பெயரளவிலான செயற்குழு என்ற வேறுபாடு காணப்படவில்லை. இங்கே எல்லா அதிகாரங்களும் ஒருவர் கையில் உறைந்துள்ளது.

(ii) ஒருவர் செயற்குழுவும் கூட்டுச் செயற்குழுவும் (Single and Plural Executives) ஒருவரே எல்லா அதிகாரங்களையும் பிரயோகிக்க நேர்ந்தால் ஒருவர் செயற்குழு என்றும், ஆட்சித்துறை அதிகாரங்களைப் பலரிடம் பகிரப்படும் முறைக்கு கூட்டுச் செயற்குழு என்றும் பெயர். ஒருவர் செயற்குழுவானால் விரைவில் தீர்மானங்கள் நிறைவேற்றப்படவும், நிர்வாகஇரகசியங்களைப் பாதுகாக்கவும், உடனடியாகச் செயல்படவும், நெருக்கடி சூழ்நிலைகளைத் துணிந்து நின்று சமாளிக்கவும் வாய்ப்பு உள்ளது. அதே

நேரத்தில் கூட்டுச் செயற்குழுவானுல் இவைகளெல்லாம் சாத்திய மாவதில்லை. மேலும், கூட்டுச் செயற்குழுவில் அதிகாரம் பலரிடையே பகிரப்படுவதால் கால விரையமும், பொறுப்பின்மையும் ஏற்படுகிறது. சர்வாதிகார ஆட்சியிலும் வரம்பிலா முடியாட்சியிலும் ஒருவர் செயற்குழு முறையைக் காணலாம். பாராளுமன்ற முறையில் உண்மையான செயற்குழுவாகச் செயல் படும் அமைச்சர் குழு கூட்டுச் செயற்குழுவாகத் தோன்றினுலும் "கூட்டுப் பொறுப்பு" என்னும் தத்துவத்தின் மூலமாக, அதாவது, கொள்கைகளுக்கும் செயல்களுக்கும் தலைமை அமைச்சரும் மற்ற அமைச்சர்களும் கூட்டாகப் பொறுப்பானவர்கள், வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் கூட்டாகவே செயல்பட வேண்டும் என்னும் தத்துவத்தின் மூலமாக அச் செயற்குழு ஒருவர் செயற்குழு போலவே தான் செயல்படுகிறது.

பண்டைய அரசுகளில் கூட்டுச் செயற்குழுக்கள் இருந்திருக்கின்றன. பண்டைய ஏதேன்ஸ் பட்டணத்தில் செயற்குழு அதிகாரம் பலரிடையே பகிரப்பட்டிருந்ததாகத் தெரிகிறது. ஸ்பார்ட்டாவில் இரண்டு அரசர்கள் இருந்ததாகவும், ரோம் நாட்டில் இரண்டு ஆட்சியாளர்கள் ஒருவரையொருவர் கட்டுப் படுத்திய வகையில் ஆட்சிபுரிந்து வந்ததாகவும் வரலாறு வாயிலாக அறியமுடிகிறது. தற்காலத்தில் சுவிட்சர்லாந்திலும், ருஷ்யாவிலும், சீனக் குடியரசிலும், யுக்கோசுலோவியாவிலும் இன்னும் சில பொதுவுடமை நாடுகளிலும் கூட்டுச் செயற் குழுக்கள் அமலில் உள்ளன. சுவிட்சர்லாந்தில் ஏழு பேரைக் கொண்ட கூட்டாட்சிக் குழு செயற்குழு அதிகாரத்தைப் பிரயோகித்து வருகிறது. கூட்டாட்சிக்குழு கூட்டமைவு சபையாரால் (சட்டமன்றம்) நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டு, அந்தக் குழுவின் அங்கத்தினர்களில் ஒருவர் ஆண்டுதோறும் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுகிருர். முதுமையின் அடிப்படையில் தலைவர் பதவி கூட்டாட்சிக் குழுவின் அங்கத்தினர்களுக்குக் கிடைக்கிறது. ஆனுல் தலைவர் தனிப் பட்ட உரிமைகள் எதுவும் பெற்றிருக்கவில்லை. தலைவர் என்ற பதவியைத்தவிர மற்ற நாட்டு செயற்குழுத் தலைவர்கள் பெற்று உள்ள அதிகாரங்கள் இவருக்குக் கிடையாது. கூட்டாட்சிக் குழுவில் உள்ள மற்ற அங்கத்தினர்கள் அனுபவிக்கும் அந்தஸ்தும் அதிகாரங்களும் தான் இவருக்கும் அளிக்கப் பட்டுள்ளது. குழுவில் உள்ள ஏழு அங்கத்தினர்களும் ஒன்ருகச் செயல்படுகின்றனர். குழுவின்கூட்டத் தொடர்கள் தலைவரின் தலைமையின் கீழ் நடைபெறுகின்றன.

சோவியத் ருஷ்யாவில் சட்டமன்றமாகிய சுப்ரீம் சோவியத்தால் நான்கு ஆண்டுகளுக்கென தேர்ந்தெடுக்கப்பட்ட 33

அங்கத்தினர்களைக் கொண்ட பிரசிடியம் செயற்குழுவாகச் செயல்படுகிறது. தனிப்பட்ட முறையில் நாட்டுத் தலைவர் ஒருவர் பெற்றிருக்கும் செயற்குழு அதிகாரங்கள் அனைத்தும் பிரசிடியத்தின் அங்கத்தினர்கள் அனைவர்களாலும் பிரயோகிக்கப் படுகின்றன. பிரசிடியத்திற்கு ஒரு தலைவர் உள்ளார். ஆனால் அவருக்குத் தனிப்பட்டச் சலுகைகளோ அதிகாரங்களோ கிடையாது. பிரசிடியத்தின் கூட்டத் தொடர்களை நடத்த வேண்டியதே இவருடைய பொறுப்பாகும். அமைச்சர் குழுதான் செயற்குழு அதிகாரத்தைப் பெற்றிருக்க வேண்டும் என்று அரசியல் அமைப்பு கூறினாலும், ஒருகட்சி முறையின் விளைவாக அமைச்சர் குழு கட்சி வழிகாட்டியபடிதான் செயல்பட வேண்டியதாய் உள்ளது. கட்சியின் முக்கியஸ்தர்கள் தாம் பிரசிடியத்தில் இடம் பெறுவதால் உண்மையில் எல்லா செயற்குழு அதிகாரங்களும், நிருவாக அதிகாரங்களும் பிரசிடியத்திடம் போய்விடுகிறது. பிரசிடியத்தின் விருப்பத்திற்கு இணங்க செயல்படும் ஓர் அமைப்பாக அமைச்சர் குழு ஆகிவிட்டது. சீனக்குடியரசு, யுக்கோசுலோவிக்கியா போன்ற பொதுவுடைமை நாடுகளும் சோவியத் நாட்டு முறையிலேயே செயல்படுகின்றன.

கூட்டுச் செயற்குழுவை ஆதரிப்பவர்கள் ஒரு சில நிறைவுகள் அதில் காணப்படுவதாகக் கூறுகின்றனர். கூட்டுச்செயற்குழுவில் அதிகாரத்தைத் துர்பிரயோகம் செய்யவாய்ப்பில்லை என்கின்றனர். மேலும் அதிகாரம் ஒருவர் கையில்குவிக்கப் படுமானால் அந்த ஒருவர் செயற்குழு வல்லாட்சி புரிய ஏதுவாகும். எனவே, அது குடியரசுக் கோட்பாட்டிற்கு எதிரான முறையாகும். ஆனால் கூட்டுச் செயற்குழு வல்லாட்சி புரிய வழியே இல்லை என்பது அவர்களது கூற்றுகும். கடைசியாக, கூட்டுச் செயற்குழு சட்டமன்ற அதிகாரத்தையும் மக்களுடைய உரிமைகளையும் அபகரிக்க முடியாது. சுவிட்சர்லாந்தில் உண்மையிலேயே கூட்டுச்செயற்குழு வெற்றிகரமாகச் செயல்பட்டு வருகிறது. இதற்கு முக்கிய காரணம் அந்த நாட்டு மக்களுடைய அரசியல் பாரம்பரியமும் வாழ்க்கை முறையுமேயாகும். அதற்காக மற்ற நாடுகளிலும் கூட்டுச்செயற்குழு வெற்றிகரமாக செயல்படும் என்று கூறி விட முடியாது. பொதுவுடமை நாடுகளில் ஒரு கட்சி மட்டுமே செயல் பட்டு வருவதால் கூட்டுச்செயற்குழுவால் அதிக நன்மைகள் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே, ஒருவர் செயற்குழு சிறந்ததா கூட்டுச் செயற்குழு சிறந்ததா என்பது அந்தந்த நாட்டையும் அதனுடைய அரசியல் சூழ்நிலையையும் பொறுத்தே அமைகிறது.

# 5. நீதித்துறை

## (The Judiciary)

**1.** நீதித்துறையின் முக்கியத்துவம் (The Importance of Judiciary)

நீதித்துறை அரசாங்கத்தின் மூன்ருவது பிரிவாக உள்ளது நீதி நிருவாகம் நீதித்துறையைச் சார்ந்தது. நீதித்துறையின் திறமையைக் கொண்டு அரசாங்கத்தின் தரத்தை நிர்ணயித்து விடலாம். எந்த அரசியலில் நீதி பாரபட்சமற்ற முறையிலும் துரித மாகவும் கிடைக்குமோ அந்த அரசியலில் வாழுகின்ற மக்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன. பண்டைய காலத்தில் ஆட்சித்துறை அதிகாரமும் நீதித்துறை அதிகாரமும் சட்டமியற்றும் அதிகாரமும் ஒருவர் கையிலேயே இருந்தது. ஆனல் நாளடைவில் மக்கள் உண்மையான நீதி கிடைக்க வேண்டுமானல் நீதி சம்பந்தப்பட்ட அதிகாரமும் ஆட்சித்துறை அதிகாரமும் வெவ்வேறு நபர்களிடமிருக்க வேண்டும் என்னும் உண்மையை அறிந்தனர். அதனல் பெரும்பாலும் இன்றைய அரசர்களின் அரசாங்கத்தில் மூன்று பிரிவுகளை ஏற்படுத்தி நீதித் துறையை ஒரு தனிப்பிரிவாக அமைத்திருப்பதைக் காணலாம். நீதித்துறை பெற்றுள்ள கடமைகள் அதனுடைய முக்கியத் துவத்தை நன்கு விளக்குகின்றன. அதனுடைய கடமைகளைக் கீழ்க்கண்டவாறு கூறலாம்.

நீதித்துறையின் முதல் கடமை நாட்டில் பின்பற்றப்படும் சட்டங்களுக்கும் அரசியல் அமைப்புச் சட்டத்திற்கும் விளக்கம் கூற வேண்டும். ஒவ்வொரு வழக்கிலும் சட்டத்தின் நிலை என்ன என்பதை விளக்கிக் கூற வேண்டிய கடமை நீதித் துறையைச் சார்ந்தது.

ஏற்கனவே வழக்கத்திலுள்ள சட்டங்களுக்கும் அரசியல் அமைப்புச் சட்டத்திற்கும் விளக்கம் கூறி வழக்குகளை நேர்மையின் அடிப்படையில் விசாரித்துத் தீர்ப்புக் கூறும் பொழுது தேவைப்படும் புதுச்சட்டங்களை நீதிபதிகள் இயற்றிக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளனர்.

எல்லா நாடுகளிலும் சட்டத்தையும் குடிமக்களின் உரிமைகளையும் பாதுகாக்க நீதித்துறை பொறுப்பேற்றுள்ளது. பல நாடுகளிலும் அரசியல் அமைப்பின் மூலமாகக் குடிமக்களுக்குப் பல அடிப்படை உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. இந்த அடிப்படை உரிமைகளை நீதித்துறையே பாதுகாக்கிறது.

நெகிழா அரசியல் அமைப்பைப் பெற்றுள்ள சில நாடுகளில் உதாரணமாக, அமெரிக்காவிலும் இந்தியாவிலும் அரசியல் அமைப்பின் பாதுகாவலனுக நீதித்துறை இயங்குகிறது. தன்னுடைய நீதிப் புனர் ஆலோசனை அதிகாரத்தின் அமூல் அரசியல் அமைப்பிற்கு எதிராகச் சட்டமன்றம் இயற்றும் சட்டங்களையும் ஆட்சித்துறை பிரகடனம் செய்யும் கட்டளைகளையும் நிராகரிக்க நீதித்துறை உரிமை பெற்றுள்ளது.

அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ள அரசாங்கத்தில் சட்டமன்றம், ஆட்சித்துறை ஆகிய பிரிவுகளின் ஆதிக்க எல்லைகளை நிர்ணயிக்கும் அதிகாரம் நீதித்துறையினிடம் கொடுக்கப் பட்டுள்ளது. உதாரணமாக, அதிகாரப் பிரிவினைக் கொள்கையைப் பின்பற்றி அமைக்கப்பட்ட அமெரிக்க அரசியல் முறையில் காங்கிரஸின் ஆதிக்க எல்லையை ஊர்ஜிதப் படுத்தும் உரிமையை அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் பெற்றுள்ளதைக் காணலாம்.

உள்ளுறைந்த அதிகாரங்களுக்கு விளக்கம் கொடுக்கவும் நீதித்துறை பொறுப்பேற்றுள்ளது. உள்ளுறைந்த அதிகாரங்கள் அரசியல் அமைப்பில் வெளிப்படையாகக் கூறப்படாத அதிகாரங்களைக் குறிக்கும். அமெரிக்கக் கூட்டாட்சியில் உள்ளுறைந்த அதிகாரங்களுக்கு விளக்கம் கூறுவதின் மூலமாகத் தான் கூட்டமைவு அரசாங்கத்தின் அதிகாரங்களை நீதிமன்றம் அதிகரிக்கச் செய்து விட்டது எனலாம்.

கூட்டாட்சி அமலில் இருக்கும் நாடுகளில் நீதித்துறையின் முக்கியத்துவம் அதிக அளவில் உணரப்படுகிறது. கூட்டாட்சியில் மத்திய அரசாங்கம், மாநில அரசாங்கங்கள் என இருவகை அரசாங்கங்கள் உள்ளன. இவ்விரண்டிற்கும் இடையே அதிகாரங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. இவ்வதிகாரங்களைப் பிரயோகிப்பதில் இவ்விருவகை அரசாங்கங்களிடையே சச்சரவுகளும் குழப்பமும் ஏற்பட வழியுண்டு. இவ்வாறு ஏற்படும் சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைக்க சுதந்திரமாகச் செயல்படக்கூடிய ஒரு நீதித்துறை மிகவும் தேவையானதாகக் கருதப்படுகிறது.

**2. நீதித்துறையின் எதேச்சைத்தன்மை (The Independence of the Judiciary)**

மக்களுக்கு நீதி கிடைக்க நீதித்துறை சுதந்திரமாகச் செயல் பட வேண்டும். சுதந்திரமாகச் செயல் படும் நீதித்துறையால் தான் மக்களுடைய உரிமைகளைப் பாதுகாக்க முடியும். சட்ட மன்றத்தின் செல்வாக்கிற்கும் ஆட்சித்துறையின் அதிகாரத் திற்கும் அப்பாற்பட்டுச் செயல்படும் நீதித்துறைதான் சுதந்திர மாக, இயங்க முடியும். நீதித்துறையின் சுதந்திரத்தைப் பாது காக்கக் கீழ்க்கண்ட காரியங்களைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

முதலாவதாக, நீதித்துறை சுதந்திரமாகச் செயல்பட நீதி பதிகளை ஆட்சித்துறைத்தலைவர் நியமிக்க வேண்டும். மேலும் ஆட்சித்துறைத்தலைவர் நீதிபதிகளை நியமிக்கும்பொழுது தலைமை நீதிபதியைக் கலந்தாலோசித்துக் கொள்ள வேண்டும்

நீதிபதிகள் சட்ட அறிவு, பொது அறிவு, நற்குணம் ஆகியவை களின் அடிப்படையில் நியமிக்கப்படல் வேண்டும். கட்சியின் செல்வாக்குக்கு அப்பாற்பட்டு நீதிபதிகளின் நியமனம் நடை பெற வேண்டும்.

நீதிபதிகளுக்கு அதிகப்படியான ஊதியமும், சிறந்த பணி நிலைகளும் அளிக்க வேண்டும். அதனால் நாணயமுடைய திறமையானவர்கள் நீதித்துறைப் பணிக்கு வருவதோடு வந்த பிறகு நேர்மையான முறையில் பணியாற்றவும் சுதந்திரமாகச் செயல்படவும் முடிகிறது.

நீதிபதிகள் சுதந்திரமாகச் செயல்பட அவர்களுக்கு பணிக் காப்பு அளிக்க வேண்டும். அதாவது சட்ட மன்றமோ ஆட்சித் துறையோ அவர்களுடைய பதவிக்காலம் முடிவதற்கு முன்ன தாகவே அவர்களைப் பதவியிலிருந்து நீக்க முடியாமலிருக்க வேண்டும். பதவிக் காலம் முடிவதற்கு முன்னாலே அவர்களைப் பதவியிலிருந்து ஆட்சித் துறையோ சட்ட மன்றமோ நீக்கி விட முடியுமானால் பயமின்றி சுதந்திரமாக நீதிபதிகள் செயல்பட முடியாது.

அதிகாரத்தைத் துர்பிரயோகம் செய்கின்ற நேர்மையற்ற நீதிபதிகளை பதவியிலிருந்து நீக்க பாரபட்சமற்ற ஒரு முறை இருக்க வேண்டும். அமெரிக்க நாட்டிலும் இந்திய நாட்டிலும் தவறான முறையில் நடந்து கொள்ளும் நீதிபதிகள் குற்ற விசாரணை மூலம் பதவியிலிருந்து நீக்கப்படுகின்றனர். நீதிபதி

களின் சுதந்திரத்தன்மையைப் பாதுகாக்க நீதிவிசாரணை மூலம் தவருன பாதையில் சென்ற நீதிபதிகளைப் பதவி விலக்கம் செய்வதே சிறந்த முறையாகும்.

**3) நீதித் துறையின் அமைப்பு (Organisation of the Judiciary)**

ஒவ்வொரு நாட்டிலும் நீதித்துறை ஒரு சில கோட்பாடுகளின் அடிப்படையில் அமைக்கப்படுகின்றது. ஜனநாயக நாடுகள் எல்லாவற்றிலும் நீதித்துறை பாரபட்சமற்ற முறையிலும் சுதந்திரமாகச் செயல்படும் நிலையிலும் சட்டத்தின் ஆட்சியின் அடிப்படையிலும் நிறுவப்படுகிறது. இவைகளைக் கருத்தில் கொள்ளாது அமைக்கப்படும் நீதித்துறை நிச்சயமாக மக்களுடைய அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள முடியாது.

பொதுவாக நீதித்துறை ஒரு ஏணியைப் போல் அமைக்கப்பட்டுள்ளது. அதாவது நீதித்துறையிலுள்ள நீதிமன்றங்கள் ஒன்றன் மேல் ஒன்று அமைக்கப்பட்டு கீழ்மன்ற தீர்ப்புகளுக்கு எதிராகமேல் நீதிமன்றத்திடம் முறையிடும் வசதியுடன் ஏற்படுத்தப்படுகிறது. நீதித்துறையின் உச்சத்தில் ஒரு நீதிமன்றத்தின் தீர்ப்பை மாற்றி அமைக்க அல்லது நிராகரிக்க உரிமை பெற்ற உயர் நீதிமன்றம் ஒன்று அமைக்கப்படுகிறது. இவ்வாறு உயர் நீதி மன்றத்திற்கு இறுதி அதிகாரம் அளிப்பதற்குக் காரணம் எல்லா நீதிமன்றங்களும் கீழிலிருந்து மேல்வரை ஒரே மாதிரியான சட்ட விளக்கம் தர வேண்டும் என்பதாகும். மேல் முறையீட்டு நீதி மன்றத்தில் அதாவது முறையீடு செய்யும் மன்றத்தில் நீதிபதிகள் ஒன்ருக இருந்து பெரும் பான்மை வாக்கின் மூலம் தீர்ப்பளிக்கின்றனர். பெரும்பான்மையான நீதிபதிகளின் கருத்தும், சிறுபான்மையான நீதிபதிகளின் கருத்தும் தெரிவிக்கப்படுகிறது. நீதிமன்றத் தீர்ப்புக்களின் மீது தரும் விளக்கங்களும் அபிப்பிராயங்களும் வருங்காலத்தில் சட்டம் ஏற்பட ஒரு முக்கிய மூலமாக விளங்குகிறது.

கூட்டாட்சி நாடுகளில் இரண்டு வகையான நீதிமன்றங்கள் உள்ளன. அவைகள் கூட்டமைவு நீதிமன்றங்கள் எனவும், மாநில நீதிமன்றங்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. கூட்டமைவு நீதிமன்றங்கள் மத்திய அரசாங்கத்திற்கும் மாநிலங்களுக்கு மிடையே ஏற்படும் சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைக்கின்றது. அதே நேரத்தில் மாநில நீதிமன்றங்கள் வட்டார முக்கியத்துவம் வாய்ந்த காரியங்கள் மீது தோன்றும் வழக்குகளைக் கவனிக்கின்றன. அமெரிக்காவில் உதாரணமாக இரு வகை நீதிமன்றங்கள் உள்ளன. ஆனல் இந்தியாவில் ஒரே சீரான நீதி மன்றமே உள்ளது.

சர்வாதிகார நாடுகளில் நீதிபதிகள் சுதந்திரமாகச் செயல் பட முடிவதில்லை. சர்வாதிகாரிகளின் விருப்பத்திற்கு இணங்க நீதிமன்றத்தின் தீர்ப்டம் அமைகிறது. எனவே, நீதிமன்றம் மக்களிடைய அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்க முடியாதநிலை ஏற்பட்டு விடுகிறது.

**4. நீதித் துறைக்கும், அரசாங்கத்தின் மற்ற பிரிவுகளுக்கும் இடையே உள்ள தொடர்பு ;- ( The Relation between judiciary and other Branches of the Government )**

அரசாங்க நிருவாகம் செவ்வனே நடை பெற வேண்டுமானால் அதனுடைய மூன்று பிரிவுகளும் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டிருக்க வேண்டும். ஒன்றுக் கொன்று எந்தவிதத் தொடர்புமே இல்லாத நிலையில் சட்டமன்றமும், ஆட்சித் துறையும், நீதித்துறையும் அமைக்கப்படுமானல் நிர்வாக முடக்கம்தான் ஏற்படும்.

நீதித்துறையின் மீது ஆட்சித் துறைக்கு ஏற்பட்டுள்ள கட்டுப் பாடு தவிர்க்க முடியாதது. நீதித்துறை அளிக்கும் தீர்ப்பை ஆட்சித்துறை அமல் படுத்த வேண்டியதாயுள்ளது. பொதுவாக நீதித் துறைப்பணி அரசாங்கப் பணியின் ஒரு பகுதியாகவே உள்ளது. நீதிபதிகளை நியமிப்பதும் அவர்களுக்குப் பதவி உயர்வு செய்து வைப்பதுமான சில கடமைகளை ஆட்சித்துறை யின் தலைவர் செய்வதாலும், குற்றவாளிகளுக்கு மன்னிப்பு அளிக்கவும் தண்டனையைக் குறைக்கவும் ஆட்சித்துறை தலைவருக்கு உரிமை வழங்கப் பட்டுள்ளமையாலும், ஆட்சித் துறைக்கும் அதன் மூலமாகச் சட்ட மன்றத்திற்கும் நீதித் துறைக்கும் இடையே நெருங்கிய தொடர்பு ஏற்பட்டு விடுகிறது. பொதுவாகப் பாராளுமன்ற முறையில் இந்தத் தொடர்பு அதிக அளவில் உள்ளது.

அதே நேரத்தில் நீதித்துறைக்கு ஆட்சித்துறையின் மீதுள்ள கட்டுப்பாடும் தவிர்க்க முடியாததே. ஆட்சித்துறை அதிகாரிகள் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரிப்பதின் மூலமாகவும், கூட்டாட்சி நிலவும் அரசுகளில் சட்ட மன்றம் இயற்றியச் சட்டங் களைப் புனராய்வு செய்வதற்குப் பெற்றுள்ள அதிகாரத்தின் மூலமாகவும் ஆட்சித் துறையின் மீது நீதித் துறைக்குச் செல்வாக்கு ஏற்பட்டுள்ளது.

சில நாடுகளில் சட்டமன்றம் நீதித் துறை மீது கட்டுப்பாடு மேற் கொள்ளும் நிலை உள்ளது. நீதித்துறை சட்ட மன்றத்தால்

ஏற்படுத்தப்படும் நாடுகளும் உள்ளன. அமெரிக்காவில் நீதிபதிகளின் எண்ணிக்கையும் அவர்களுடைய ஊதியமும் காங்கிரஸின் மூலம் நிர்ணயிக்கப் படுகின்றன. ஆட்சித் துறைத் தலைவர் செய்கின்ற நீதித்துறை சம்பந்தப் பட்ட நியமனங்கள் யாவும் காங்கிரசால் ஒப்புக் கொள்ளப்பட வேண்டும் என்றுள்ளது. மாவட்ட நீதிபதிகள் செனடர்களின் விருப்பத்தைப் பொறுத்தே நியமிக்கப் படுகின்றனர். ஆங்கிலேய நாட்டில் பிரபுக்கள் சபை தான் உன்னத மேல் முறையீட்டு மன்றமாகச் செயல்படுகிறது.

இவைகளை யெல்லாம் பார்க்கும் பொழுது எந்த அரசாங்க முறையிலானாலும் சரி அரசாங்கத்தின் மூன்று பிரிவுகளும் தனிப்பட்ட முறையில் ஒன்றுக்கொன்று எந்த விதத் தொடர்புமே இல்லாத நிலையில் இயங்க வேண்டுமென்றிருந்தால் அரசாங்கம் செயல்படவே முடியாது என்றே தோன்றுகிறது. எனவேதான் ஏறக்குறைய எல்லா நாடுகளிலும் அரசாங்கப் பிரிவுகளிடையே ஓரளவிற்காயினும் தொடர்பிருக்கும் வகையில் அரசாங்கப் பொறி அமைக்கப் பட்டுள்ளது.

# 6. வாக்காளர்களும் பிரதிநிதித்துவமும்

## (Electorate and Representation)

### வாக்காளர் (Electorate)

**1.** வாக்காளரும் வாக்குரிமையும் (Electorate and the Right to Vote)

தற்கால அரசுகள் மக்கள் தொகை அளவில் பெரியவைகளாக இருப்பதால் நேரடி மக்களாட்சி நடைபெற வழியில்லை. எனவே, மறைமுகமான முறை பின்பற்றப்படுகிறது. அதாவது மக்களுடைய பிரதிநிதிகள் மூலமாக அரசாங்கம் நடத்தப் படுகிறது. மக்களாட்சியில் இறுதி அதிகாரம் மக்களிடத்தில் உள்ளது. ஆனால் மக்கள் அந்த அதிகாரத்தைத் தங்களுடைய பிரதிநிதிகளின் மூலமாகப் பிரயோகிக்கின்றனர். பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்காக மக்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படுகிறது. வாக்குரிமை பெற்றவர்கள் வாக்காளர்கள் எனப் படுவார்கள்.

வாக்காளர்கள் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதோடு மட்டுமல்லாமல் அரசாங்கத்தின் கொள்கைகள் மீதும் செய்கைகள் மீதும் தங்களுடைய தீர்ப்பை அளிக்கின்றனர், அதாவது தங்களுக்கு விருப்பமில்லாத நேர்மையற்ற அரசாங்கத்தை திரும்பவும் மக்கள் தேர்ந்தெடுப்பதில்லை. தேர்தலில் அதிக வாக்குகளைப் பெறுகின்ற வேட்பாளர் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதாகக் கருதப்படுகிறார். இவ்வாறு மக்களாட்சி அரசாங்கம் வாக்காளர்களை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது.

ஓர் அரசில் வாழுகின்ற எல்லோருக்கும் வாக்குரிமை அளிக்கப்படுவதில்லை. வாக்குரிமை பெறுவதற்கு ஒரு சில குறிப்பிட்ட தகுதிகள் நிர்ணயிக்கப்படுகின்றன. வயது வந்தோர் வாக்குரிமை அளிக்கப்படும் நாடுகளில் ஒரு குறிப்பிட்ட வயதை அடைந்தவர்க்கு மட்டும்தான் தேர்தலில் வாக்களிக்க உரிமை அளிக்கப்படுகிறது. மேலும், அன்னியர்களுக்கும் புத்தி சுவாதீன மற்றவர்களுக்கும், குற்ற வழக்கிற்காக சிறைவாசம் சென்றவர்க்கும் பொதுவாக வாக்குரிமை அளிக்கப்படுவதில்லை. சில

நாடுகளில் பெண்களுக்குக்கூட வாக்குரிமை அளிக்கப்படுவதில்லை. ஜனநாயக வளர்ச்சி அடைந்த நாடுகளில் வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்படுகிறது.

## 2. வயது வந்தோர் வாக்குரிமை (Adult Franchise)

வயது வந்தோர் வாக்குரிமை அளிக்கப்படும் நாடுகளில் குறிப்பிட்ட வயதை எய்திய அனைவருக்கும் தேர்தலில் பங்கெடுத்துக்கொள்ள வாய்ப்பளிக்கப்படுகிறது. ஆண், பெண் அனைவரும் கற்றவர்களானாலும் சரி, கல்லாதவர்களானாலும் சரி பணக்காரராஞலும் சரி, ஏழையானாலும் சரி எந்த ஒரு வித்தியாசமும் இன்றி குறிப்பிட்ட வயதை எய்தியதும் வாக்குரிமை பெறும் முறை வயது வந்தோர் வாக்குரிமை எனப்படுகிறது. இந்தியாவில் 21 வயதை எய்தியவர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்படுகிறது. இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற மக்களாட்சி வளர்ச்சியடைந்த நாடுகளில் 18 வயதை அடைந்தவர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படுகிறது. இந்தியாவிலும் இந்த வயதை 18 ஆகக் குறைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. அன்னியர், திவாலானவர், புத்தி சுவாதீன மில்லாதவர் களுக்கு மட்டும் வாக்குரிமை அளிக்கப்படுவதில்லை. சுவிட்சர்லாந்தில் பெண்களுக்கு அண்மையில் தான் வாக்குரிமை அளிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. ஆப்ரிக்க நாடுகளாகிய ரொடேசியா, கென்யா, சாம்பியா உகண்டா போன்ற நாடுகளில் வயது வந்தோர் வாக்குரிமை அளிக்கப்படவில்லை. இந்த நாடுகளில் வருமானம் உடைமை கல்வி ஆகியவைகளின் அடிப்படையில் வாக்குரிமை அளிக்கப் படுகிறது. வயது வந்தோர் வாக்குரிமை பற்றி கருத்து வேற்றுமைகள் உள்ளன. அவைகளை கீழ்க் கண்டபடி விளக்கலாம்.

(a) வயது வந்தோர் வாக்குரிமை ஆதரவான கருத்துக்கள் (Arguments in support of Adult Franchise) வயது வந்தோர் வாக்குரிமை மக்களாட்சியை முழுமையாக உணரச் செய்கிறது. ஒரு சிலர் மட்டும் வாக்குரிமை அனுபவிக்குமாறு செய்வது ஜனநாயக கருத்துக்கு எதிரான செயலாகும். உடைமை கல்வி போன்ற தகுதிகளின் அடிப்படையில் வாக்குரிமை அளித்தால் ஒரு சிலருக்கு அரசாங்கச் செயல்களில் பங்கு பெற வாய்ப்பில்லாமலாகி விடுகிறது. உண்மையான மக்களாட்சியில் அரசாங்கத்தில் பங்கு பெற எல்லோருக்கும் வாய்ப்பளிக்கப்படல் வேண்டும். வயது வந்தோர் வாக்குரிமை இந்த வாய்ப்பினை அளிக்கிறது.

வயது வந்தோர் வாக்குரிமைக்குப் பதில் வேறு ஏதாவது தகுதிகளின் அடிப்படையில் வாக்குரிமை அளிக்கப் படும் நாடுகளில்

ஒரு சில மக்கள்தான் அரசியல் அதிகாரத்தைப் பிரயோகிக்க முடிகிறது. ஒரு சிலர் மட்டும் அதிகாரத்தைப் பிரயோகிக்கின்ற அரசாங்க முறையை மக்களாட்சி என்று அழைப்பதைவிட குழு ஆட்சி என்றே அழைக்க வேண்டும். குழு ஆட்சி பொது நன்மையைப் புறக்கணித்து விட்டு, ஒருசிலரின் நன்மைக்காகவே பாடு படும் நேர்மையற்ற ஆட்சியாகச் செயல் படும். எனவே, வயது வந்தோர் வாக்குரிமை உண்மையான ஜனநாயக அரசாங்கத்தை ஏற்படுத்துகிறது என்ருல் அது மிகையாகாது.

வாக்குரிமையின் மூலம் மக்கள் (வாக்காளர்கள்) அரசியல் அறிவு பெறுகின்றனர். தங்களுடைய பிரதிநிதிகளைத் தேந்தெடுப் பதற்காக வாக்களிக்கின்றனர். வாக்களிப்பதால் அரசாங்கத்தைப் பற்றி க்கூடுதலாகத் தெரிந்து கொள்கின்றனர். அதனுல் அரசியல் விழிப்புடையவர்களாகவும் ஆகிவிடுகின்றனர். இவ்வாறு வயது வந்தோர் வாக்குரிமை மக்களுக்கு அரசியல் களத்தில் நல்ல பயிற்சியையும் அனுபவத்தையும் அளிக்கிறது என்பதில் சிறிதள வேனும் ஐயமில்லை.

(b) வயது வந்தோர் வாக்குரிமைக்கு எதிரான கருத்துக்கள்:- (Arguments against Adult Franchise). மெக்காலே, லீக்கி, ஹென்றி மெயின், ப்ளன்ட்சிலி, மில் போன்றவர்கள் வயது வந்தோர் வாக்குரிமைக்கு எதிராகக்கருத்து தெரிவித்துள்ளனர். அவர்கள் கருத்துப்படி வயது வந்தோர் வாக்குரிமையின் மூலமாக ஆளுவதற்குத் தகுதியில்லாதவர்கள் கூட ஆட்சி செய்ய உரிமை பெற்று விடுகின்றனர். 70 சதமானத்திற்கு மேல் கல்வியறிவில் லாத மக்களைக் கொண்ட இந்தியா போன்ற நாடுகளில் வயது வந்தோர் வாக்குரிமை அளிக்கப்படுவது தவறு என்று சிலர் கருது கின்றனர். அவர்கள் இவ்வாறு கருதுவதற்குக் காரனம் என்ன வெனில் கல்லாதவர்கள் அரசியல் கட்சியின் பொய்யான பிர சாரங்களுக்கு இணங்கிக் கட்சித் தலைவர்களின் உண்மையற்ற வாக்குறுதிகளை நம்பித் தவருன அரசாங்கத்தை ஏற்படுத்தி முடிவில் ஏமாந்துபோய்விடுகின்றனர். ஆனுல் கற்றவர்களுக்கு மட்டும் வாக்குரிமை அளிக்கப்பட்டால் முறையான ஓர் அரசாங் கத்தை ஏற்படுத்தலாம் என்பது அவர்கள் கருத்து.

வயது வந்தோர் வாக்குரிமையின் விளைவாக அறிவற்றவர் களும் கல்லாதவர்களும் ஆட்சியைக் கைப்பற்ற முடிவதால் நாட்டின் வளர்ச்சி பாதிக்கப் படுவதோடு முடிவில் அரசே அழிய நேரிடலாம். அரசியல் அமைப்பையும், அரசாங்கத்தின் அதி காரங்களையும், அரசியல் கட்சிகளின் நிலைமையையும் பற்றி

எதுவும் தெரியாத வாக்காளன் ஒருவனுல் பொருத்தமான ஒரு வேட்பாளரை எப்படி தேர்ந்தெடுக்க முடியும்?

மில் உடைமை தகுதியின் முக்கியத்துவத்தை உணர்த்தி வயது வந்தோர் வாக்குரிமை கூடாது என்கிருர். அவருடைய கருத்து என்ன வெனில், வரி செலுத்துபவர்கள் தாம் வாக்களிக்கும் உரிமை பெற்றிருக்க வேண்டுமாம். வரி எதுவும் செலுத்தாதவர்கள் பொருள் சிக்கனம் ஏற்படுத்த விரும்பமாட்டார்கள். வீண் செலவு செய்யத்தான் அவர்கள் விரும்புவார்கள் என்று மில் குறிப்பிடுகின்ருர். உடைமையுடையவர்களும் உடைமை இல்லாதவர்களும் ஒரே விதமான அரசியல் உரிமையைப் பெற்றிருப்பார்களேயானுல் உடைமையுடையவர்கள் அதிகமாக இன்னல்பட வேண்டியதுவரும். உடைமை இல்லாதவர்கள் அதிகமான நன்மையை அடைவார்கள். எனவே, வயது வந்தோர் வாக்குரிமை அளிக்கக் கூடாது என்கின்ருர்.

வயது வந்தோர் வாக்குரிமையை எதிர்ப்பவர்கள் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கக் கூடாது என்கின்றனர். பெண்கள் அரசியல் செயல்களில் பங்கு பெறுவதற்கான திறமையையும் அறிவையும் பெற்றிருக்கவில்லை, அவர்களுடைய முக்கியவேலை குழந்தைகளை பராமரித்தலும் குடும்பத்தைப் பேணுதலுமாகும், அவர்களுக்கு வாக்குரிமை அளித்தால் அவர்களுடைய கவனம் அரசியலில் ஈர்க்கப்பட்டுவிடும். எனவே, பெண்களுக்கு வாக்கு உரிமை அளித்தல் கூடாது என்று வாதாடுகின்றனர்.

## 3. பெண்கள் வாக்குரிமை (Woman Suffrage)

பலகாலமாக பெண்கள் வாக்குரிமை பெருமலிருந்தார்கள். அண்மையில்தான் பல நாடுகளிலும் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டுள்ளது. ஆதியில் பெண்கள் வீட்டுக் காரியங்களைக் கவனிக்க வேண்டும் என்றும் ஆண்கள்தான் வீட்டுக்குத் தலைவனுய் இருந்து அரசியலிலும் பங்குக்கொள்ள வேண்டும் என்றும் கருதப்பட்டது. ஆனுல் தற்காலத்தில் முக்கியமாக தொழிற்புரட்சி ஏற்பட்டதன் விளைவாக பெண்களும் ஆண்களுக்கு நிகராகப் போட்டி போடலாயினர். அரசியலிலும் பங்கு கொள்ளத் துணிந்தனர். ஆண்களைப் போலவே பெண்களும் பொருளீட்ட முடிவதால் அரசியல் களத்திலும் அவர்களுக்கு ஆண்களைப் போலவே சகல உரிமைகளும் வழங்கப்படலாயிற்று. பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதிலும் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

(a) பெண்கள் வாக்குரிமைக்கு ஆதரவான கருத்துக்கள் (Arguments in favour of Women Suffrage) அரசாங்கம் ஆண்களுக்கு மட்டும் என்று ஏற்பட்டதன்று சமூகத்திற்கு என்று ஏற்படுத்தப் பட்டது தான் அரசாங்கம். சமூகத்தில் ஆண்களும் வாழுகின்றனர் பெண்களும் வாழுகின்றனர். எனவே, அரசாங்கம் ஆண், பெண் இரு பாலர் களுக்காகவும் தான் செயல் படுகிறது. இரு பாலாரின் நன்மைக்காகவும் செயல் படுகின்ற அரசாங்கத்தைத் தேர்ந்தெடுப்பதில் ஒரு பாலாருக்கு உரிமை எதுவும் அளிக்கா மலிருப்பது அநாகரிகம். எனவே, பெண்களுக்கும் ஆண்களைப் போலவே வாக்குரிமை அளிக்கப் படல் வேண்டும். என்று கூறப்படுகிறது. உண்மையான ஜன நாயகத்தில் ஆண், பெண் இருவருக்கும் சம உரிமை வழங்கப்படல் வேண்டும்.

அறிவும் திறமையும் உடைய எத்தனையோ பெண்மணிகள் இன்று உலகில் உள்ளனர். அவர்கள் சமூகச் சேவையில் அதிக அக்கறை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். பெண்களுக்கு வாக்குரிமை அளிக்காவிட்டால் இந்த அறிவு பெற்ற, ஆற்றல் மிகுந்த பெண்மணிகளின் சேவையை அரசு பெற முடியாமல் போய்விடும். எனவே தான் பெண்களுக்கும் வாக்குரிமை அளிக்கப்படல் வேண்டும் எனப்படுகிறது.

பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படுவதால் பெண்களுடைய சீரியல் உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன. ஆண்களை விட பெண்கள் பலம் குன்றியவர்கள் எனக் கூறப்படுகிறது. எனவே, ஆண்கள் மட்டும் அரசியல் உரிமைகளை அனுபவிக்க நேர்ந்தால் ஒரு வேளை பெண்களுடைய சீரியல் சமூகம் மற்றும் பொருளாதார உரிமைகள் பறிக்கப்படலாம். எனவே, பெண்களுக்குத் தங்களுடைய உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அவர்களுக்கும் ஆண்களைப் போலவே சமமான ரீதியில் வாக்குரிமை அளிக்கப்படல் வேண்டும் என்று கூறப்படுகிறது.

(b) பெண்கள் வாக்குரிமைக்கு எதிரான கருத்துக்கள் (Arguments against women suffrage) பைஃனர் போன்றவர்கள் பெண்கள் அரசியலில் ஈடுபடுவதை எதிர்த்துக் கூறியுள்ளனர். பெண்களால் அரசுக்கு எந்த நன்மையையும் செய்துவிட முடியாது என்பதும், அவர்கள் அரசியலில் ஈடுபட்டால் ஆண்களுடைய அரசியல் ஆர்வம் கெட்டு விடும் என்பதும் அவர்களுடைய கருத்தாகும்.

பெண்கள் அரசியலில் பங்கு கொண்டால் அவர்களால் குடும்பத்தையும் வீட்டுப் பொறுப்பையும் கவனிக்க முடியாது போய்

விடும். குழந்தைகளைப் பராமரிப்பதும் மற்ற வீட்டுக் காரியங்களை கவனிப்பதும் பெண்களுடைய செயல். அதற்கு மாருக பெண்கள் அரசியலில் ஈடுபட்டால் குழந்தைகள் நல்ல முறையில் வளரமாட்டார்கள். ஒரு நல்ல குடிமகனை உருவாக்குவது ஒரு தாயின் கடமையாகும். அந்த கடமையிலிருந்து தாய் தவறி விட்டால் நாளைய உலகில் நல்ல பிரஜைகளாக அவளுடைய இன்றைய குழந்தைகள் திகழ மாட்டார்கள். மேலும் கணவனும் மனைவியும் அரசியல் கருத்து வேற்றுமை கொண்டிருந்தால் அதனுல் குடும்பத்தில் அமைதி குலைந்து குழந்தைகளின் வாழ்வும் பாதிக்கப்படலாம். எனவே, பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கக் கூடாது என்று கூறுகின்ருர்கள்.

பெண்கள் ராணுவப் பணிக்கு பொருத்த மற்றவர்கள் வாக்குரிமை பெற்றவர்கள் நெருக்கடி காலங்களில் இராணுவத்திலும் பணியாற்ற வேண்டியது வரும். அதனுல்தான் ஆண்களுக்கு மட்டும் தான் வாக்குரிமை அளிக்க வேண்டும். பெண்களுக்கு அளிக்க கூடாது என்று வாதாடுகின்றனர். மேலும் ஆண்களைப் போலல்லாமல் பெண்கள் எளிதில் உணர்ச்சி வசப்படுபவர்கள் என்பதால் அவர்கள் அரசியலுக்குப் பொறுத்த மற்றவர்களாக உள்ளனர். அரசியலில் திடமனதும் அமைதியாக காரியங்களை அணுகும் மனபக்குவமும் தேவை. இவ்வியல்புகள் ஆண்களிடம் தான் பொதுவாக உள்ளன. பெண்களிடம் இல்லை. எனவே, பெண்களுக்கு அரசியல் உரிமைகள் அளிப்பது தவறு என்று கருதப்படுகிறது.

பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதில் மேற்கூறிய கருத்து வேற்றுமைகள் இருப்பதால் இன்று பெண்களின் முக்கியதுவத்தை உணர்ந்த பல நாடுகளிலும் அவர்களுக்கு வாக்குரிமையும் மற்ற அரசியல் உரிமைகளும் அளிக்கப்பட்டு வருவதைக் காணலாம். முதலாம் உலகமகாயுத்தத்திற்கு முன்னதாகவே அமெரிக்கா, இங்கிலாந்து, கானடா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து, போன்ற நாடுகளில் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டு விட்டது. முதலாம் உலகப்போருக்குப் பின் சுவிட்சர்லாந்து, நெதார்லாந்து, பல்கேரியா, யுக்கோஸ்லேவியா, போர்ச்சுகல், இத்தாலி போன்ற நாடுகளைத் தவிர மற்ற நாடுகளிலெல்லாம் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கும் வழக்கம் ஆரம்பமானது. சுவிட்சர்லாந்து நாட்டில் கூட அண்மையில்தான் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது. ஆனுல் லத்தீன் அமெரிக்கா நாடுகளிலும் ஆசியாவின் பல பாகங்களிலும் பெண்களுக்கு வாக்குரிமை இன்னமும் அளிக்கப்படவில்லை. எனினும் உலகின் எல்லா

நாடுகளிலும் பெண்களுக்கும் இந்த உரிமை விரைவில் அளிக்கப்படலாம்.

4) வாக்குரிமை மீதான வேறு சில கட்டுப்பாடு (Other Restrictions on the Right to Vote)

அரசுகள் வாக்குரிமை அளிப்பதில் ஒரு சில கட்டுப்பாடுகளைக் குறிப்பிடவும் செய்யலாம். சில சில நாடுகள் வாக்குரிமை பெற வேண்டுபவர், வரி செலுத்தும் நிலச் சொந்தக்காரர்களாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றன. சில நாடுகள் குறிப்பிட்ட சில கல்வி தகுதிகளைப் பெற்றவர்களுக்கு மட்டும் வாக்குரிமை வழங்கியுள்ளன. இன்னும் குடியுரிமை, வயது, இனம், வசிக்குமிடம் ஆகியவைகளின் அடிப்படையிலும் சில நாடுகள் வாக்குரிமை வழங்குகின்றன. இவை ஒவ்வொன்றையும்பற்றி இங்கு ஆராயலாம்.

(i) சொத்து பெற்றிருக்கும் தகுதி:– (Property qualification) படைமானிய சமூகத்தின் விளைவாக ஐரோப்பிய நாடுகளிலும் கூட சொத்து இல்லாதவர்களுக்கு வாக்குரிமை கிடையாது என்றிருந்தது. சொத்து வைத்திராதவர்கள் சொத்து வரி செலுத்த முடியாது. எனவே வரி செலுத்தாதவர்களுக்கு வாக்குரிமை இல்லை என்றிருந்தது. ஆனால் வரி செலுத்தாதவர்களுக்கு வாக்குரிமை இல்லை என்று கூறுவது தவறு. ஏனெனில் சொத்து இல்லாதவர்களும் கூட மறைமுக வரி செலுத்துபவர்கள்தான். எனவே, சொத்து இல்லை என்பதற்காக வரியே செலுத்தவில்லை என்று கூறி அவர்களுக்கு வாக்குரிமை அளிக்காமலிருப்பது நியாயமில்லை. இங்கிலாந்தில் 1832–ஆம் ஆண்டு வரை ஆண்டுக்கு 40 ஷில்லிங்ஸ் பெறுமான சொத்து வைத்திருப்பவர்களுக்குத்தான் வாக்குரிமை அளிக்கப்பட்டது. இந்தியா ஆங்கிலேயர்களின் ஆட்சிக்குக் கீழ் இருந்தபொழுது வாக்குரிமை பெற சொத்து பெற்றிருக்கும்தகுதியோ அல்லது கல்வி பெற்றிருக்க வேண்டிய தகுதியோதான் பின்பற்றப்பட்டது. அமெரிக்காவில் கூட சில மாநிலங்களில் சொத்து தகுதி அல்லது வரி செலுத்தும் தகுதி நிர்ணயிக்கப்பட்டிருந்தது. அண்மையில்தான் வாக்குரிமை பெற சொத்து வைத்திருக்கவேண்டும் என்னும் நிலை மாறியது. பிறப்பின் மூலம் சிலருக்கு சொத்து பெறும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. அந்த பாக்கியம் சிலருடைய வாழ் நாளில் ஏற்படாமலேயே போய்விடுகிறது. அதற்காக வாக்குரிமை தர மறுப்பது நேர்மையான செயல் அன்று.

(ii) கல்வித் தகுதி (Educational Qualification) பிரேசில் போன்ற நாடுகளில் கல்லாதவர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்

படவில்லை. ஜான்ஸ்டுவர்டு மில், லீக்கி போன்றவர்கள் வாக்குரிமை அளிப்பதற்குக் குறிப்பிட்ட கல்வித் தகுதிகள் ஏதாவது நிர்ணயிக்கப் பட வேண்டும் என்கின்றனர். அதாவது கல்வித் தகுதிகள் பெருதவர்கள் தங்களுடைய அறியாமையின் காரணமாகத்திறமையான அரசாங்கத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள மாட்டார்கள். எனவே, கல்வி பெருதவர்களுக்கு வாக்குரிமை அளித்தல் கூடாது என்று அவர்கள் கருதுகின்றனர். ஆனல் கிரகாம் வாலஸ், பைனர் போன்றவர்கள் கல்வியை வாக்குரிமை பெறுவதற்கான ஒரு தகுதியாகக் கருதவில்லை. அரசியல், மக்களுடைய விருப்பு வெறுப்புக்களையும். தேவைகளையும் பொறுத்து அமைய வேண்டுமேதவிர மக்கள் பெற்றிருக்கும் கல்வித்தகுதியைப் பொறுத்து அமைவதில்லை என்று அவர்கள் கருதுகின்றனர். எனவே, கல்வித் தகுதியின் அடிப்படையில் வாக்குரிமை அளிப்பது அநேக பிரஜைகளுடைய சுதந்திரத்தை அழிப்பதாகும் என்று கூறுகின்றனர்.

(iii) வயதுத்தகுதி (Age Qualification) வாக்குரிமை பெற வயது ஒரு தகுதியாகக் கருதப்படுகிறது. ஒருவன் முழு மனிதனுக வளரும் வரையிலும் அவனுக்கு வாக்குரிமை அளிக்கக் கூடாது எனப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட வயதை எய்தியபிறகுதான் அவனுக்குப் பகுத்தறிவுத் தன்மையும் எதையும் சீர்தூக்கி அறியும் இயல்பும் ஏற்படுகின்றன. எனவேதான் அந்தக் குறிப்பிட்ட வயது வந்தவர்களுக்கு மட்டும் வாக்குரிமை அளிக்கப்படுகிறது. உதாரணமாக, 10 வயதுச்சிறுவனைக் காட்டிலும் 18 வயது வந்த வாலிபன் நிச்சயமாக அதிக அறிவு பெற்றவனுகத்தான் இருக்க வேண்டும். ஆனல் இந்த வயதை நிர்ணயிப்பதில் நாட்டுக்கு நாடு மாறுபாடு உள்ளது. சில நாடுகளில் 18 வயது எனவும் வேறு சில நாடுகளில் 21 அல்லது 25 எனவும் வாக்குரிமை பெறும் வயது நிர்ணயிக்கபட்டுள்ளது. இந்தியாவில் தற்பொழுது இந்த வயது 21 என உள்ளது. ஆனல் 18 வயதை எய்திய அனைவரும் வாக்குரிமை பெற வேண்டும் என்னும் கருத்தும் செல்வாக்கு பெற்று வருகின்ற நிலையை இன்றைய சூழ்நிலையில் காணலாம்.

(iv) குறைபாடுகளில்லாதிருத்தல்: (To be free from shortcomiugs)

குறிப்பிட்ட எல்லா நாடுகளிலும் வாக்குரிமை பெற ஒரு சில குறைபாடுகளில்லாமலிருக்க வேண்டும் என்று உள்ளது. அதாவது திவாலானவர், புத்தி சுவாதீனமற்றவர், குற்றவாளிகள் அன்னியர் ஆகியவர்களுக்கு பல நாடுகளிலும் பொதுவாக வாக்குரிமை அளிக்கப்படுவதில்லை.

5. வாக்களிப்பு முறைகள்:— (Methods of voting)

உலகின் பல நாடுகளிலும் பலவிதமான வாக்குமுறைகள் உள்ளன. அவைகளை இங்கு ஆராயலாம்.

(i) வெளிப்படையான வாக்களிப்பும் இரகசிய வாக்களிப்பும்: (Open and secret voting). வாக்களிக்க வெளிப்படையான முறை இரகசியமுறை என இருமுறைகள் உள்ளன. வெளிப்படையான முறையின்கீழ் மக்கள் வெளிப்படையாகவே தங்களுடைய வாக்குகளை அளித்தனர். ஆனால் இரகசியமுறையில் யார் யாருக்கு வாக்களித்தனர் என்பதை தெரிந்துகொள்ளவே முடியாது. மான்டேஸ்கியு, மில், டிரட்ஸ்கி போன்றவர்கள் வெளிப்படையான வாக்களிப்பு முறையே சிறந்தது எனக்கருதினர். வெளிப்படையான முறையினால் மக்கள் அதிக அளவில் அறிவு பெறுவதுடன் பொதுக்காரியங்களை திறனாய்வு செய்யவும் இது ஒரு சிறந்த முறை என அவர்கள் கருதினர். 19ம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் வெளிப்படையான வாக்களிப்பு முறையே அமலில் இருந்ததாகத் தெரிகிறது.

வெளிப்படையான வாக்களிப்பு முறையில் நன்மைகள் பல இருந்தாலும் மக்கள் தொகை அளவில் பெரிதாக இருக்கும் நாடுகளுக்கு இந்த வாக்களிப்பு முறை பயன் படாது. மேலும் வெளிப்படையான வாக்களிப்பு முறையில் யார் யாருக்கு வாக்களிக்கின்றனர் என்பதை வேட்பாளர்களும் அவர்களுடைய கட்சியினரும் தெரிந்து கொள்ள முடிவதால் வாக்காளர்களிடையே விரோத மனப்பான்மை தோன்றுகிறது. மேலும், சில வேளைகளில் வாக்காளர்களுடைய உயிருக்கே ஆபத்து ஏற்படுகிறது. அதனால் வாக்காளர்கள் தங்களுடைய வாக்குகளை அச்சமின்றி அளிக்க முடிவதில்லை. எனவேதான் இப்போது இரகசிய வாக்களிப்பு முறை பின்பற்றப்படுகிறது.

(ii) தபால் அல்லது பதிவுவாக்களிப்பு முறை (Postal voting and Proxy voting) பொதுவாக வாக்காளர் வாக்குச் சாவடிக்குச் சென்றுதான் தனது வாக்கினைஅளிக்க வேண்டும். ஆனால் சில நாடுகளில் சில சந்தர்ப்பங்களில் தபால் மூலமாகவோ அல்லது பதிவுமுறை மூலமாகவோ வாக்களிக்கப் பட்டுள்ளது. இங்கிலாந்து, அமெரிக்கா, ரொடேசியா, மலேயா போன்ற நாடுகளில் சில அசௌகரியங்களை முன்னிட்டு வாக்குச் சாவடிக்குச் சென்று வாக்களிக்க முடியாதவர்கள் தபால் மூலமாக வாக்களிக்க வசதி அளிக்கப்படுகிறது. மலேயாவில் இராணுவத்தினரும், தேர்தல் அதிகாரிகளும், காவல் பணியாளர்களும் தபால் மூலம் வாக்களிக்கலாம் என்று 1955ம் ஆண்டு வரையிலும் இருந்தது.

இந்தியாவிலும் அரசாங்க அலுவலர்களுக்கும் இராணுவப்பணி யாளர்களுக்கும் தபால் அல்லது பதிவு வாக்குமுறை மூலம் வாக்களிக்க உரிமை வழங்கப்பட்டுள்ளது.

ஜனநாயகம் வளர்ச்சி பெருத நாடுகளில் தபால் அல்லது பதிவு வாக்குமுறை அனுமதிக்கப்படுவதில் தவறில்லை. இந்த முறையில் பல தீமைகளும் உள்ளன. தபால் மூலம் வாக்களிக்கும் போது அது வெளிப்படையான வாக்கு முறையாகி விடுகிறது. எனவே, பல அலுவலர்கள் தங்கள் வாக்குரிமையை பிரயோகிக் காமலே இருந்து விடுகின்றனர். ஆகவே ஜன நாயக வளர்ச்சி பெருத நாடுகளுக்கு தபால் அல்லது பதிவு வாக்கு முறை உகந்த தாகத் தெரியவில்லை.

(iii) பன்மை அல்லது மதிப்புக் கூடிய வாக்களிப்பு முறை (Plural and Weighted Voting System) ஜனநாயக கருத்துப்படி எல்லோருக்கும் சமவாய்ப்பு அளிக்கப்படல் வேண்டும். எந்த ஒரு காரணத்திற்காகவும் உரிமைகள் வழங்குவதில் மனிதனுக்கு மனிதன் வேறுபாடு காட்டுதல் கூடாது. எனவே, ஜனநாயக தேர்தலில் நாட்டில் ஒவ்வொரு தனி மனிதனும் ஒரு வாக்குதான் அளிக்க வேண்டும் என்றுள்ளது. அவ்வாறே ஒவ்வொரு மனிதனும் அளிக்கும் ஒவ்வொரு வாக்கிற்கும் ஒரே வித மதிப்பு தான் அளிக்கப்படல் வேண்டும். ஆனால் அதற்கு நேர்மாருக ஒரு மனிதன் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வாக்குகள் வரை அளிக்கலாம் என்றிருந்தால் அந்த வாக்களிப்பு முறைக்கு பன்மை அல்லது மதிப்புக் கூடிய வாக்களிப்பு முறை என்று பெயர்.

பெல்ஜியம் நாட்டில் 1893—ம் ஆண்டில் பன்மை வாக் களிப்பு முறை ஏற்படுத்தப்பட்டு 1921ல் கைவிடப்பட்டது. இங்கிலாந்தில் ஒருவன் பெற்றிருக்கும் பல தகுதிகளுக்கு ஏற்ப பல வாக்குகள் அளிக்கப்பட்டிருந்தன, ஆனுல் 1918ம் ஆண் டின் சீர்திருத்தச் சட்டம் அதை இரு வாக்குகளாகக் குறைத்தது. பிறகு 1948ம் ஆண்டில் பிரதிநிதித்துவ மக்கள் சட்டம் பன்மை வாக்கு முறையை முற்றிலுமாக அழித்துவிட்டு ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு என்னும் முறையை ஏற்படுத்தியது.

பன்மை வாக்களிப்பு முறையின் சிறப்புக்கள்

(i) அரசாங்கத்தைத் தேர்ந்தெடுப்பதில் சிறந்த தகுதி பெற்ற வர்களுக்கு அவர்களுடைய அறிவின் அடிப்படையில் அதிக மதிப்பு அளித்து கூடுதல் வாக்குகள் அளிக்கும் உரிமை வழங்கப் படுகிறது.

(ii) 1893—ம் ஆண்டில் பெல்ஜியம் நாட்டின் அரசியல் அமைப்பின் கீழ் பொது அலுவல் புரிந்த அல்லது உயர்கல்வி பெற்ற 25 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு கூடுதலாக இரு வாக்குகள் அளிக்கும் உரிமை அளிக்கப்பட்டிருந்தது. மேலும், ஒரு குறிப்பிட்ட அளவு சொத்து வைத்திருந்த 35 வயதானவர்களுக்கு கூடுதலாக ஒரு வாக்களிக்கும் உரிமை வழங்கப்பட்டிருந்தது. இவ்வாறு கூடுதல் வாக்குகள் அளிக்கும் உரிமை அளிப்பதற்குக் காரணம் எல்லா பிரஜைகளையும் ஒரே விதமாகக் கணக்கிடக் கூடாது என்பதாகும். குறிப்பிட்ட அளவு சொத்தும், கல்வியும், வயதும் பெற்ற பிரஜைகள் மற்ற பிரஜைகளைவிட அதிக செல்வாக்கும் மதிப்பும் சமூகத்தில் பெற்றுள்ளனர் என்பதால் அவர்களுக்கு கூடுதல் வாக்குகள் அளிக்க உரிமை அளிக்கப்பட்டால் தான் செம்மையான அரசாங்கத்தை ஏற்படுத்த முடியும் என்பதாகும்.

**பன்மை வாக்களிப்பு முறையால் ஏற்படும் தீமைகள்**

1) பன்மை வாக்களிப்புமுறை ஜனநாயகத்தின் உலகப் பொதுவான வாக்குரிமை கோட்பாட்டிற்கு எதிரானதாகக் கருதப்படுகிறது.

2) பன்மை வாக்களிப்பு முறை சமூகத்தில் அநீதியை ஏற்படுத்துகிறது. அநேகமக்கள் சொத்து வைத்திருப்பதும் கல்வி பெறுவதும் அவர்களுடைய சொந்த முயற்சியேயில்லாமல் வசதி படைத்த குடும்பத்தில் பிறப்பதால் சாத்தியமாகிறது. எனவே பன்மை வாக்களிப்பு முறை, இல்லாதவர்கள் இருப்பவர்கள் என்னும் பாகுபாட்டை சமூகத்தில் ஏற்படுத்தி விடுகிறது.

3) பன்மை வாக்களிப்பு முறையை ஏற்றுக்கொண்டால் கூட பொருளுடையவர், கல்விபடைத்தவர்களிடையே உள்ள வேறுபாடுகளை சரிக்கட்டுவது கடினமாகி விடுகிறது. உதாரணமாக, 10 ஏக்கர் நிலம் வைத்திருப்பவனையும், அல்லது இளங்கலை பட்டக்கல்வி பெற்றவனையும் முதுகலைப் பட்டக்கல்வி பெற்றவனையும் சமமாகப் பாவித்து ஒரே அளவு வாக்குகள் அளிக்க முடியுமா என்னும் கேள்வி எழலாம்.

மேற்கூறிய நன்மைகளையும் தீமைகளையும் ஆராயுமிடத்து பன்மை வாக்களிப்பு முறை நியாயமற்ற முறையாகவே காணப்படுகிறது. எனவே தான் இன்று பல நாடுகளிலும் கைவிடப்பட்டுள்ளது.

(iv) கட்டாய வாக்களிப்பு முறை:- (Compulsory Voting System) பொதுவாக விருப்ப வாக்களிப்பு முறையே நடைமுறையில் உள்ளது. அநேகர் வாக்குச் சாவடியில் போய் காத்து நிற்க விருப்பமில்லாமலோ அல்லது வேறு சில காரணங்களை முன்னிட்டோ தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள வாக்குரிமைகளை பிரயோகிக்கத் தவறி விடுகிருர்கள். ஒரு ஜனநாயக நாட்டில் வாக்குரிமை ஓர் உரிமையாக மட்டுமல்லாமல் ஒரு கடமையாகவும் கருதப்படுகிறது. 1924ம் ஆண்டில் ஆஸ்திரேலியா நாட்டில் ஏற்படுத்தப்பட்ட ஒரு முறையின்படி வாக்களிக்கத் தவறிய வாக்காளர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது.

கட்டாய வாக்களிப்பு முறை பலநாடுகளிலும் அநேக நன்மைகளை ஏற்படுத்தியுள்ளது. பெல்ஜியம், ஹாலந்து, செக்கஸ்லோவியா, ஸ்பெயின், அர்ஜன்டீனு போன்ற நாடுகளில் கட்டாய வாக்களிப்பு முறை நடைமுறையில் இருந்தது. கட்டாய வாக்களிப்பு முறையால் எல்லா வாக்காளர்களும் தங்களுடைய வாக்குரிமையை சரிவர பிரயோகிக்க முடிகிறது. அதனுல் உண்மையான பெரும்பான்மையின் அடிப்படையில் அரசாங்கத்தை ஏற்படுத்த முடிகிறது. உதாரணமாக 100,000 வாக்காளர்கள் உள்ள ஒரு நாட்டில் 70,000 வாக்காளர்கள் மட்டும் தேர்தலில் தங்கள் வாக்குகளை அளிக்கின்றனர் என்று வைத்துக் கொள்வோம். இந்த 70,000 வாக்குகளில் பெரும்பான்மை பெற்ற கட்சி அரசாங்கத்தை அமைக்க உரிமை பெறுகிறது. அதாவது 35001 வாக்குகளை பெற்றுவிட்டால் அந்த கட்சி அரசாங்கத்தை அமைக்க முடிகிறது. ஆனுல் 35001 மொத்த வாக்காளர்களின் பெரும்பான்மையாகாது. மொத்த வாக்காளர்களின் பெரும்பான்மை 50001க்கு மேலான வாக்குகளாகும். எனவே, 35001 வாக்குகளைப் பெற்று அமைக்கப்படுகின்ற அரசாங்கத்தைப் பெரும்பான்மை பெற்ற அரசாங்கமாகக் கருத முடியாது. ஆனுல் கட்டாய வாக்களிப்பு முறை அமல்படுத்தப்பட்டால் எல்லா வாக்காளர்களும் வாக்களிப்பார்கள். அதனுல் பெரும்பான்மையான அதாவது 50001க்கும் மேற்பட்ட வாக்குகளைப் பெற்ற கட்சியே அரசாங்கத்தை அமைக்க முடியும். இவ்வாறு கட்டாய வாக்களிப்பு முறை உண்மையான ஜனநாயக அரசாங்கத்தை ஏற்படுத்தப் பெரிதும் உதவுகிறது.

**6.** தொகுதிகள் (Constituencies)

ஒரு நாட்டில் நிலப்பரப்பு தேர்தல் நடத்துவதற்கு வசதியாக இருக்கும் பொருட்டு பல வட்டாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு தேர்தல் வட்டாரமும் ஒரு தொகுதி என அழைக்கப்

படுகிறது. ஒவ்வொரு தொகுதியிலும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக் கையுடைய மக்கள் வசிக்கின்றனர். தொகுதிகளின் எல்லைகள் மிகவும் கவனமாக வரையறை செய்யப்படுகின்றன. தொகுதிகள் ஓர் அங்கத்தினர் தொகுதிகள் என்றும் பல அங்கத்தினர்கள் தொகுதிகள் எனவும் இருவகைகளாக உள்ளன.

(i) ஓர் அங்கத்தினர் தொகுதி (Single Member Constituency) ஓர் அங்கத்தினர் தொகுதியின் பொருள் யாதெனில் ஒரே ஓர் அங்கத்தினர்தான் ஒரு தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்படு கின்றனர். அதாவது தேர்ந்தெடுக்கப்படுகின்ற அங்கத்தினர் களின் மொத்த எண்ணிக்கையும் தொகுதிகளின் மொத்த எண்ணிக்கையும் சமமாக இருக்கின்றது. எல்லாத் தொகுதிகளும் சம அளவில் பிரிக்கப்பட்டுள்ளன. அமெரிக்கா, இந்தியா, கானடா இங்கிலாந்து போன்ற நாடுகளின் சட்ட மன்றங்களின் கீழ் சபை களுக்கான அங்கத்தினர்கள் ஓர் அங்கத்தினர் தொகுதியிலிருந்தே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஓர் அங்கத்தினர் தொகுதியால் சில நன்மைகள் உள்ளன. அவைகளாவன :–

a) ஓர் அங்கத்தினர் தொகுதி பல அங்கத்தினர் தொகு தியைக் காட்டிலும் எளிதாகவும் புரிந்து கொள்ளும் வகையிலும் உள்ளது.

b) பல அங்கத்தினர் தொகுதியைக் காட்டிலும் ஓர் அங்கத் தினர் தொகுதி அளவில் சிறியதாக இருப்பதால் தேர்தலை சிக்கனமான முறையில் நடத்த முடிகிறது.

c) ஓர் அங்கத்தினர் தொகுதியில் உள்ள பிரதிநிதிகள் பல அங்கத்தினர் தொகுதி பிரதி நிதிகளைக் காட்டிலும் தங்கள் தொகுதி மக்கள் மீது அதிக அக்கறை காட்ட முடி கிறது.

d) பல அங்கத்தினர்கள் தொகுதியைக் காட்டிலும் ஓர் அங்கத்தினர் தொகுதியில் பிரதிநிதிகளுக்கும் தொகுதி மக்களுக் கும் இடையே கூடுதல் நெருங்கிய உறவு உள்ளது. அதனால் மக்கள் தங்களுடைய குறைபாடுகளை எளிதாகத் தீர்த்துக் கொள்ள முடிகிறது.

ஓர் அங்கத்தினர் தொகுதிமுறையில் பல நன்மைகள் இருந் தாலும் அநேக குறைகளும் உள்ளன. அவைகளாவன;

a) ஓர் அங்கத்தினர் தொகுதி முறையில் பிரதிநிதிகள் தேசத்தின் மீது அதிக அக்கறை காட்டுவதை விட தங்களுடைய தொகுதிகளின் மீதே அதிக அக்கறை காட்டுகின்றனர்,

b) ஓர் அங்கத்தினர் தொகுதி முறையில் அடிக்கடி எல்லை களை மாற்றி அமைக்க வேண்டியதாய் உள்ளது. அதனுல் சில வேளை ஆட்சி பொறுப்பில் இருக்கும் கட்சி அடுத்த தேர்தலில் தனது வெற்றிக்கு சாதகமாக அமையும்படி தொகுதி எல்லைகளை மாற்றி அமைக்க வாய்ப்புள்ளது. இவ்வாறு தொகுதி எல்லைகளை தேர்தலில் வெற்றி பெறுவதற்குச் சாதகமாக மாற்றி அமைக்கும் முறைக்கு ஜெறி மான்டரிங் என்று பெயர்.

(ii) பல அங்கத்தினர் தொகுதி அல்லது பொது டிக்கட்முறை (Multi member Constituency or General Ticket System) பல அங்கத்தினர் தொகுதி என்பதாவது நாடு பல வட்டாரங்களாகப் பிரிக்கப்பட்டு, தொகுதி என்று அழைக்கப்படும் அந்த ஒவ்வொரு வட்டாரமும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பிரதிநிதி களைத் தேர்ந்தெடுக்கும் முறையாகும். இன்ஞெரு விதமாகச் சொன்னுல் நாட்டிலுள்ள தொகுதிகளின் மொத்த எண்ணிக்கை அவைகள் தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளின் மொத்த எண்ணிக் கையை விட குறைவாக இருக்கும். இந்த முறையில் பல நன்மை களும் தீமைகளும் உள்ளன. முதலாவது நன்மைகளை ஆராயலாம்.

a) பல அங்கத்தினர் தொகுதி முறை பெரும்பான்மை யினரின் விருப்பை தெரிவிப்பதற்கான சிறந்த முறையாகக் காணப் படுகிறது.

b) இந்த முறையில் சிறந்த அங்கத்தினர்களைத் தேர்ந் தெடுக்க அதிக வாய்ப்பு உள்ளது.

c) ஓர் அங்கத்தினர் தொகுதி முறையில் தேர்ந்தெடுக்கப் படும் அங்கத்தினரை விட பல அங்கத்தினர் தொகுதி முறையில் தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர் விரிந்த மனப்பான்மை யுடையவராக இருப்பார்கள்.

பல அங்கத்தினர் தொகுதி முறையில் உள்ள தீமைகளாவன

a) பல அங்கத்தினர் தொகுதி முறை பலதரப்பட்ட கட்சிகள் தோன்ற இடமளிக்கிறது; அதனுல் மக்கள் பெரும் குழப்பமடைந்துவிடுகின்றனர்.

b) பிரதிநிதிகளுக்குத் தொகுதி மக்களுடன் இருக்கும் தொடர்பு ஓர் அங்கத்தினர் தொகுதி முறையில் இருப்பதை விட குறைவாகவே உள்ளது.

c) பல அங்கத்தினர் தொகுதி முறையில் தேர்தல் நடத்துவதில் சிரமம் ஏற்படுகிறது.

d) இந்த முறையின் கீழ் சிறுபான்மையினருக்குப் போதுமான பிரதிநிதித்துவம் கிடைப்பதில்லை.

e) ஓர் அங்கத்தினர் தொகுதி முறையில் பிரதிநிதிகள் தங்கள் தொகுதி மக்களின் குறைகளைத் தீர்ப்பதில் அக்கறை காட்டும் அளவுக்கு பல அங்கத்தினர் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் தன்னுடைய மக்களின் நலன் மீது அக்கறை காட்டுவதில்லை.

## பிரதிநிதித்துவம்
## (Representation)

(1) தேர்தல்கள்:– (Elections)

இது வரையிலும் வாக்காளர் பற்றியும் வாக்குரிமை பற்றியும் தொகுதி முறை பற்றியும் ஆராய்ந்தோம். இனி பல்வேறு தொகுதிகளிலிருந்தும் வாக்குரிமை மூலம் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளைப்பற்றி ஆராயலாம். பிரதிநிதிகள் தொகுதிகளில் நடத்தப்படும் தேர்தல்களின் மூலமாகத்தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். தற்கால அரசுகள் மக்கள் தொகை அளவில் பெரிதாக உள்ளமையால் நேரடி ஜனநாயக முறை சாத்தியமானதாக இல்லை. எனவே, இன்றைய ஜனநாயக முறை பெரும்பாலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளின் மூலமாகவே நடைபெறவேண்டியதாய் உள்ளது. இதிலிருந்து பிரதிநிதிகளின் முக்கியத்துவமும் அவர்களைத் தேர்ந்தெடுக்கக் கடைப்பிடிக்கப்பட வேண்டிய நடைமுறைகளின் முக்கியத்துவமும் விளங்கும். பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்காக நடத்தப்படும் தேர்தல்களை நேரடித்தேர்தல் என்றும் மறைமுகத்தேர்தல் என்றும் இருவகைகளாகக் கூறலாம்.

(i) நேரடித் தேர்தல்கள் (Direct Elections) நேரடித் தேர்தலில் மக்கள் தங்களுடைய பிரதிநிதிகளை நேரடியாகவே தேர்ந்தெடுக்கின்றனர். இந்திய பாராளுமன்றத்தின் மக்கள்சபைக்கும் மாநில சட்டமன்ற கீழ்ச்சபைக்கும், அமெரிக்க காங்கிரசிற்கும் அங்கத்தினர்கள் நேரடித்தேர்தல் மூலமாகவே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக தேர்வாளர் குழு எதுவும் ஏற்படுத்தப்படுவதில்லை. மக்கள் நேரடியாகவே வாக்களித்துத் தேர்ந்தெடுக்கின்றனர்,

(a) நேரடித்தேர்தல் முறை மக்களிடையே அரசியல் அறிவையும் விழிப்புணர்வையும் ஏற்படுத்துகிறது.

(b) மக்களுக்கும் பிரதிநிதிகளுக்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்பட நேரடித் தேர்தல் முறையே சிறந்தது.

(c) நேரடித்தேர்தல் உண்மையான மக்களாட்சி மலர வாய்ப்பளிக்கிறது.

(d) வாக்காளர்களிடம் பொறுப்புணர்வை ஏற்படுத்தும் ஒரு முறையாக நேரடித்தேர்தல் முறை காணப்படுகிறது.

**குறைகள்:**

(a) பொதுவாக பிற்போக்கான நாடுகளில் மக்கள் வேட்பாளர்களின் திறமையைச் சரியாகக் கணிக்கும் தன்மையைப் பெற்றிருக்கவில்லை. எனவே, நேரடித்தேர்தல்முறை பிற்போக்கான நாடுகளுக்குப் பொருந்தாது.

(b) நேரடித்தேர்தல் முறையில் வேட்பாளர்கள் முக்கியத்துவமில்லாத காரியங்களையும் மக்களுக்கு விளக்கிக் கூறுகின்றனர் அதனால் மக்களுக்கு பெரும் குழப்பம் ஏற்பட்டு விடுகிறது. எது முக்கியம் எது முக்கியமில்லை என்பதே வாக்காளர்களுக்குத் தெரியாமல் போய்விடுகிறது.

c) வேட்பாளரின் உணர்ச்சி வசப்பட்ட பேச்சுக்களும் அவர்கள் தேர்தல் பிரசாரங்களின் போது அளிக்கும் பொய்யான வாக்குறுதிகளும் வாக்காளர்களை மயக்கி விடுகின்றன. அதனால் நேர்மையான அரசாங்கத்தைத் தேர்ந்தெடுக்கமுடியாது போய்விடுகிறது.

(ii) மறைமுகத் தேர்தல்கள்:- (Indirect Elections)

மறைமுகத் தேர்தலில் வாக்காளர்கள் தங்களுடைய பிரதிநிதிகளை நேரடியாகத் தேர்ந்தெடுப்பதில்லை. அதற்குப்பதிலாக ஒரு தேர்வாளர் குழுவை முதலாவதாகத் தேர்ந்தெடுக்கின்றனர். அந்த தேர்வாளர் குழு உண்மையான பிரதிநிதிகளை மக்களின் சார்பில் தேர்ந்தெடுக்கிறது. இந்திய ராஜ்ய சபாவின் அங்கத்தினர்களும், பிரெஞ்சு நாட்டின் மேல் சபை உறுப்பினர்களும், அமெரிக்க குடியரசுத் தலைவர் துணைத்தலைவர் போன்றவர்களும் மறைமுகத் தேர்தல் மூலமாகவே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மறைமுகத் தேர்தல் முறையிலும் நிறை குறைகள் உள்ளன,

நிறைகள்:

a. தேர்வாளர் குழுவில் உள்ள அங்கத்தினர்கள் சாதாரண மக்களைக் காட்டிலும் அதிக அறிவும் அனுபவமும், பெற்றிருப்பதாகக் கருதினால் மறைமுகத் தேர்தல் முறை சிறந்ததே.

b. மறைமுகத் தேர்தலில் மக்கள் உணர்ச்சி வசப்படுதலுக்கு ஆளாக வேண்டிய நிலைமை தவிர்க்கப்படுகிறது.

c. வேட்பாளர்கள் தங்களுடைய கவர்ச்சியான பேச்சுக்களாலும், வாக்குறுதிகளாலும் மக்களை ஏமாற்றிவிட முடியாது.

d. மறைமுகத்தேர்தலில் தொகுதி முழுவதும் தேர்தல் பிரசாரம் செய்ய வேண்டிய அவசியமில்லை என்பதால் கட்சி முறையினால் ஏற்படும் தீமைகள் மறைமுகமாகத் தேர்தலில் தவிர்க்கப்படுகிறது.

e. கல்வியறிவு அதிகம் பெற்றிருத பிற்போக்கான நிலையில் உள்ள அநேக நாடுகளுக்கு மறை முகத் தேர்தல் முறையே சிறந்ததாகக் காணப்படுகின்றன.

குறைகள்:

(a) மறைமுகத் தேர்தலில் மக்கள் நேரடியாக தங்களுடைய தலைவர்களைத் தேர்ந்தெடுக்க முடியாது என்பதால் இந்தத்தேர்தல் முறை ஓர் உண்மையான மக்களாட்சி அரசாங்கத்தை ஏற்படுத்தாது என்பது உறுதி.

(b) மறைமுகத் தேர்தலால் மக்களுக்கு அரசியல் மீது உள்ள ஆர்வம் குறைந்து விடுகிறது.

(c) மறைமுகத் தேர்தலில் தேர்வாளர் குழுவில் உள்ள அங்கத்தினர்கள் குறைவான எண்ணிக்கையுடையவர்கள் என்பதால் அவர்களைத் தன் வசம் இழுப்பதற்காகக் கட்சிகள் எடுத்துக் கொள்ளும் முயற்சியில் லஞ்சம் கொடுப்பதற்குக் கூடத் தயங்குவதில்லை.

**2.** வேட்பாளர்களின் தகுதிகளும் காலவரையறையும் (Qualifications and Term of office of Candidates)

(i) தகுதிகள் (Qualifications) தேர்தலில் வாக்களிப்பதற்கு ஒரு சில தகுதிகள் நிர்ணயிக்கப்படுவது போலவே தேர்தல்களில் போட்டியிடுவதற்கும் ஒரு சில தகுதிகள் நிர்ணயிக்கப்படுகின்றன. தகுதிகள் நிர்ணயிக்கப்படுவதால் தரமுடைய நபர்கள் அரசாங்கத்தில் இடம்பெற முடிகிறது. பொதுவாக

தேர்தலில் போட்டியிடுகின்றவர் கீழ்க்காணும் தகுதிநிலைகளைப் பெற்றிருக்க வேண்டும் என்றுள்ளது.

a. வயது (Age): தேர்தலுக்குப் போட்டியிடுகின்றவர் குறிப்பிட்ட ஒரு வயதை எய்தியவராய் இருத்தல் வேண்டும் என்னும் தகுதி நிலை எல்லா நாடுகளிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் இந்தக் குறிப்பிட்ட வயது நாட்டுக்கு நாடு மாறுபட்டுக் காணப்படுகிறது. பொதுவாக கீழ் சபைக்குப் போட்டியிடுகின்றவர் பெற்றிருக்க வேண்டிய வயது 21லிருந்து 25 வரை நிர்ணயிக்கப்படுகிறது. மேல் சபைக்கு 5 முதல் 10 ஆண்டுகள் கூடுதலாக வைத்து நிர்ணயிக்கப்படுகிறது.

இந்தியாவில் பாராளுமன்றத்தின் கீழ் சபைக்கு போட்டியிடுகின்றவர் 25 வயதை எய்தியவராகவும் மேல் சபைக்கு போட்டியிடுகின்றவர் 30 வயதை எய்தியவராகவும் இருக்க வேண்டும் என்றுள்ளது. எந்த நாட்டிலும் வேட்பாளர் பெற்றிருக்க வேண்டிய குறைந்த பட்ச வயதை விடக் குறைவாக இருப்பதில்லை.

b. குடிமை (Citizenship):– தேர்தலில் போட்டியிட குடிமையுடையவர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுகின்றனர். அன்னியர்களுக்கு தேர்தலில் போட்டியிட உரிமை அளிக்கப்படுவதில்லை. ஏனென்றால் அன்னியர்கள் தங்களுடைய சொந்த நாட்டிற்கே நாணயமுடையவர்களாக நடந்து கொள்வார்கள். எனவே, தேர்தலுக்குப் போட்டியிடுபவர்கள் நாட்டின் சொந்தப் பிரஜைகளாக இருக்க வேண்டும் என்னும் தகுதி நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

c தங்குமிடம்: (Domicile) சில நாடுகளில் போட்டியிடுகின்றவர் அவர் போட்டியிடும் தொகுதியைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்றுள்ளது. உதாரணமாக அமெரிக்காவில் பிரதிநிதிகள் சபைக்கு போட்டியிடுகின்றவர் அவருடைய சொந்தத் தொகுதியைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்னும் வழக்காறு உள்ளது. இங்கிலாந்து, இந்தியா, போன்ற நாடுகளில் தேர்தலுக்குப் போட்டியிடுகின்றவர்கள் தங்களுடைய தொகுதிகளைச் சேர்ந்தவர்களாயிருக்க வேண்டியதில்லை அதனால்தான் எந்தத்தொகுதியில் தனக்கு அதிக செல்வாக்கும் வெற்றி பெறுவதற்கு சாதகமான சூழ்நிலையும் இருக்குமோ அந்தத் தொகுதியில் முக்கியமான தலைவர்கள் போட்டியிட்டு எப்படியாவது வெற்றி பெற்று விடுகின்றனர்.

d) சொத்து (Property), சில நாடுகளில் தேர்தலுக்குப் போட்டியிடுகின்றவர்களுக்கு குறிப்பிட்ட ஓர் அளவு சொத்து இருக்க வேண்டும் என்றிருந்தாலும் இன்று அதற்கு எதிரான கருத்தே நிலவுகின்றது. மக்களாட்சியில் இல்லாதவன் இருப்பவன் என்று பாராமல் எல்லோருக்கும் சம உரிமை அளிக்க வேண்டும். எனவே, சொத்து வைத்திருப்பவர்தான் தேர்தலில் போட்டியிடலாம் என்ற நிலை கைவிடப்பட்டுள்ளது. சொத்து வைத்திருப்பவர் தான் தேர்தலில் போட்டியிடலாம் என்று எண்ணியதற்குக் காரணம் சொத்து வைத்திருப்பவர்க்குத் தான் பொதுச் சேவை செய்வதற்கான நேரமும் காலமும் கிடைக்கிறது என்று கருதப்பட்டது. ஆனால் இன்று பொதுச்சேவை செய்வதற்கான நேரமும் காலமும் கிடைப்பதற்காக சட்டமன்ற உறுப்பினர்களுக்குஊதியம் வழங்கப்படுகிறது. எனவே, அவர்கள் வருமானத்திற்காக வேறு எந்த தொழிலிலும் ஈடுபட வேண்டியதில்லை என்பதால் பொதுச் சேவைக்காக அதிக நேரம் செலவிட முடிகிறது.

e) கல்வி அறிவு (Education) சட்டமன்ற நடவடிக்கைகளில் பங்கு பெறுவதற்கு ஏற்ற அளவிற்கு வேட்பாளர் கல்வி அறிவு பெற்றிருக்க வேண்டும் என்பது யாவரும் ஏற்றுக்கொள்ளும் ஒரு தகுதியே ஆகும். நிர்வாகப் பணியாளர் குறிப்பிட்ட கல்வி தகுதிகள் சிலவற்றைப் பெற்றிருக்க வேண்டும் என்னும் பொழுது அவர்களை கண்காணிக்கும் பொறுப்பினை ஏற்று நிற்கும் பிரதிநிதிகளுக்கும் ஒரு சில கல்வித் தகுதிகள் நிர்ணயிக்கப் படுவது மிகவும் அவசியமாகின்றது.

f) முன்பணம் (Deposit). வேட்பாளர் ஒவ்வொருவரும் ஓரளவு முன் பணம் அல்லது டெப்பாசிட் கட்ட வேண்டியதாய் உள்ளது. ஒரு குறிப்பிட்ட வாக்குகளை பெற்றுவிட்டால் அந்த முன் பணம் வேட்பாளர்களுக்குத் திருப்பி அளிக்கப்படுகிறது. ஒரு வேளை அந்த வேட்பாளர் தேர்தலில் குறிப்பிட்ட அளவு வாக்குகளைப் பெறத்தவறி விட்டால் தான் கட்டிய முன்பணத்தை அல்லது டெபாசிட் தொகையை இழக்க நேரிடுகிறது. முன் பணம் கட்ட வேண்டியிருப்பது வேட்பாளர்களின் எண்ணிக்கையை குறைக்க உதவுகிறது.

ii) தகுதியின்மை (Disqualifications). தகுதியின்மை பற்றி உலகப் பொதுவான ஒழுங்குகள் எதுவும் இல்லை என்றாலும் பொதுவான சில காரணங்களுக்காக வேட்பாளர்களுக்குப் போட்டியிடத் தகுதியில்லை என்று கூறமுடியும். அவை களாவன:

a) இந்தியாவில் அரசாங்க அலுவலர்கள் தேர்தலில் போட்டியிட முடியாது. இந்திய அரசியல் அமைப்பு இலாபம் ஏற்படும் அலுவல் புரியும் எவரும் சட்டமன்ற உறுப்பினர்களாக ஆக முடியாது என்று திட்டவட்டமாகக் கூறுகிறது.

b) அமெரிக்காவில் காணப்படும் தலைவர் முறை அரசாங்கத்தில் குடியரசுத் தலைவரும் அமைச்சர் குழு அங்கத்தினர்களும் காங்கிரஸ்சின் (சட்டமன்றம்) உறுப்பினர்களாக இருக்கக்கூடாது என்றுள்ளது.

c) ஒவ்வொரு நாடும் அதனதன் அரசியல் அமைப்பின் அடிப்படையில் தேர்தல் நடத்துவதற்கென ஒரு சில விதிமுறைகளை ஏற்படுத்தியுள்ளன. அந்தத் தேர்தல் முறைகளை மீறியவர்களும் லஞ்சம் வாங்கிய குற்றதிற்காக தண்டிக்கப்பட்டவர்களும் பொதுவாகத் தேர்தலில் போட்டியிடத் தகுதியற்றவர்களாகக் கருதப்படுகின்றனர்.

iii) காலவரையறை (Term of Office) பிரதிநிதிகள் எத்தனை ஆண்டுகாலத்திற்கு என தேர்ந்தெடுக்கப்பட வேண்டும், அல்லது பிரதிநிதியாக தேர்ந்தெடுக்கப்படும் ஒருவர் எத்தனை ஆண்டுகாலம் பதவியில் இருக்கலாம் என்பது பற்றி திட்டவட்டமான முடிவு எதுவும் இல்லை. பொதுவாக சட்டமன்றத்தின் மேல் சபையில் உள்ள அங்கத்தினர்கள் கீழ்ச்சபை அங்கத்தினரைக் காட்டிலும் கூடுதல் கால வரையறையைப் பெற்றுள்ளார்கள். உதாரணமாக, இந்திய ராஜ்ய சபாவின் அங்கத்தினர்களுடைய கால வரையறை 6 ஆண்டுகளாக நிர்ணயிக்கப்பட்டிருக்கும் பொழுது கீழ்சபை உறுப்பினர்களுக்கு 5 ஆண்டுகள் என நிர்ணயிக்கப்பட்டுள்ளது. பொதுவாக சட்டமன்றத்தின் காலவரையறை 5 ஆண்டுகளாக இருப்பதே நல்லது என்று எல்லா நாடுகளிலும் கருதப்படுகிறது. வருடாந்திர சட்டமன்றம் அதிகமாக காணப்படுவதற்கில்லை. அமெரிக்காவில் உள்ள இரு மாநிலங்களில் மட்டும் சட்ட மன்றங்களின் கால வரையறை ஒரு ஆண்டாக உள்ளது. இந்தசட்ட மன்றங்களே வருடாந்தர சட்டமன்றம் எனப்படுகின்றன. உலகில் உள்ள நாடுகள் வருடாந்தர சட்டமன்ற முறையைப் பின்பற்றுமலிருப்பதற்குக் காரணமாக அதனுடைய குறைகளையே கூறவேண்டும். அவைகளாவன:

a) அரசாங்கத்தின் திறமையை ஒரே ஆண்டில் நிரூபிப்பது மிகவும் கடினமான காரியமாகும். ஒரே ஆண்டில் எந்த ஓர்

அரசாங்கமும் பெரிய அளவில் எதையும் சாதித்து விட முடியாது. எனவேதான் குறைந்தது 4 அல்லது 5 ஆண்டுகளாவது ஒவ்வொரு சட்ட மன்றத்திற்கும் கால வரையறையாக நிர்ணயிக்கப்பட வேண்டும் எனப்படுகிறது.

b) ஒரே வருடத்தில் பதவியிலிருந்து விலகி அடுத்தவருக்கு இடமளிக்க வேண்டும் என்பதால் தன்னுடைய வேலையில் எந்த பிரதிநிதியும் அதிக ஆர்வமோ அக்கறையோ காட்ட மாட்டார்.

c) ஒவ்வொரு வருடமும் தேர்தல் நடைபெறுவதால் வீண் செலவும் அரசாங்கத்தில் நிரந்தரமின்மையுமே ஏற்படும்.

d) அடிக்கடி தேர்தல் நடப்பதால் மக்களுக்கு ஓயாத தொல்லைகளும் பல பிரச்னைகளும் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும்.

மேற்கூறிய இடையூறுகளை முன்னிட்டுத் தான் இன்றைய நாடுகளில் பொதுவாக சட்டமன்றத்தின் கீழ்ச்சபைகளுக்கு 4 அல்லது 5 ஆண்டுகள் என காலவரையறை நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது.

3) பிரதிநிதியின் கடமைகள் (Duties of Representatives)

பிரதிநிதிகளின் கடமைகளை வரையறுத்துக் கூறும் நூல் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே, பிரதிநிதிகள் எந்தெந்தக் காரியங்களைச் செய்யலாம் எந்தெந்தக் காரியங்களைச் செய்யக்கூடாது என்பதெல்லாம் மனச்சாட்சி, தேசபக்தி, தேசப்பற்று, விவேகம் ஆகியவைகளின் அடிப்படையில் அறியப்படுகின்றது. கீழ்க்கண்ட கோட்பாடுகளைக் கருத்தில் கொண்டால் பிரதிநிதிகள் யாவரும் தங்களுடைய கடமைகள் என்ன என்பதை உணரமுடியும்.

a) ஒவ்வொரு பிரதிநிதியும் தேசநலனை முதல் குறிக்கோளாகவும் முக்கிய நோக்காகவும் கருதுதல் வேண்டும். தேச விருப்பத்திற்கும் தொகுதி விருப்பத்திற்கும் இடையே தகராறு ஏற்பட்டு எந்த விருப்பிற்கு முதலிடம் தரவேண்டும் என்னும் கேள்வி எழுமானல் ஒவ்வொரு பிரதிநிதியும் தன்னுடைய தொகுதி விருப்பை விடத் தேசிய விருப்பை பிரதானமாகக் கருதி அதற்கே முக்கியத்துவமும் முதலிடமும் தரவேண்டும்.

b) ஒவ்வொரு பிரதிநிதியும் தொகுதி நலனுக்காகவும் தேசிய நலனுக்காகவும் பாடுபடுவதையே தன்னுடைய பிரதானப் பணியாகக் கொள்ள வேண்டும்.

c) சட்டமன்ற கூட்டத் தொடர்களுக்கு தவறாமல் வருகை தந்து நடவடிக்கைகளில் முழுபங்கு பெறுவது ஒவ்வொரு பிரதிநிதியின் முக்கிய கடமையாகும்.

d) அரசாங்கத்தின் கொள்கைகளையும் நடத்தையையும் நன்கு அறிந்து தவறான கொள்கைகளையும், தீய நடத்தையையும் குறை கூற பிரதிநிதிகள் முன்வர வேண்டும்.

e) பிரதிநிதிகள் தங்களுடைய நல்லொழுக்கத்தால் பொது மக்களுக்கு முன்மாதிரியாக நடந்து கொள்ள வேண்டும்.

பொதுவாக பிரதிநிதிகள் தேர்தல் முடிந்த பிறகு மேற்கூறிய காரியங்களைக் கடைப்பிடிக்கத் தவறி விடுகின்றனர். அதனால் மக்களுக்குப் பிரதிநிதிகள் மீதுள்ள நம்பிக்கை குறைந்து விடுகிறது. இந்தியாவில் சட்ட மன்ற உறுப்பினர்களில் ஒரு சிலருடைய நடத்தை பொது மக்கள் குறை கூறும் அளவிற்கு கேவலமான நிலையில் உள்ளது. தீய நடத்தையுடைய பிரதிநிதிகளால் மக்களாட்சியின் மதிப்பே அழிந்துவிடுகிறது.

## பெரும்பான்மையினரும் சிறுபான்மையினரும்
## (Majority and Minority)

### 1. பெரும்பான்மை (Majority)

மக்களாட்சி அரசாங்கம் என்பது பெரும்பான்மை அரசாங்கமாகும். அதாவது தேர்தலில் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்ற கட்சியால் அரசாங்கம் அமைக்கப்படுகிறது. ஓர் அங்கத்தினர் தொகுதியில் போட்டியிடுபவர்களில் பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்றவர் பிரதிநிதியாக அல்லது சட்ட மன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதாகக் கருதப்படுகிறது. ஆனால் உண்மையில் அந்த உறுப்பினர் பெரும்பான்மையான வாக்காளர்களுடைய பிரதிநிதியாக தேர்ந்தெடுக்கப்படவில்லை என்றே கூற வேண்டியதாய் உள்ளது. ஏனெனில் ஒரு தொகுதியில் மூன்று வேட்பாளர்கள் போட்டியிடுவதாக வைத்துக்கொள்வோம். மூன்று பேரும் முறையே 34% 40%, 26%, வாக்குகளைப் பெறுவார்களானல், அவர்களில் யார் வெற்றி பெற்றதாகக் கருதப்படுகிறது? 40% வாங்கிய வேட்பாளர் தானே வெற்றி பெற்றதாகக் கருதப்படுகிறார். அப்படியானல் அந்தப்பிரதிநிதி 40% வாக்காளர்களைத்தான் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவப்படுகின்றார் என்று பொருள். 40% பெரும்பான்மையாகாது என்பதால் சட்டமன்றம் வாக்காளர்களின் விருப்பைப் பிரதிபலிப்பதாகக் கருதமுடியாதல்லவா? எனவே, உண்மையான பெரும்பான்மையைப் பெற்றிராத

அரசாங்கம்கூட பெரும்பான்மை பெற்றிருப்பதாகப் பாவித்து ஆட்சி செய்ய தேர்தல் வாய்ப்பளிக்கிறது. மேலும், பெரும் பான்மை பெற்ற அரசாங்கம் சிறுபான்மையினரின் நலனை அல்லது விருப்பைப் புறக்கணித்து விடவும் கூடும். அதனுல் சிறுபான் மையினருக்கு அரசாங்கத்தில் போதுமான அளவிற்குப் பிரதி நிதித்துவம் அளிக்கப்படல் வேண்டும் என்று ஜான்ஸ்டுவர்ட்மில், லீக்கி போன்றவர்கள் வற்புறுத்திக் கூறியுள்ளனர்.

## 2 சிறுபான்மையினர் (Minority)

சிறுபான்மையினருக்கு அரசாங்கத்தில் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காகப் பலமுறைகள் நடைமுறையில் உள்ளன. அவை களைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

i) விகிதாசாரப் பிரதி நிதித்துவம் (Proportional Representation) இரண்டு விதமான விகிதாசாரப்பிரதிநிதித்துவ முறைகள் உள்ளன. அவைகள் ஒற்றை மாற்றுவாக்கு ஹேர் முறை என்றும் லிஸ்ட் முறை என்றும் அழைக்கப்படுகின்றன.

a) ஒற்றை மாற்று ஹேர் முறை:- (Single Transferable Hare system)

இந்த முறை 1851-ம் ஆண்டு தாமஸ் ஹேர் என்னும் ஆங்கிலேயரால் தன்னுடைய "பிரதிநிதிகளுடைய தேர்தல்" (Election of Representatives) என்னும் நூலில் விளக்கப் பட்டுள்ளது. 1855ம் ஆண்டில் ஆண்டிரே என்னும் அமைச்சர் டென்மார்க்கில் இந்த முறையை அமல்படுத்தினுர். எனவே, இந்த முறையை ஆண்டிரே முறை என்றும் அழைக்கின்றனர். இந்த முறையின் முக்கிய அம்சங்களாகச் சிலவற்றைக் கூறலாம். இந்த முறை ஓர் அங்கத்தினர் தொகுதிகளுக்கு பொருத்தாது. குறைந்தது மூன்று இடங்களை உடைய பல அங்கத்தினர் தொகுதியாக இருந்தால்தான் இந்த முறையை அமல் படுத்த முடியும்.

இம்முறையின் கீழ் ஒரு வாக்காளருக்கு ஒரு வாக்குதான் கொடுக்கப்படுகிறது. ஆனுல் அந்த வாக்காளர் தன்னுடைய விருப்பத்தை வரிசைப்படி தெரிவிக்கலாம் என்றுள்ளது. உதாரணமாக, 5 வேட்பாளர்கள் போட்டியிட்டால் வாக்காளர் தன்னுடைய விருப்பப்படி முதலாவது யாருக்கு, இரண்டாவது யாருக்கு, மூன்ருவது யாருக்கு, நான்காவது யாருக்கு, ஐந்தாவது யாருக்கு என்று வேட்பாளருடைய பெயருக்கு எதிராக 1, 2, 3, என்று குறிப்பிடவேண்டும். தேர்தலில் வெற்றி பெறுவதற்கு ஒரு வேட்பாளர் குறிப்பிட்ட ஒரு அளவு வாக்குகளைப் பெற

வேண்டும். இந்த குறிப்பிட்ட அளவு வாக்குகளை நிர்ணயம் செய்ய பலமுறைகள் உள்ளன. எளிய முறைப்படி, அளிக்கப் பட்ட வாக்குகளின் மொத்த எண்ணிக்கையைத் தேர்ந்தெடுக்கப் பட வேண்டிய இடங்களின் மொத்த எண்ணிக்கையால் வகுத்து வரும் ஈவுதான் ஒருவர் வெற்றி பெறுவதற்குக் கிடைக்க வேண்டிய மொத்த வாக்குகளாகும். உதாரணமாக, அளிக்கப் பட்ட வாக்குகளின் மொத்த எண்ணிக்கை 5000 ஆகவும் தேர்ந் தெடுக்கப்பட வேண்டிய பிரதிநிதிகளின் அல்லது இடங்களின் எண்ணிக்கை 5 ஆகவும் இருக்குமானால் வெற்றி பெறத்தேவை யான வாக்குகளின் எண்ணிக்கை $\frac{5000}{5}$ அதாவது 1000 ஆகும்.

ஆனால் ட்ரூப் என்பவர் வேறு ஒரு சூத்திரத்தைக் குறிப் பிட்டுள்ளார். ட்ரூப் சூத்திரப்படி தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய பிரதிநிதிகளின் எண்ணிக்கையுடன் ஒன்று அதிகப்படியாக சேர்ந்து வரும் எண்ணால் மொத்த வாக்குகளின் எண்ணிக்கையை வகுத்து வரும் ஈவுடன் ஒன்றைக் கூட்டினால் வெற்றி பெறு வதற்குத் தேவையான மொத்தவாக்குகளின் எண்ணிக்கை கிடைக்கிறது. உதாரணமாக, $\frac{5000}{5+1}+1$ வாக்குகளைப் பெற்றவர் தேர்தலில் வெற்றி பெற முடிகிறது.

வாக்குகளை எண்ணும் பொழுது முதல் வாக்குகள் முதலாவது எண்ணப்பட்டு குறிப்பிட்ட வாக்குகளைப் பெற்றவர் தேர்ந் தெடுக்கப்படுகிறார். அவர் பெற்றிருக்கும் வாக்குகளில் எஞ்சிய வாக்குகள் ஏதாவது இருக்குமானால் அவைகள் மற்ற வேட்பாளர்களுக்கு வாக்காளர் குறிப்பிட்டுள்ள விருப்பப்படி மாற்றப்படுகிறது. தேவையான பிரதிநிதிகளின் எண்ணிக்கை கிடைக்கும் வரையிலும் இவ்வாறு வாக்குகள் லிஸ்டில் கடைசி யாக உள்ளவர் வரை மாற்றப்படுகிறது. தேவைப்பட்டால் வெற்றி பெறுபவர்களுடைய எஞ்சிய வாக்குகள் மட்டுமின்றி வெற்றி பெறுவதற்கு வாய்ப்பேயில்லாத லிஸ்டில் கடைசியில் வந்து கொண்டிருப்பவருடைய வாக்குகளும் மற்ற வாய்ப்புள்ள வேட்பாளர்களுக்கு மாற்றி அளிக்கப்படுகின்றன. இவ்வாறு வாக்குகள் மாற்றி அளிக்கப்படுவதற்கான முக்கிய காரணம் என்னவெனில் எந்த ஒரு வாக்கும் வீணாகிவிடக்கூடாது என்பதாகும். ஒரு வாக்காளருடைய வாக்கு தன்னுடைய முதலா வது வேட்பாளருக்குத் தேவைப்படவில்லை என்றால் கூட நிச்சயமாக அது தன்னுடைய 2வது அல்லது 3வது வேட் பாளருக்குச் சென்று விடுகிறது. இந்த முறைப்படிதான் இந்தியக்

குடியரசுத் தலைவரும் பாராளுமன்றத்தின் மேல்மன்ற உறுப்பினர் களும் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர்.

ஹேர் முறையிலுள்ள பெருங்குறை யாதெனில் இந்தமுறை சாதாரண வாக்காளருக்குத் தெளிவாகப் புரிவதில்லை. வாக்குகள் எண்ணும் பொழுது தவறுதல் ஏற்படவும் வழியுண்டு. மேலும் இந்த முறையை அமுல் படுத்த பல அங்கத்தினர் தொகுதிகள் தேவைப்படுவதால் கட்சிப்பிளவுகளும் வகுப்புப் பிரிவுகளும் தொகுதிகளில் தோன்றி முடிவில் தேச ஒற்றுமையே சீர்குலைய ஏதுவாகிறது.

b) லிஸ்ட் முறை (List System) : விகிதாசாரப் பிரதி நிதித்துவத் தின் இன்னுமொரு முறை லிஸ்ட் முறையாகும். இந்த முறையின் கீழ் எத்தனை வேட்பாளர்கள் ஒரு தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக் கப்பட வேண்டுமோ அந்த எண்ணிக்கையுடைய வேட்பாளர் களின் பெயரையும் ஒரு லிஸ்டில் தயாரித்து கட்சியின் முத்திரை யுடன் ஒவ்வொரு கட்சியும் சமர்ப்பிக்க வேண்டும். வாக்காளர், கட்சியை மட்டும் தான் தேர்ந்தெடுக்க வேண்டும். வாக்காளர் தேர்ந்தெடுக்கும் கட்சி சமர்ப்பித்த லிஸ்டில் உள்ள வேட்பாளர் களைத் தேர்ந்தெடுப்பதற்காகவே இந்த முறை பின்பற்றப் படுகிறது. தேர்ந்தெடுக்கப் படுவதற்குத் தேவையான குறிப் பிட்ட வாக்குகளின் எண்ணிக்கை ஹேர் முறைப்படி கணக்கிடப் படுகிறது. அதாவது அளிக்கப்பட்ட வாக்குகளின் மொத்த எண்ணிக்கையை தொகுதியிலுள்ள மொத்த இடங்களின் எண்ணிக்கை கொண்டு வகுத்தோ அல்லது அளித்த வாக்கு களின் மொத்த எண்ணிக்கையுடன் ஒன்று சேர்த்து மொத்த இடங்களின் எண்ணிக்கையால் வகுத்து வந்த ஈவுடன் ஒன்றைக் கூட்டியோ வெற்றி பெறுவதற்குத் தேவையான குறைந்த பட்ச வாக்குகளின் எண்ணிக்கை கணக்கிடப்படுகிறது.

ஒரு வேளை குறைந்த பட்ச வாக்குகள் கிடைக்காத காரணத்தால் ஒரு சில இடங்கள் காலியாகவே இருந்து விட்டால் எந்தக் கட்சிக்கு அதிகப்படியான எஞ்சிய வாக்குகள் கிடைத் துள்ளனவோ அந்த கட்சிக்கு அந்த காலி இடங்கள் கொடுக்கப் படுகின்றன. அல்லது அதிகப்படியாக ஒரு தொகுயில் கிடைத்த வாக்குகள் தேவைப்படுகின்ற தொகுதிக்கு மாற்றிக் கொடுக்கப் படுகின்றது. இதை ஓர் உதாரணம் மூலம் விளக்கலாம்.

அளிக்கப்பட்ட வாக்குகளின் மொத்த எண்ணிக்கை-36,00,000,
மொத்த இடங்கள் —15

| | | |
|---|---|---|
| வெற்றி பெறத் தேவையான குறைந்த பட்ச வாக்குகளின் எண்ணிக்கை | — | 1,20,000, |
| போட்டியிடும் கட்சிகள் | — | C, D, E, |
| C யின் லிஸ்டில் கிடைத்த வாக்குகள் | — | 2,58,000 |
| D யின் லிஸ்டில் கிடைத்த வாக்குகள் | — | 2,46,000 |
| E யின் லிஸ்டில் கிடைத்த வாக்குகள் | — | 96,000 |

கட்சிகள் Cயும் Dயும் தேவையான குறைந்த பட்சவாக்குகள் இருமடங்காகப் பெற்றுள்ளமையால் ஒவ்வொரு கட்சிக்கும் இரண்டு இடங்கள் கிடைக்கின்றன. கட்சி Eக்கு 24,000 வாக்குகள் குறைவாகக் கிடைத்துள்ளன. Cக்கு அதிகப்படியான எஞ்சிய வாக்குகள் கிடைத்துள்ளமையால் Eயின் இடத்தையும் சேர்த்துக் கொள்ளலாம். அல்லது E கட்சி தனக்கு வேறொரு தொகுதியில் கிடைத்த அதிகப்படியான எஞ்சிய 24,000 வாக்குகளை இத்துடன் அதாவது 96,000 வாக்குகளுடன் சேர்ந்து இந்த தொகுதியில் உள்ள தனது இடத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.

விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையில் காணப்படும் நிறை களையும் குறைகளையும் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

நிறைகள்:- (Merits)

a) விகிதாசாரப் பிரதிநிதித்துவம் ஒரு தொகுதியில் உள்ள மக்களின் விருப்பைத் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் தெரி விக்க உதவுகிறது.

b) தொகுதியில் உள்ள சிறுபான்மையினர் அனைவரும் சட்ட மன்றத்தில் தங்களுடைய எண்ணிக்கைக்குத் தக்கவாறு பிரதி நிதித்துவம் பெறமுடிகிறது.

c) குறிப்பிட்ட வாக்குகளுக்கு மேற்பட்ட வாக்குகள் மற்ற வேட்பாளர்களுக்கு மாற்ற முடிவதால் வாக்குகள் எதுவும் வீணு வதற்கு வழியில்லை.

d) இந்த முறைப்படி அமைக்கப்படுகின்ற சட்டமன்றம் உண்மையான பெரும்பான்மையின் அடிப்படையில் அமைக்கப் படுவதால் சட்டமன்றம் இயற்றுகின்ற சட்டங்களுக்கு மக்கள் ஆதரவு தருகின்றனர்.

e) சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு அளிக்கப்படுவதால் ஜனநாயகம் பொருளுடையதாகச் செயல்படுகிறது. பெரும் பான்மையினரின் வல்லாட்சிப்போக்கு தடை செய்யப்படுகிறது.

f) பல அங்கத்தினர் தொகுதி முறையால் ஏற்படும் நன்மைகள் யாவும் இந்த முறையிலும் காணப்படுவது இதன் சிறப்பான அம்சமாகும்.

குறைகள்

a) விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறை சிக்கலான முறை என்பதால் சாதாரண வாக்காளருக்கு இது குழப்பத்தை ஏற்படுத்துவதாய் உள்ளது.

b) விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையில் பல அங்கத்தினர் தொகுதி முறை இடம் பெற வேண்டியிருப்பதால், வாக்காளருக்கும் பிரதிநிதிகளுக்கும் இடையே உள்ள தொடர்பு குறைவாக உள்ளது. மேலும், பல வேட்பாளர்களின் சார்பில் பலதரப்பட்ட கட்சிகளும் தேர்தல் பிரசாரத்தில் இடம் பெறுவதால் மக்களுக்குப் பெரும் குழப்பம் ஏற்பட்டு விடுகிறது.

c) விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையின்கீழ் சிறுபான்மையினருக்குக் கூடுதல் செல்வாக்கு அளிக்கப்படுவதால் அவர்கள் பெரும்பான்மையினருடன் ஒத்துப்போக மறுத்து விடுகின்றனர். அதனால் நிலையான அரசாங்கம் தோன்ற வழியில்லாமல் போய்விடுகிறது.

d) விகிதாசார பிரதிநிதித்துவ முறை சிறிய கட்சிகள் தோன்ற வழிவகுக்கின்றது. அதனால் ஏராளமான கட்சிகள் தோன்றி அதனிமித்தம் அரசாங்கம் பலவீனமடைந்து விடுகிறது. மேலும், பல கட்சிகள் தோன்றுவதால் கூட்டு அரசாங்கம் ஏற்பட வழி வகுக்கின்றது. கூட்டு அரசாங்கம் நிலையற்ற அரசியல் நிலையைத் தோற்றுவிக்கிறது.

மேற்கண்ட குறைகள் இருந்த பிறகும் விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறை பெல்ஜியம், சுவிட்சர்லாந்து, நார்வே, ஸ்வீடன் போன்ற நாடுகளில் நடைமுறையில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

(ii) சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவத்திற்கான மற்ற முறைகள் (Other Methods of Minority Representation): சிறுபான்மையினருக்குச் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு வேறு சில முறைகளும் உள்ளன. அவைகளை வரம்பிற்குட்பட்ட வாக்குமுறை, சேர்த்து அளிக்கும் வாக்குமுறை, இரண்டாம் வாக்குமுறை, விருப்ப வாக்குமுறை, சாதிமத பிரதிநிதித்துவம் என்று கூறலாம். ஒவ்வொரு முறையையும் கீழ்க்கண்டவாறு ஆராயலாம்,

a) வரம்பிற்குட்பட்ட வாக்குமுறை (The limited vote plan): சிறுபான்மையினருக்கு பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக நடைமுறையில் உள்ள அனேக முறைகளுள் இதுவும் ஒன்றாகும். இந்த முறையின் கீழ் குறைந்தது மூன்று இடங்களையாவது கொண்ட பல அங்கத்தினர் தொகுதி தேவைப்படுகிறது. ஒவ்வொரு வாக்காளரும் தொகுதியில் உள்ள மொத்த இடங்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் குறைந்த அளவு வாக்குகளையே அளிக்கின்றனர். மேலும், ஒரு வாக்காளர் ஒரு தனி வேட்பாளருக்கு ஒன்றிற்கு மேற்பட்ட வாக்குகள் அளிக்கவும் கூடாது. எத்தனை வாக்குகள் அளிக்க முடியுமோ அத்தனை வாக்குகளும் எத்தனை வேட்பாளர்கள் உள்ளனரோ அத்தனை பேருக்கும் பகிர்ந்து அளிக்கப்படுகிறது. உதாரணமாக 5 இடங்களை உடைய ஒரு தொகுதியில் ஒவ்வொரு வாக்காளரும் நான்கு வேட்பாளர்களுக்கோ அல்லது அதை விடக்குறைந்த எண்ணிக்கையுடைய வேட்பாளர்களுக்கோ வாக்களிக்க அனுமதிக்கப்படலாம். இதனால் சிறுபான்மை கட்சிகளும் நிச்சயமாக ஒன்றோ இரண்டோ அங்கத்தினர்களைப் பெற்றுவிடுகின்றன. இந்த முறை ஒரு காலத்தில் இங்கிலாந்து, ஜப்பான், இத்தாலி போன்ற நாடுகளில் கீழ்ச்சபை அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கப் பயன்பட்டது. ஆனால் இன்றைக்கு இந்த முறை நடைமுறையில் இல்லை.

நடைமுறையில் வரம்பிற்குட்பட்ட வாக்குமுறை பெரும் அளவிலான சிறுபான்மை வகுப்பினருக்கு மட்டுமே பிரதிநிதித்துவம் தருவதாய் உள்ளது. பல கட்சிகள் இருந்தால் இந்த முறையைப் பயன்படுத்துவது கடினம். ஓர் அங்கத்தினர் தொகுதியில் இம்முறையை அமல்படுத்த முடியாது. மூன்றோ அல்லது அதற்கு மேற்பட்ட அங்கதினர்களைத் தேர்ந்தெடுக்கவோ இந்த முறையைப் பயன்படுத்தலாம். மேலும், அங்கத்தினர்கள் சுதந்திரமாகச் செயல்பட இம்முறை தடையாக உள்ளது. ஏனெனில் இந்த முறை கட்சியின் ஆதிக்கத்தை வலுவடையச் செய்வதாய் உள்ளது.

b) சேர்ந்து அளிக்கும் முறை (Cumulative Vote system) இம் முறை ஒரு தொகுதியிலிருந்து எத்தனை பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் படவேண்டுமோ அத்தனை வாக்குகளை அளிக்க ஒரு வாக்காளருக்கு உரிமை அளிக்கிறது. எல்லா வாக்குகளையும் சேர்த்து ஒரே வேட்பாளருக்கே அளிக்கவும் செய்யலாம். அல்லது வாக்காளரின் விருப்பப்படி அவைகளை பல வேட்பாளருக்கு பகிர்ந்து அளிக்கவும் முடியும். ஒரு தொகுதியில் ஐந்து இடங்கள் இருக்குமானால் வாக்காளர் தன்னுடைய ஐந்து வாக்குகளையும் சேர்த்து ஒரு வேட்பாளருக்கே அளிக்கவும் செய்யலாம்.

அல்லது ஐந்து வாக்குகளையும் ஒவ்வொருவருக்கும் ஒன்று வீதம் அளிக்கவும் செய்யலாம்.

இந்த முறையின் சிறப்பு யாதெனில் ஒரு சிறிய சிறுபான்மை வகுப்பும் எல்லா வாக்குகளையும் ஒரே வேட்பாளர்க்கு அளிக்க முடிவதால் குறைந்தது ஓர் அங்கத்தினரையாவது தேர்ந் தெடுக்க முடிகிறது. ஆனால் கட்சிக்கட்டுப்பாடு நல்ல முறையில் இருக்குமானால் தான் வாக்காளர்களுக்கு எப்படி ஒரே வேட்பாள ருக்கு எல்லா வாக்குகளையும் சேர்த்து தருவது என்பதை கற்றுத் தர முடியும். கட்சிக்கட்டுப்பாடு தீவிரமாக இந்த முறையில் காணப்படுவதால் அதனால் ஏற்படும் தீமைகளையும் தவிர்க்க முடியாது போய் விடுகிறது. சில வேளைகளில் இந்த முறையின் கீழ் சிறுபான்மையினருக்கு இரண்டு அல்லது மூன்று இடங்களும் பெரும்பான்மையினருக்கு ஒன்று அல்லது இரண்டு இடங்கள் மட்டுமே கிடைக்கவும் வாய்ப்புண்டு. மேலும், ஒரு வேட் பாளருக்கு கிடைக்கும் அதிகப்படியான எஞ்சிய வாக்குகள் அதாவது தான் வெற்றிபெறுவதற்குத் தேவையான குறைந்த பட்ச வாக்குகளுக்கு மேற்பட்ட வாக்குகள் வேறு எந்த வேட் பாளருக்கும் பயன்படாமல் வீணாகி விடுகிறது. மேலும் இந்த முறையைக் கையாள மூன்று இடங்களையாவது கொண்ட பெரிய தொகுதியாக இருக்க வேண்டியது அவசியமாகிறது.

c) இரண்டாம் வாக்குமுறை (The Second Ballot System)

சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க உதவும் இன்னொருமுறை இரண்டாம் வாக்கு முறையாகும். ஒரே இடத் திற்கு இரண்டு வேட்பாளர்கள் போட்டியிடும்பொழுது சாதா ரணப் பெரும்பான்மை வாக்குகள் பெற்றவர் வெற்றி பெறுகிறார். ஆனால் இரண்டுக்கும் மேற்பட்ட வேட்பாளர்கள் போட்டி யிட்டால் வெற்றி பெறுகின்ற வேட்பாளர் முழுப் பெரும்பான்மை பெற்றிருப்பார் என்று கூறுவதற்கில்லை. உதாரணமாக, ஒரு தொகுதியில் A B C என்னும் மூன்று வேட்பாளர்கள் போட்டி யிட்டால் Aக்கு 10,000 வாக்குகளும் Bக்கு 8,000 வாக்குகளும் C க்கு 6,000 வாக்குகளும் கிடைத்ததாக வைத்துக் கொள்வோம். இவர்களில் A வேட்பாளர் B, C ஆகியவர்களைக் காட்டிலும் கூடுதல் வாக்குகளைப் பெற்றிருப்பதால் A வெற்றி பெறுகிறார். ஆனால் Bயும் Cயும்சேர்ந்து Aயை விட 4,000 வாக்குகள் அதிகப்படியாகப் பெற்றிருக்கின்றனர். எனவே, வெற்றி பெறும் A சிறுபான்மையான வாக்காளர்களின் பிரதிநிதியாகவே விளங்குகிறார். இந்த பெரும் குறையைப் போக்க உதவும் முறையே இரண்டாம் வாக்குமுறையாகும்.

இரண்டாம் வாக்கு முறை அவசியப்பட்டால் இரண்டாவது முறையாக புதிய வாக்கெடுப்பை உருவாக்குகிறது. ஆனால் எல்லா வேட்பாளர்களும் இரண்டாம் முறையாகப் போட்டியிடுவதில்லை. மிகக் குறைந்த வாக்குகளைப் பெற்றவர் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்படார். அதாவது மேற் சொன்ன உதாரணத்தில் C வேட்பாளர் A ஐயும் Bஐயும் விட மிகக் குறைவாக வாக்குகள் வாங்கியவர். எனவே Cஐத் தள்ளிவிட்டு Aக்கும் Bக்கும் மட்டும் போட்டி நடத்தப்படுகிறது. அதாவது Cக்கு வாக்களித்தவர் இப்பொழுது A க்காவது அல்லது B க்காவது வாக்களிப்பார் என்னும் கருத்தின் அடிப்படையில் இந்தப் போட்டி நடத்தப்படுகிறது. இந்தப் போட்டியில் யார் பெரும்பான்மையான வாக்குகள் பெறுகின்றனரோ அவர்தான் தேர்ந்தெடுக்கப் பட்டதாகக் கருதப்படுகிறார். ஒரு வேளை இந்த முறை தேர்தலில் வேட்பாளர் B வேட்பாளர் Aஐ விடக் கூடுதல் வாக்குகளைப் பெற்று வெற்றி பெறலாம். மூன்றுக்கும் மேற்பட்ட வேட்பாளர் போட்டியிட்டால் இரண்டிற்கும் மேற்பட்ட தடவை தேர்தல் நடத்த வேண்டியதிருக்கும். இம்முறை ஓர் அங்கத்தினர் தொகுதியில் மட்டும்தான் நடத்த முடியும். விகிதாசாரப் பிரதிநிதித்துவம் பெற இம்முறை பொருந்தாது.

d) விருப்ப வாக்கு முறை:- (The Alternative vote system) இரண்டாம் வாக்களிப்பு முறையிலுள்ள குறைகளை நீக்குவதற்காகத் தோன்றிய முறையே விருப்ப வாக்கு முறையாகும். இந்த முறையின் கீழ் ஒரே ஒரு தடவைதான் தேர்தல் நடைபெறுகிறது. ஆனால் ஒவ்வொரு வாக்காளரும் தன்னுடைய விருப்பப்படி முதலில் யாருக்கு இரண்டாவது யாருக்கு என்று தன்னுடைய வாக்கினைப் பதிவு செய்து கொள்ள முடிகிறது. உதாரணமாக, ஒருவன் தன்னுடைய வாக்கினை முதலாவது C வேட்பாளருக்கும் இரண்டாவது A வேட்பாளருக்கும் மூன்றாவது B வேட்பாளருக்கும் கொடுக்க விரும்பலாம். முதலாவது முதல் விருப்ப வாக்குகள் எல்லாம் எண்ணப்படுகின்றன. முதல் விருப்பவாக்குகள் எண்ணும் பொழுது முழு பெரும்பான்மை கிடைத்தவர் வெற்றி பெறுகின்றார். ஒருவருக்கும் முழுப் பெரும்பான்மை கிடைக்காவிட்டால் உள்ளதில் மிகக் குறைவான எண்ணிக்கை வாக்குகளைப் பெற்ற வேட்பாளரை நீக்கிவிட்டு அவருடைய வாக்குகள் வாக்காளர்கள் பதிவு செய்துள்ள இரண்டாவது விருப்பப்படி மற்ற வேட்பாளர்களுக்குப் பகிரப் படுகிறது. இவ்வாறு செய்த பிறகு யாருக்கு முழுப் பெரும் பான்மை கிடைக்கிறதோ அவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாகக் கருதப்படுகிறார். ஒரு வேளை அதற்குப் பிறகும் யாருக்கும் முழுப்

பெரும்பான்மை கிடைக்காவிட்டால் அடுத்து கடைசியில் உள்ள வேட்பாளர் நீக்கப்பட்டு அவருடைய இரண்டாம் விருப்ப வாக்குகள் மற்ற வேட்பாளர்களுக்குப் பகிரப்படுகின்றன. எந்த வேட்பாளருக்கு முழுப் பெரும்பான்மை கிடைக்கிறதோ அவர் வெற்றி பெற்றவராகக் கருதப்படுகிறார்.

இந்த முறையை ஓர் அங்கத்தினர் தொகுதியில் மட்டும் தான் அமல் படுத்த முடிகிறது. விகிதாசாரப் பிரதிநிதித்துவம் பெற இம் முறை உதவுவதில்லை. மேலும், இம்முறையில் ஒரு சில சிறு பான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்காமல் போகவும் வழி இருக்கின்றது.

(e) சாதிமத பிரதிநிதித்துவம் (Communal Representation) சாதிமத பிரதிநிதித்துவத்திற்கு இந்தியாவே பிறப்பிடம். இம் முறையின்கீழ் கட்சிகள் அரசியல், பொருளாதார பிரச்னைகளின் அடிப்படையில் தோன்றுவதற்குப் பதிலாக சாதிமத வேறுபாடு களின் அடிப்படையில் தோன்றின. ஆங்கிலேய ஆட்சியின் போது இந்தியாவில் ஒவ்வொரு மதச்சமுதாயமும் ஒரு தனிப் பட்ட பிரதிநிதித்துவத்தைப் பெற்றிருந்தது. இரண்டு வழிகளில் இந்த பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருந்தது. முதலாவது, வாக்காளர்கள் சமுதாய வாரியாகப் பிரிக்கப்பட்டுத் தம்தம் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுத்தனர். உதாரணமாக, இந்து வாக்காளர் இந்து வேட்பாளரையும், முஸ்லீம் வாக்காளர் முஸ்லீம் வேட்பாளரையும் தேர்ந்தெடுத்தனர். இவ்வாறு ஒவ்வொரு சமுதாயத்தினரும் அவரவர் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனர்.

இரண்டாவது முறையாக, இணைவாக்காளர் (Joint Electorate) முறைப்படி தாழ்த்தப்பட்டோர் போன்றவர்களுக்கு தனிப்பட்ட முறையில் இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. அதாவது ஒரு வாக்காளர் தன்னுடைய சமுதாயத்தைச் சேராதவருக்கும் வாக்களிக்கக் கூடும், ஆனால் இடங்கள் ஒதுக்கப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த வேட்பாளரைத் தேர்ந்தெடுப்பதில் வேறு ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர் அதிக வாக்குகள் பெற்றாலும் ஒதுக்கப்பட்ட சமுதாயத்தைச் சேர்த்த வேட்பாளர்களுள் யாருக்கு அதிக வாக்குகள் கிடைத்ததோ அவரே வெற்றி பெற்ற தாகக் கருதப்படுகிறார்.

சாதிமத வேறுபாடுகளின் அடிப்படையில் மக்களைக் கட்சி களாகப் பிரிப்பது தேசீய ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டிற்கும் தீங்கு விளைவிப்பதாகும். இடங்கள் ஒதுக்கப்படாத சமுதாய

கூட்டங்களெல்லாம் இத்தகைய தனிப்பட்ட சலுகைகளுக்காகப் போராடலாம். எனவேதான் இந்தியக் குடியரசில் அதாவது, சுதந்திர இந்தியாவில் சாதிமத பிரதிநிதித்துவம் அடியோடு ஒழிக்கப்பட்டு விட்டது. ஆனால், ஆங்கிலேய ஆட்சியின் சின்னமாக அவர்கள் விட்டுச்சென்ற சில தீய சக்திகள் இன்னும் பல ரூபத்தில் இந்திய ஒற்றுமையைச் சீர்குலைத்துக் கொண்டிருக்கின்றன என்றே கூறவேண்டும்.

(f) பூகோளப் பிரதிநிதித்துவமும் தொழில் பிரதிநிதித்துவமும் (Geographical Representation Vs. Vocational Representation): பொதுவாக பிரதிநிதித்துவம் பூகோள ரீதியில் அளிக்கப்படுகிறது. அதாவது ஒரு தொகுதி, எல்லை வாரியாக நிர்ணயிக்கப்பட்டு அந்தத் தொகுதியின் எல்லைக்குள் வாழ்கின்ற வாக்காளர்கள் தங்களுடைய பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கின்றனர். ஆனால், இத்தகைய பூகோளப் பிரதிநிதித்துவம் ஜனநாயகத்திற்கு எதிரான முறையாகக் கருதப்படுகிறது. பூகோள ரீதியில் பல தொகுதிகளிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் உண்மையான பிரதிநிதிகளாகமாட்டார்கள் என்று கூறப்படுகிறது. பூகோள ரீதியில் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் ஒரு தொகுதியிலுள்ள பல்வேறுபட்ட விருப்புகளையும் பிரதிநிதித்துவப்படுத்த முடியாது என்று கருதப்படுகிறது. ஒரு தொகுதியில் வாழ்கின்ற மக்கள் பொதுவாகக் கொண்டிருக்கும் அதே விருப்பைத் தம்முடைய விருப்பாகக் கொண்டவர் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் அந்த மக்களின் உண்மையான விருப்பை நல்ல முறையில் பிரதிநிதித்துவப்படுத்த முடியும் என்று நம்பப்படுகிறது. எனவே, பூகோள ரீதியில் ஏற்படுத்தும் பிரதிநிதித்துவத்தைவிடத் தொழில் அடிப்படையில் ஏற்படுத்தும் பிரதிநிதித்துவமே சிறந்ததாகத் தோன்றுகிறது.

ஆரம்பத்தில் தேர்தல் முறைச் சீர்திருத்தத்தின் போது பூகோளப் பிரதிநிதித்துவத்தில் விகிதாசாரப் பிரதிநிதித்துவத்திற்கு இடம் அளிக்கப்பட்டது. ஆனால், விரைவில் விகிதாசாரப் பிரதிநிதித்துவம் அரசியல் கட்சிகளாக உருவெடுத்த சிறுபான்மையினருக்கே பிரதிநிதித்துவம் அளிக்கும் ஒரு முறையாகச் செயல்பட்டது என்னும் உண்மை உணரப்பட்டுவிட்டது. விகிதாசாரப் பிரதிநிதித்துவமுறை தொழில் துறையிலும், பொருளாதாரத் துறையிலும், சமூகத்துறையிலும் வெவ்வேறு விருப்பங்கள் கொண்ட பெரிய கூட்டத்தினருக்கு முறைப்படி பிரதிநிதித்துவம் அளிக்கத் தவறிவிட்டது. இப்படிப்பட்ட தனிப்பட்ட விருப்பங்கள்

யாவும் சட்டமன்றத்தில் முறைப்படியாக பிரதிநிதித்துவம் பெறவேண்டிய அத்தியாவசியமும் ஏற்பட்டது. உண்மையான பிரதிநிதித்துவம் ஏற்பட வேண்டுமானல் ஒரேவிதமான விருப்பினைப் பெற்றிருப்பவர்களை அதே விருப்பினைப் பெற்ற ஒருவன்தான் பிரதிநிதித்துவம் செய்யவேண்டும். அதாவது, செருப்பு தைப்பவர்களைப் பிரதிநிதித்துவம் செய்ய அதே தொழிலைச் செய்கின்ற ஒரு வேட்பாளரையே பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்பதாகும்.

பதினெட்டாம் நூற்றுண்டில் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த மீராபு, சீயஸ் போன்றவர்கள் சட்ட மன்றத்தில் பல தரப்பட்ட விருப்பங்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படல் வேண்டும் என்று கூறினர்கள். டக்யூய்ட் என்பவர் தொழிற்சாலை, உடைமை, வர்த்தகம், உற்பத்தியாளர், அறிவியல், சமயம் போன்ற எல்லாத் துறையைச் சார்ந்த விருப்பங்களுக்கும் சட்ட மன்றத்தில் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டிய அவசியத்தை உணர்த்தியுள்ளனர். மேலும், கேல் என்பவர் எத்தனை தனிப் பட்ட செயல்கள் ஆற்ற வேண்டியதிருக்கிறதோ அதற்கேற்பத் தனித்தனியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளும் இருக்க வேண்டும் என்று கூறி தொழில் ரீதியில் அளிக்க வேண்டிய பிரதிநிதித்துவத்தின் அவசியத்தை விளக்கியுள்ளார். சோவியத் ருஷ்யாவில் தொழில் வாரிய பிரதிநிதித்துவம் சோவியத் முறையின் மூலம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அங்குப் பூகோள ரீதியிலான பிரதிநிதித்துவமும் தொழில் வாரிய பிரதிநிதித்துவமும் அமல்படுத்தப்பட்டுள்ளன. சோவியத் ருஷ்யாவில் பிரதிநிதிகள் தொகுதிகளைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்குப் பதிலாகத் தொழில் விருப்புக்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறுர்கள்.

தொழில் வாரியப் பிரதிநிதித்துவ முறையில் பல குறை பாடுகள் உள்ளன. எனவேதான் தொழில் வாரியப் பிரதிநிதித் துவத்திற்குப் பதிலாக இன்னும் பூகோள ரீதியில் அமைந்த பிரதி நிதித்துவ முறை அனேக நாடுகளில் அமலில் இருந்துவருகிறது. தொழில் வாரியப் பிரதிநிதித்துவ முறையில் கீழ்க்காணும் குறைகள் இருப்பதாக அறியப்படுகிறது.

a) எஸ்மீன், லாஸ்கி முதலியவர்கள் தொழில் வாரிய பிரதி நிதித்துவ முறை பெரும் குழப்பம் ஏற்படுத்தும் ஒரு முறையாக உள்ளது என்கின்றனர்.

b) தொழில் வாரியப் பிரதிநிதித்துவ முறையில் பிரதிநிதி கள் தொழில் விருப்பங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதனுல் தேசிய விருப்புகள் புறக்கணிக்கப்பட்டு விடுகின்றன.

c) தொழில் சார்ந்த மக்கள் கூட்டங்கள் பிரதிநிதித்துவம் பெறுங்கால் சிறுபான்மையினருக்குப் போதுமான பிரதிநிதித்துவம் அளிக்க முடியாமல் போய்விடுகிறது.

d) ஒரு தொழிலில் இருந்து வேறு ஒரு தொழிலுக்கு மாறி விடுகின்ற தொழிலாளிகளுக்கும் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு ஏதுவான ஒரு சிறந்த முறை இல்லை.

e) பல தொழில் விருப்பங்களுக்கும் தனித்தனி பிரதிநிதித்துவம் அளித்தால் பலதரப்பட்ட கட்சிகள் தோன்றி, முடிவில் நிலையான அரசாங்கம் தோன்ற முடியாமலாகிவிடுகிறது.

# 7. அரசியல் கட்சி முறை
## (Party System)

**1.** அரசியல் கட்சிகளின் முக்கியத்துவமும் பணிகளும் (The Importance and Functions of Political Parties)

இன்றைய உலகில் ஏகதேசம் எல்லா நாடுகளிலுமே அரசியல் கட்சிகள் தோன்றியுள்ளன. நாளுக்கு நாள் அவைகளின் செல்வாக்கும் முக்கியத்துவமும் அதிகரித்துக்கொண்டே போகின்றன. பாராளுமன்ற அரசியல் முறையின்கீழ் பெரும்பான்மை பெற்ற அரசியல் கட்சிதான் அரசாங்கத்தை அமைக்கிறது. அரசியல் கட்சிகளில்லாதவிடத்து எந்த ஓர் அரசாங்க முறையும் இன்றைய நிலையில் சாத்தியமாகாது என்றே தோன்றுகிறது. அரசியல் கட்சிகள் ஆற்றும் பணிகளைக் கீழ்க்காணுமாறு விளக்கலாம்.

அரசில் வாழ்கின்ற மக்கள் பல்வேறுபட்ட அரசியல் பொருளாதாரக் கருத்துகளைக் கொண்டுள்ளனர். ஒரே வகையான கருத்துகளைக் கொண்ட மக்கள் ஒரு கட்சியின் கீழ்க் கூடவும், தங்களுடைய கருத்துகளைப் பரப்பவும், அரசாங்கத்தை அமைக்கவும் அரசியல் கட்சிகள் உதவுகின்றன.

சிக்கலான அரசாங்க நடைமுறைகளையும் நுணுக்கம் வாய்ந்த அரசியல் அமைப்புச் சட்டங்களையும் சாதாரண மனிதனுக்கு விளக்கிக் கூறும் கருவியாக அரசியல் கட்சிகள் செயல்படுகின்றன.

முக்கியமாகப் பாராளுமன்றமுறை நடைமுறையில் உள்ள இந்தியா, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் பெரும்பான்மை பெற்ற கட்சி அரசாங்கத்தை அமைக்க முடிகிறது. அதனால் மக்களுடைய, அதாவது பெரும்பான்மை மக்களுடைய விருப்பத்தை அனுசரித்து அரசாங்கத்தை ஏற்படுத்த அரசியல் கட்சிகள் துணைபுரிகின்றன.

கட்சிமுறை உள்ள நாடுகளில் ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி என கட்சிகளை இருவகைப்படுத்தலாம். ஆளுங்கட்சி அரசாங்கத்தை அமைத்து ஆட்சியை நடத்தும்பொழுது அரசாங்கத்தின்

குறைபாடுகளை மக்களுக்கு எடுத்துக் கூறி ஆளுகின்ற கட்சியை நேர்பாதையில் செல்லத்தூண்டுவதாக எதிர்க்கட்சி செயல்படுகிறது. அரசாங்கத்தின் வல்லாட்சிப் போக்கைத் தடுத்து நிறுத்தத் திறமை வாய்ந்த எதிர்க்கட்சி ஒன்றே போதும்.

தேர்தல்களில் கட்சிகள் தீவிரப்பங்கு வகிக்கின்றன. மக்களுக்கு கொள்கையின் தாரதம்மியங்களை எடுத்துக் கூறி நன்மை, தீமைகளை விளக்குகின்றன. எனவே, எந்தக் கொள்கையையுடைய எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தால் தங்களுக்கு அதிக நன்மை ஏற்படும் என்பதை மக்கள் தெரிந்து கொள்கின்றனர்.

தற்காலத்தில் அதிக செலவின்றித் தேர்தலில் வெற்றி பெறுவது மிகக்கடினம். அதனால் பணம் முடக்க சக்தியில்லாத எத்தனையோ தரமிக்க வேட்பாளர்கள் கூடத் தேர்தலில் போட்டியிடமுடியாது போய்விடுகிறது. ஆனால், கட்சிகள் இக்குறையைப் போக்குகின்றன. தேவையான பணத்தைக் கட்சிகள் செலவு செய்யத் தயாராக இருப்பதால் தரமான வேட்பாளர் தயக்கமின்றிப் போட்டியிட்டு வெற்றிபெறவும் முடிகிறது.

மக்களுடைய உரிமைகளைப் பாதுகாக்கவும், சிறுபான்மையினருடைய நலன்களையும், அவர்களுடைய தனித்தன்மையையும் பாதுகாத்துக் கொள்ளவும் அரசியல் கட்சிகள் போராடுகின்றன.

மேலும், அரசியல் கட்சிகள் மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றன. மக்களுடைய உரிமைகளுக்கு அரசியல் அமைப்பு ரீதியாக எவ்வளவு பாதுகாப்பு அளிக்கப்பட்டிருந்தாலும் கூட மக்கள் விழிப்புணர்வுடன் இல்லாவிட்டால் அரசாங்கம் அவைகளை அபகரிக்கவோ, நிராகரிக்கவோ தயங்கவே தயங்காது.

## 2. அரசியல் கட்சிகளால் ஏற்படும் சில தீமைகள் (Evils of Political Parties)

அரசியல் கட்சிகள் ஆற்றும் பணிகளைப்பற்றிக் கூறும் பொழுது அவைகளால் ஏற்படும் நன்மைகளும் ஆராயப் பட்டுள்ளன. எவ்வளவுதான் நன்மைகளை அரசியல் கட்சிகள் தோற்றுவித்தாலும்கூட அவைகளால் ஏற்படும் தீமைகளும் ஏராளம் உண்டு.

அரசியல் கட்சிகள் மக்களிடத்தில் பிளவுகளை ஏற்படுத்தி கசப்புத் தன்மையை வளர்த்துவிடுகின்றன. கட்சிக்காக

வெவ்வேறு கூட்டங்களாக மக்கள் பிரிந்துவிடுவதால் வீண் சண்டைச் சச்சரவுகள் ஏற்பட்டுவிடுகின்றன.

சந்தர்ப்பவாதிகளும் அரசியல் தலைவர்களும் கட்சிகளைப் பயன்படுத்தித் தங்களுடைய சொந்த நலன்களைப் பெருக்கிக் கொள்கின்றனர்.

பாமர மக்களிடம் தவரான கருத்துகளைப் பிரசாரம் செய்து பொய்யான வாக்குறுதிகளின்மூலம் அவர்களுடைய வாக்குகளைப் பெற்று முடிவில் அவர்களை ஏமாற்றிவிடுகின்றன கட்சிகள்.

கட்சிகள் ஆட்சியைக் கைப்பற்றுவதால் கட்சி ஆதரவாளர்களுக்கும் கட்சிக்கு வேண்டியவர்களுக்கும் அரசாங்கம் ஒருசில சலுகைகள் காட்ட வேண்டியதாயுள்ளது. முக்கியமாக, ஆட்சித் துறையின் பல பதவிகளுக்கும் நியமனம் செய்வதில் திறமையானவர்களை மட்டும் பொறுக்கி எடுப்பதற்குக் கட்சி முறை தடையாக உள்ளது.

எதிர்க்கட்சிகள் ஆளுங்கட்சியைப் பதவியிலிருந்து நீக்கி விட்டால் தாம் ஆட்சியைக் கைப்பற்றிவிடலாம் என்பதற்காகவே அரசாங்கத்தைக் குறைகூற முற்படுவதால் மக்களுடைய உண்மையான விருப்பங்களுக்குச் சரியான பிரதிநிதித்துவம் அளிக்க முடியாமல் போய்விடுகிறது.

மேலும், அரசியல் கட்சிகள் அரசாங்கத்தை அமைக்க முடிவதால் அரசாங்கத்தைத் தங்களுடைய ஏகபோக சொத்தாகக் கருதிக்கொண்டு நீண்ட நாள் பதவியிலிருக்கத் தீய வழியில் முயற்சி செய்கின்றன.

### 3. கட்சி முறையின் வகைகள் (Kinds of Party Systems)

உலக நாடுகளிலுள்ள கட்சிகளை மூன்று வகைகளாகக் கூறலாம். ஒருகட்சி முறை, இருகட்சி முறை, பலகட்சி முறை என மூன்று வகைக் கட்சி முறைகள் உள்ளன. ஒவ்வொன்றின் தன்மை, நன்மை, தீமைகளை இங்கு ஆராயலாம்.

(i) ஒருகட்சி முறை (Single Party System): ஒரு நாட்டின் அரசியல் களத்தில் ஒரு கட்சி மட்டுமே இடம் பெற்றிருந்தால் அதற்கு ஒருகட்சிமுறை என்று பெயர். பொதுவுடமை நாடுகளிலெல்லாம் ஒரு கட்சியே இடம் பெற்றுள்ளமையால் அங்குள்ள அரசியல் கட்சிமுறைக்கு ஒருகட்சிமுறை என்று பெயரிடப்

பட்டுள்ளது. பொதுவுடமை நாடுகளில் பொதுவுடமைக் கட்சியைத் தவிர வேறு எந்த ஒரு கட்சியும் அரசியல் களத்தில் இயங்க முடியாது. மாற்றுக் கருத்துக்களுக்கோ எதிர்க்கட்சிகளுக்கோ இடமே கிடையாது. எனவேதான், பொதுவுடமை நாடுகளில் சர்வாதிகார ஆட்சி நடை பெறுவதாகக் கூறப்படுகிறது. இத்தாலியில் முசொலினியும், ஜெர்மனியில் ஹிட்லரும் ஒரு கட்சி முறையின் காரணமாக சர்வாதிகரிகளாயினர் என்பதை வரலாறு வாயிலாக அறிந்துகொள்ளலாம். ருஷ்யா போன்ற நாடுகளில் பொதுவுடமைக் கட்சி அரசியல் அமைப்பால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு கட்சியாகச் செயல்பட்டு வருகிறது.

(ii) இருகட்சி முறை (Two Party System): ஒரு நாட்டின் அரசியல் களத்தில் இரு கட்சிகள் மட்டும் செயல்பட்டால் அதற்கு இருகட்சி முறை என்று பெயர். ஆங்கிலேய நாட்டிலும் அமெரிக்காவிலும் இருகட்சி முறை அமலில் உள்ளது. இந்த நாடுகளில் சிறிய கட்சிகள் ஒரு சில இருந்தாலும் ஆட்சியைக் கைப்பற்றும் அளவிற்கு பெரிய கட்சிகளாக இரண்டு கட்சிகள் மட்டுமே இயங்கி வருகின்றன. இங்கிலாந்தில் கன்சர்வேட்டிவ் கட்சியும் தொழில் கட்சியும் இன்று மாபெரும் கட்சிகளாக உள்ளன. ஒன்று ஆட்சியைக் கைப்பற்றும்பொழுது மற்றொன்று எதிர்க் கட்சியாகப் பணிபுரிகிறது. பொதுத்தேர்தலில் அதிக வாக்குகளைப் பெற்று வெற்றி பெறும் கட்சி ஆளுங்கட்சியாகவும் சிறுபான்மை பெற்றகட்சி எதிர்கட்சியாகவும் செயல்படுகின்றன. அமெரிக்காவில் ஜனநாயகக் கட்சியும் குடியரசுக் கட்சியும் இரு பெருங் கட்சிகளாக இயங்குகின்றன.

**நன்மைகள்**

a) இருகட்சி முறை பாராளுமன்ற அரசாங்கம் வெற்றி பெற இன்றியமையாதது. இருகட்சி முறை நிலையான அரசாங்கத்தை ஏற்படுத்துவதோடு முடிவுவரை ஒரே சீரான கொள்கையுடைய கட்சியின் ஆட்சியை நிலைக்கச்செய்கிறது.

b) இருகட்சி முறையின்கீழ் ஆட்சி அமைக்கும் கட்சி அதிக பலமுடையதாக இருக்குமாதலால் எதிர்க்கட்சிகளின் எதிர்ப்புகளையும் குறை கூறுதல்களையும் எளிதாகச் சமாளித்து விட முடிகிறது.

c) இருகட்சி முறையின்கீழ் எதிர்க்கட்சி அதிக பொறுப்புடையதாக நடந்து கொள்கிறது. இன்று எதிர்க்கட்சியாக இருக்கும் ஒரு கட்சி நாளை ஆளுங்கட்சியாக வரக்கூடும் என்னும்

நம்பிக்கை இருப்பதால் எதிர்க்கட்சி பயனுள்ள வகையில் ஏனோ தானோ என்றில்லாமல் அரசாங்கத்தின் கொள்கைகளையும் திறனாய்வு செய்கின்றது. மேலும், இப்படிப்பட்ட எதிர்க் கட்சியின் குறை கூறுதலை ஆளுங்கட்சியும் மதித்து செயல்படுகிறது.

d) இருகட்சி முறையில் மக்கள் இரு கட்சிகளுக்கு இடையே தான் தங்களுடைய வேட்பாளர்களைத் தேர்வு செய்யவேண்டி யிருப்பதால் எந்த ஒரு குழப்பமும் ஏற்படாமல் அவர்கள் தங்களுடைய வாக்குகளைக் குறிப்பிட்ட கட்சிக்கு அளிக்க முடிகிறது.

e) இருகட்சி முறையின் கீழ்த் தேசியத் கொள்கையின் தோல்விக்குக் காரணமாக எந்தக் கட்சி செயல்பட்டது என்பதை அறிந்து அந்தக் கட்சியின் மீது குற்றம் சுமத்த முடிகிறது. அதனால், கட்சிகள் கூடுதல் பொறுப்புடையவைகளாக நடந்து கொள்கின்றன.

தீமைகள்

a) இருகட்சி முறை நாட்டை இரண்டு கூறுகளாகப் பிரித்து விடுகின்றது. தற்கால மக்கள் பல்வேறு கருத்துகள் கொண் டுள்ளனர். ஆனால், இருகட்சி முறை மக்களுக்கு இரண்டு கருத் துகள்தான் இருக்க முடியும் என்னும் குறுகிய நோக்கின் அடிப் படையில் இயங்குகிறது.

b) இருகட்சி முறையானது பாராளுமன்ற முறையில் சட்ட மன்றத்தின் மதிப்பைக் குறைத்து அமைச்சர் குழுவின் சர்வாதி காரப் போக்கை ஏற்படுத்திவிடுகிறது.

c) மேலும், இருகட்சி முறை பெரும்பான்மைக் கட்சியின் வல்லாட்சியைத் தோற்றுவிக்கிறது. அதனால், சில வேளை பெரும் பான்மைக் கட்சி சிறுபான்மையினரின் நலன்களைப் புறக்கணித்து விட நேரிடுகிறது.

**(iii)** பலகட்சி முறை (Multi Party System): ஒரு நாட்டின் அரசியல் களத்தில் பல கட்சிகள் செயல்படுமானால் அந்த அரசியல் கட்சி முறைக்குப் பலகட்சி முறை என்று பெயரிடப் படுகிறது. பலகட்சி முறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக ஃபிரான்சையும் அதன்பிறகு இந்தியாவையும் கூறுவது இயற்கை. ஆனால், பொதுவாக ஐரோப்பாவிலுள்ள மக்களாட்சி நாடுகளில் இம் முறை பரவலாக உள்ளது.

**நன்மைகள்**

a) பலகட்சி முறையின் கீழ்ப் பல கட்சிகள் உள்ளமையால் மக்களுடைய எல்லா வகைக் கருத்துகளுக்கும் தகுந்த பிரதிநிதித்துவம் அளிக்கப்படுகிறது.

b) இருகட்சி முறையில் தோன்றுகிற அமைச்சர் குழுவின் சர்வாதிகாரத்திற்கு பலகட்சி முறையில் இடமில்லை. கூட்டு அமைச்சகங்கள் ஏற்பட வாய்ப்புள்ளமையால் ஒரே அமைச்சகம் நீண்டநாள் பதவியிலிருந்து சர்வாதிகாரியாக மாற வேண்டிய சூழ்நிலை ஏற்படுவதில்லை.

c) பலகட்சி முறையில் கூட்டு அரசாங்கம் சட்டமன்றத்திற்கு அஞ்சிச் செயல்படுவதால் சிறுபான்மையினருக்கும் தகுந்த மரியாதையும் மதிப்பும் அளிக்கப்படுகிறது. பெரும்பான்மை பெற்ற கட்சிகளானாலும், சிறுபான்மையினருக்குத் தகுந்த மதிப்பு அளிக்கத் தவறுவதில்லை.

**தீமைகள்**

a) கொள்கைகளில் கருத்து வேறுபாடுகள் கொண்ட பல கட்சிகள் பதவிக்காக மட்டும் கூட்டு சேருவதால் அமைச்சர்களிடையே ஒற்றுமையோ ஒழுங்கோ இல்லாமலாகிவிடுகிறது.

b) பல்வேறு கருத்துக்களையுடையவர்கள் அரசாங்கத்தை அமைக்கும்பொழுது தங்களுடைய கொள்கைகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் தருகின்றவர்களாக நடந்து கொள்கின்றனர். தேசிய முக்கியத்துவம் வாய்ந்த அரசாங்கத்தின் கொள்கைகள் மீது எந்தவித அக்கறையும் காட்டுவதாயில்லை.

c) அரசாங்க நெருக்கடிகள் ஏற்பட்டு நிலையான அரசாங்கம் ஏற்பட வாய்ப்பில்லாமல் போய்விடுவது பலகட்சி முறையின் ஒரு பெருங்குறையாக உள்ளது.

d) எதிர்க்கட்சிகள், ஆட்சிக்கு வரவேண்டும் என்னும் ஒரே நோக்குடன் ஆளும் கட்சிகளை வீழ்த்தப் பாடுபடுகின்றன. அதனுல் அரசாங்கம் ஒரே சீரான கொள்கையைப் பின்பற்ற முடியாமல் போய்விடுகிறது.

e) அரசாங்கத்தின் தோல்விக்கு எந்த ஒரு கட்சியையும் தனிப்பட்ட முறையில் பொறுப்பாளியாக்க முடியாது போய்விடுகிறது.

f) மேலும், மக்களுடைய வாக்குகள் பல கட்சிகளிடையே சிதறிப் போவதால், முக்கியமான பிரச்சினைகளைப்பற்றிய மக்களுடைய கருத்து என்னவென்பதை தெரிந்துகொள்ள முடியாமல் போய்விடுகிறது.

# 8. தல சுய ஆட்சி
## (Local Self Government)

1. தல சுய ஆட்சியின் முக்கியத்துவம் (The Importance of Local Self Government)

தற்கால நன்னலம் கருதும் அரசுகளிலெல்லாம் தல சுய ஆட்சியின் அவசியமும், முக்கியத்துவமும் அதிக அளவில் உணரப்பட்டுள்ளது. அரசின் செயல்கள் யாவும் முன்னைவிட பன்மடங்கு அதிகரித்துவிட்டன. ஓர் அரசாங்கத்தால் எல்லா செயல்களையும் செய்ய முடியாது என்பதால் அந்தந்த இடங்களில் உள்ள காரியங்களைக் கவனிக்க ஆங்காங்கே நிருவாகக் கூறுகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பொதுவாக, மத்திய அரசாங்கம் தல வட்டாரங்களிலிருந்து வெகு தூரத்திற்கு அப்பால் அமைந்துள்ளமையால் தல வட்டார மக்களின் பிரச்சினைகளையும் தேவைகளையும் உணர்ந்து அதற்கேற்பச் செயல்பட முடியாது. ஆனால், தல வட்டாரங்களில் நிருவாகக் கூறுகள் ஏற்படுத்தப்படும்பொழுது தல வட்டாரங்களுக்கே உரித்தான பிரச்சினைகளை எளிதாகத் தீர்க்க முடிகிறது.

ஓர் அரசின் நிலப்பரப்பு பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பகுதியிலும் நிருவாகக் கூறு ஏற்படுத்தப்படுகிறது. உதாரணமாக, இந்தியாவில் நாடு பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு மாநிலமும் பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு நிருவாகம் நடைபெறுகிறது. இந்த முறையை தல சுய ஆட்சி எனலாம். ஆனால், தல சுய ஆட்சி என்பது தல வட்டாரங்களில் சுய ஆட்சி ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்பட்டு மக்களின் பிரதிநிதிகள் மூலமாக நடைபெறும் நிருவாக முறையை விளக்கும். உதாரணமாக, இந்தியாவில் கிராமப்புறங்களில் பஞ்சாயத்துக்களும், நகர்ப்புறங்களில் முனிசிப்பால்டி, கார்பரேஷன் போன்ற தலசுய ஆட்சி ஸ்தாபனங்களும் செயல்படுவதைக் கூறலாம்.

தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் நாட்டு குடிமக்களிடையே அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றன. நல்ல குடிமைப் பண்புகளை அவர்களிடையே வளர்க்கின்றன. நிருவாகத்தில் அதிகப்பங்குபெற மக்களுக்கு வாய்ப்பளிக்கின்றன. தல சுய ஆட்சியில் பங்கு பெறும் மக்களுக்கு ஏராளமான நிருவாக

அனுபவமும் அறிவும் கிடைக்கின்றன. இவ்வாறு கிடைக்கும் நிருவாக அறிவு அவர்களுக்குப் பிந்திய காலத்தில் கூடுதல் நிருவாகப் பொறுப்புகளை ஏற்று நடத்தப் பெரிதும் உதவுகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் பொது மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துவதாய் உள்ளன. மக்கள் விழிப்புணர்வுடன் இருந்தால்தான் சுதந்திரமாக வாழமுடியும்.

## 2. தலசுய ஆட்சியின் தன்மை (The Nature of Local Self Government)

தல சுய ஆட்சி நிருவாகம் ஒருசில சிறப்புத் தன்மைகளைப் பெற்று விளங்குகிறது. முதலாவதாக, தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் இறைமை பெற்றிருக்கவில்லை; மத்திய, மாநில அரசாங்கங்களுக்குக்கீழ்ச் செயல்படக் கூடியவைகள். இரண்டாவதாக, அவைகளுக்கென தனிப்பட்ட ஆதிக்க எல்லைகள் நிர்ணயிக்கப் பட்டுள்ளன. மூன்ருவதாக, தலசுய ஆட்சி ஸ்தாபனங்களை ஏற்படுத்தியுள்ள சட்டத்திற்குக்கீழ்ச் சுயமாக செயல்படும் தன்மை பெற்று விளங்குகிறது. நான்காவதாக, தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் தங்கள் ஆதிக்க எல்லைக்குள் வாழும் மக்களின் அன்ருட வாழ்கையுடன் சம்பந்தப்பட்டு விளங்குகின்றன.

## 3. தல சுய ஆட்சி ஸ்தாபன அமைப்பு (The Organisation of Local Self Government)

தல சுய ஆட்சி ஸ்தாபனங்களில் தல வட்டார மக்களே இடம் பெறுகின்றனர். அதாவது, இந்த ஸ்தாபனங்களில் அங்கத்தினர்கள் அந்தந்த தல வட்டாரங்களில் உள்ள மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். தல சுய ஆட்சி ஸ்தாபனங்களுக்கு நடைபெறும் தேர்தலில் கூடுதல் ஆர்வமுடைய நபர்கள் போட்டியிடுகின்றனர். மேலும், வயது வந்த வாக்காளர் வாக்குரிமை மூலம் தல சுய ஆட்சி நிருவாகத்தில் பங்கு பெறுகின்றனர். மக்களுடைய பிரதிநிதிகள் தல சுய ஆட்சி நிருவாகத்திற்கான கொள்கைகளையும் சட்ட திட்டங்களையும் உருவாக்குகின்றனர். இவர்கள் உருவாக்கும் சட்ட திட்டங்களை அமல்படுத்த அரசாங்கத்தால் நியமிக்கப்படும் அலுவலர் உள்ளனர். ஆனல், இந்த அரசாங்க அலுவலர்கள் சட்டத்திற்கு விரோதமாகச் செயல்படாதவாறு பார்த்துக் கொள்வதும் மக்களுடைய பிரதிநிதிகளின் கடமையே ஆகும்.

## 4. தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் ஆற்றும் கடமைகள் (Duties of Local Self Government)

தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் அந்தந்த தல வட்டாரங்களையும் அவைகளில் வாழும் மக்க

ளுடைய தேவைகளேயும் அடிப்படையாகக்கொண்டு அமைகின்றன. பொதுவாக, தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் ஆற்றும் கடமைகளைக் கட்டாயக் கடமைகள் என்றும் விருப்பக் கடமைகள் என்றும் இருவகைப்படுத்தலாம். கட்டாயக் கடமைகளை எல்லா தல சுய ஆட்சி ஸ்தாபனங்களும் கண்டிப்பாகச் செய்தே தீர வேண்டும். ஆனுல் விருப்பக் கடமைகளைப் பொறுத்த வரையில் வருமானம் அனுமதித்தால் மட்டுமே செய்கின்றன.

தல வட்டார மக்களின் சுகாதாரத்தைக் கவனித்தல், சாலைகள், பாலங்கள் அமைத்தல், குடிதண்ணீர் வசதி ஏற்படுத்தல், தீ அணைக்கும் பணி ஆகியவைகளைத் தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் செய்ய வேண்டிய காட்டாயப் பணிகளாகக் கூறலாம். சுகாதார வாசஸ்தலங்கள் ஏற்படுத்தல், பூங்கா தோட்டங்கள் அமைத்தல், நூல்நிலையங்கள் திறத்தல், காட்சி சாலைகள் நிறுவுதல் ஆகியவைகளைத் தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் செய்யும் விருப்பக் கடமைகளுக்கு உதாரணமாகக் கூறலாம்.

## 5. தல சுய ஆட்சி ஸ்தாபனங்களின் அதிகாரங்கள் (Powers of the Local Self Governing Institutions)

தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் மத்திய அல்லது மாநில சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தின் மூலம் நிறுவப்படுகின்றன. அவை தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பணிகளை ஆற்றுதற்குத் தேவையான அதிகாரத்தை அவைகள் ஏற்படுத்துகின்ற சட்டமே அளிக்கின்றது. அவைகளை ஏற்படுத்துகின்ற சட்ட வளைவுக்குள், தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் முழு சுதந்திரத்தையும் அனுபவிக்கின்றன. ஆனுல், அவைகளை உருவாக்கும் சட்டங்கள் யாவும் அரசியல் அமைப்பிற்கு உட்பட்டே இயற்றப்படுகின்றன.

எவ்வளவுதான் சுதந்திரமாகத் தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் செயல்பட முடிந்தாலும் அவைகள் இறுதியாக மாநில அரசாங்கத்திற்கும் மத்திய அரசாங்கத்திற்கும் கட்டுப்பட்டே செயல்படுகின்றன. ஆகவே, ஆட்பேர் உரிமையின் மூலமாகவேதான் தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் ஆட்சி செய்யும் அதிகாரத்தினைப் பெற்றுள்ளன என்னும் உண்மையை ஏற்றுக் கொள்ள வேண்டும். அதாவது, மத்திய அல்லது மாநில அரசாங்கம் தல சுய ஆட்சி ஸ்தாபனங்களுக்கு அதிகாரம் அளிக்குங்கால் எல்லா அதிகாரத்தையும் அவைகளுக்கு விட்டுக்கொடுத்து விடுவதில்லை. இறுதி அதிகாரத்தை அல்லது கட்டுப்பாட்டு அதிகாரத்தை தாமே வைத்துக் கொண்டு மற்றப்படி தேவையான அதிகாரத்தை

மட்டும் அவைகளுக்கு அளிக்கின்றன. இவ்வாறு தல சுய ஆட்சி ஸ்தாபனங்களுக்கு அதிகாரம் அளிக்கும் முறை நாட்டுக்கு நாடு மாறுபடுவதாய் உள்ளது.

**6.** தல சுய ஆட்சி வெற்றிபெற ஏதுவான காரியங்கள் (Conditions for the Successful Working of Local Self Government)

தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் வெற்றியாகச் செயல்பட ஒரு சில காரியங்கள் இன்றியமையாதவையாக உள்ளன. முதலாவதாக, தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் தங்களுடைய பணிகளைச் சரிவரச் செய்வதற்குத் தேவையான நிதி உதவிகளை மத்திய, மாநில அரசாங்கங்கள் தடையின்றிச் செய்யவேண்டும்.

இரண்டாவதாக, தல சுய ஆட்சி ஸ்தாபனங்களின் உள் நிருவாகச் செயல்களில் தலையிடாமல் அதே நேரத்தில் திறம் பட்ட கட்டுப்பாட்டையும் அரசாங்கம் மேற்கொண்டால் தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் திறமையாகச் செயல்பட முடியும்.

மூன்றாவதாக, மக்கள் அறநெறி உடையவர்களாகவும் தல ஆட்சிச் செயல்களில் அதிக ஆர்வம் உடையவர்களாவும் இருக்க வேண்டும். அதாவது, கடமையுணர்ச்சி மிகுந்தவர்களாகவும் பொதுநலன் மீது அக்கறை கொண்டவர்களாகவும் மக்கள் இருப்பார்களானால் அவர்கள் நிருவகிக்கும் தல சுய ஆட்சி ஸ்தாபனங்களும் நல்ல முறையில் செயல்பட முடியும்.

நான்காவதாக, தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் ஒழுங்காகச் செயல்பட பொதுக் கருத்து நல்ல முறையில் உருப்பெற வேண்டும். நன்கு திரண்ட பொதுக் கருத்தினைச் சந்திக்கப் பயப்படாத நிருவாகம் எதுவுமே கிடையாது. மக்கள் அரசியல் அறிவுடையவர்களாக இருந்தால் பொதுக்கருத்து சிறப்பாக அமையும். அப்பேற்பட்ட பொதுக்கருத்து உள்ள நாட்டில் தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் நேர்மையாகச் செயல்படும் என்பதில் எந்த வித சந்தேகமும் கிடையாது.

கடைசியாக, தல சுய ஆட்சி ஸ்தாபனங்களின் வெற்றி அதிகமும் வாக்காளர்களைப் பொறுத்தே அமைகிறது. வாக்காளர்கள் சிறந்த பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பார்களானல் நிச்சயமாக தல சுய ஆட்சி நிருவாகம் வெற்றியாகவே நடைபெறும். பணம், சாதி, மதம், மொழி ஆகியவைகளுக்குப் பணியாமல் தகுதிக்கே முக்கியத்துவம் தந்து வாக்காளர்கள் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பார்களானல் தல சுய ஆட்சி ஸ்தாபனங்கள் திறமையாகவும் சுறுசுறுப்பாகவும் பணியாற்றும் என்பது உறுதி.

# மேற்கோள் நூற்பட்டியல்
## (BIBLIOGRAPHY)


**Pool I des. (Ed.)** : Contemporary Political Science.

**Dicey, A. V.** : Introduction to the Law of the Constitution.

**Finer, Herman** : The Theory and Practice of Modern Government.

**Dabi, R.A.** : Modern Political Analysis.

**Garner, J.W.** : Political Science and Government.

**Gettell, R.G.** : Political Science.

**Scarro, M.A.** : Contemporary Political Analysis.

**Lipset, S.M.** : Political Man.

**Strauss, L.** : What is Political Philosophy.

**Raphael D.D.** : Problems of Political Philosophy.

**Dorothy M. Pickles** : Introduction to Politics.

**Joad, CEM.** : Modern Political Theory.

**Laski, H.J.** : A Grammar of Politics.

**Simon, Y.R.** : Philosophy of Democratic Governments.

**Whare, K C.** : Federal Government.

**Rodee Anderson and Christol** : An Introduction to Political Science.

# கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| அகில உலகச் சட்டம் | — | International Law |
| அகில உலக நிறுவனங்கள் | — | International Organisations |
| அடிப்படைச் சட்டம் | — | Fundamental Law |
| அதிகாரப் பிரிவினை | — | Separation of powers |
| அமைச்சகக் கூட்டுப் பொறுப்பு | — | Ministerial Collective Responsibility |
| அமெரிக்கப் பிரதிநிதிகள் சபை | — | American House of Representatives |
| அயராத விழிப்புணர்வு | — | Eternal Vigilence |
| அரசாங்கம் | — | Government |
| அரசியல் | — | Politics |
| அரசியல் அமைப்பு | — | Constitution |
| அரசியல் அமைப்பு நெருக்கடி | — | Constitutional Emergency |
| அரசியல் கட்சிகள் | — | Political Parties |
| அரசின் வழிகாட்டு நெறிகள் | — | Directive Principles of State Policy |
| அரசு | — | State |
| அவசரகால அதிகாரங்கள் | — | Emergency Powers |
| ஆங்கிலேய பிரபுக்கள் சபை | — | British House of Lords |
| ஆட்சித்துறை | — | Executive |
| ஆட்சித் துறைக் கட்டளைகள் | — | Executive Orders |
| ஆட்பேர் உரிமை | — | Delegation of Authority |
| ஆளுங் கட்சி | — | Ruling Party |
| இயற்கை உரிமைகள் | — | Natural Rights |
| இயற்கைப் பிரஜைகள் | — | Natural Citizens |
| இயற்கை மயமாக்கப்பட்ட பிரஜைகள் | — | Naturalised Citizens |
| உப சட்டங்கள் | — | By Laws |
| உரிமைகள் | — | Rights |
| உள்துறை அமைச்சகம் | — | Ministry of Home Affairs |
| உள்ளுறைந்த அதிகாரம் | — | Implied Powers |
| எதிர்க் கட்சி | — | Opposition Party |
| ஒத்திவைப்புப் பிரேரணை | — | Adjournment Motion |

| | | |
|---|---|---|
| கடமைகள் | — | Duties |
| கருத்தியலான சமூகம் | — | Utopian Society |
| கேள்வி நேரம் | — | Question Hour |
| குடியரசு தலைவர் உரை | — | President's Address |
| குழுஆட்சி | — | Oligarchy |
| குற்ற விசாரணை | — | Impeachment |
| கூட்டு அரசாங்கம் | — | Coalition Government |
| சங்கம் | — | Association |
| சட்டமன்றக் கூட்டத் தொடர் | — | Legislative Session |
| சட்டமன்றம் | — | Legislature |
| சட்டமன்ற மேன்மை | — | Legislative Supremacy |
| சமுதாயம் | — | Community |
| சமூக அறிவியல் | — | Social Science |
| சமூக நிலைகள் | — | Social Conditions |
| சமூகம் | — | Society |
| சீரியல் சமூகம் | — | Civil Society |
| தலசுய ஆட்சி ஸ்தாபனங்கள் | — | Local Self Governing Institutions |
| தேசம் | — | Nation |
| தேசிய நெருக்கடி | — | National Emergency |
| தேசியம் | — | Nationalism |
| நம்பிக்கையில்லாத் தீர்மானம் | — | No Confidence Motion |
| நன்னலம் கருதும் அரசு | — | Welfare State |
| நிதி நெருக்கடி | — | Financial Emergency |
| நீதித்துறை | — | Judiciary |
| நீதிப் புனராலோசனை அதிகாரம் | — | Judicial Review |
| நேரடி மக்களாட்சி | — | Direct Democracy |
| பணி காப்பு | — | Service Security |
| பாதுகாப்புப் பணி | — | Defence Service |
| பிரஜைகள் | — | Citizens |
| பொதுக் கருத்து | — | Public Opinion |
| பொது நலன் | — | Public Good |
| பொது நிருவாகம் | — | Public Administration |
| பொதுவுடைமை | — | Communism |
| வாக்காளர் | — | Electorate |
| வெளி விவகாரத் துறை | — | Ministry of External Affairs |
| ஜனநாயகம் | — | Democracy |

# தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

சென்னை – 600 031



தமிழில் பயில்பவர்க்குக் கல்லூரிப் பாடநூல்கள்

(Tamil Medium Books for Colleges)

1977 ஏப்ரல் முடிய 779 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன



மேலும் விரைவில் வெளிவருபவை

| | | | |
|---|---|---|---|
| பொறியியல் | — | 4 | நூல்கள் |
| மருத்துவவியல் | — | 1 | ,, |
| இயற்பியல் | — | 5 | ,, |
| வேதியியல் | — | 1 | ,, |
| விலங்கியல் | — | 2 | ,, |
| கணிதவியல் | — | 2 | ,, |
| வணிகவியல் | — | 3 | ,, |
| பொருளியல் | — | 2 | ,, |
| புவியியல் | — | 1 | ,, |
| வரலாற்றியல் | — | 9 | ,, |
| அளவையியல் | — | 1 | ,, |
| வானியல் | — | 1 | ,, |
| உளவியல் | — | 1 | ,, |
| புள்ளியியல் | — | 3 | ,, |
| கல்வியியல் | — | 2 | ,, |
| அரசியல் | — | 2 | ,, |
| கூட்டுறவியல் | — | 1 | ,, |

கிடைக்குமிடம்:

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனக் கிடங்கு

(கல்லூரிக் கல்வி இயக்குநர் அலுவலகச் சுற்றுக்குள்)

கல்லூரிச் சாலை, நுங்கம்பாக்கம்,

சென்னை – 600 006.

கல்லூரிப் பாடநூல்களுக்கு 20% கழிவு வழங்கப்படும்.